ஸ்ரீ:

# கோயிலொழுகு

## ஸ்ரீரங்கமஹாத்மியம் எனப்படும் ஸ்ரீரங்கம் கோயில் வரலாறு

(பகுதி 1 - பாகம் 2)

(எளியநடை தமிழ் விவரணத்துடன் கூடியது)



ஸத்யலோகத்தில் ப்ரஹ்மா ஸ்ரீரங்கநாதனை ஆராதித்தல்



ஸ்ரீரங்கநாச்சியார் நம்பெருமாள் சேர்த்தி பெரிய நம்பிகள்

பதிப்பாசிரியர் : ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ அ. கிருஷ்ணமாசார்யர்

ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமானுஜாய நம: ஸ்ரீமத் வரவரமுநயே நம:

# கோயிலொழுகு

## [ஸ்ரீரங்கமஹாத்மியம் எனப்படும் ஸ்ரீரங்கம்கோயில் வரலாறு]

(இரண்டு பாகங்கள்)

## (பகுதி 1 - பாகம் 2)

*(எளியநடை தமிழ் விவரணத்துடன் கூடியது)*

*பதிப்பாசிரியர்:*

**ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ அ.கிருஷ்ணமாசார்யர்**

*வெளியீடு:*

**ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ**

*214, கீழை உத்தர வீதி (விக்ரம சோழன் திருவீதி)*
*ஸ்ரீரங்கம், திருச்சி-620 006. ☎: 0431-2434398*

**25.3.2005**

(தாரண பங்குனி உத்தர நன்னாள்)

விலை ரூ.250/- தபாற் செலவு தனி

## ப$_4$ட்டர் வைப$_4$வம்

*49. அநந்தரம், ப$_4$ாஷ்யகாரர் நியமநத்தினாலே ப$_4$ட்டர் த$_3$ர்ஶநம் நிர்வஹிக்கிற காலத்திலே; உடையவர் நியமநத்தை அடியொற்றிக்கொண்டிருக்கிற பெருமாள், ப$_4$ட்டருக்குத் தம் வரிசைகளை ஸாதி$_3$த்து 'வேதா$_3$ந்திகளை ஜயித்து நம்*

---

49.1. பட்டரும் உலகம் முழுவதும் உய்யும்படி வடமொழி தென்மொழி மறைமுடிவுகளை வியாக்கியானித்துக் கொண்டு உபயவேதாந்தக் கருத்துக்களை பரப்பிக் கொண்டு வரும் நாளில் நம்பெருமாள் மிகவும் திருவுள்ளம் உவந்து 'ஆசார்ய ஆதிபத்யத்தில் உடையவர்க்குப் பட்டாபிஷேகமும் பட்டருக்கு யுவராஜபட்டாபிஷேகமும் செய்யுங்கள்' என்று அடியார் கட்கெல்லாம் அர்ச்சகமுகமாக ஆணையிடத் திருப்பரியட்டம் திருமாலை முதலிய வரிசைகளை அனுப்பியருள, நம்பெருமாள் நியமனத்தின்படி தொண்டர்கள் அனைவரும் கூடிப் பெருமகிழ்ச் சியுடன் இராமானுசரையும் பட்டரையும் ப்ரஹ்மரதத்தில் ஏற்றித் திருவரங்க நகர்வலம் வந்து திவ்ய சிங்காதனங்களில் எழுந் தருளப் பண்ணி, பல திவ்யதேசங்களிலிருந்து வருவித்த புண்ய தீர்த்தங்களைக் கொண்டு மந்திரபூர்வமாக அபிஷேகம் செய்வித்து, முன்பு திருவயோத்தி மக்கள் ஸ்ரீராமபிரானுக்கும் பரதாழ் வானுக்கும் பட்டாபிஷேகம் செய்வித்தது போல வெகு விமரிசை யாக எம்பெருமானார்க்கு ஆசார்ய ஆதிபத்யபட்டமும், பட்டர்க்கு இளவரசுபட்டமும் கட்டிக் களிப்புற்றனர்.

49.2. பிறகு எம்பெருமானார் திருமேனிதளர்ந்தவராய்த் பரமபதமடையத் திருவுள்ளமாகி அடியவரனைவரையும் அழைத்து பட்டரைக் காட்டிக்கொடுத்து 'இவரை நம்மைப் போலவே பார்த்துக்கொள்ளுங்கள்' என்று நியமித்தருளினார்.

(உடையவர் பெரியபெருமாள் ஸந்நிதியிலே கூடியிருந்த அனை வருக்கும் "நம்முடையாரடங்கலும் நம்மை நினைத்திருக்குமா போலே இவனை (பட்டரை) நினைத்திருங்கோள் என்று அருளிச் செய்தார்." என்று ஈடு 10.6.1 பாசுர வ்யாக்யானத்தில் நம்பிள்ளை குறிப்பிட்டுள்ளார்.

"இது பட்டர்தாமே அருளிச்செய்ய நான் (நஞ்சீயர்) கேட்டேன்" என்றருளிச் செய்தார். சேனை முதலியார் சட்டையும் மயிர்க்கட்டும் கையும் பிரம்புமாய் வந்து புகுரப்புக்கவாறே, நாய்ச்சிமாருந்தானுமாய் ஸ்வைரமாகவிருக்கிறவது (தன் விருப் பப்படி இருக்குமிருப்பு) தவிர்ந்து நாய்ச்சிமாரும் ஸிம்ஹாஸநத்தில் ஒருமுலைகளிலே ஒதுங்கத் தானும் ஸவிநயமாகவிருக்குமாய்த்து, வ்ருத்தஸாமந்தரைக் (வயது முதிர்ந்த சேனாபதிகளைக்) கண்ட ராஜாக்களைப்போலே, இவர்தாமும் "இவ்விருப்புக்குத் தண்ணீர்த் துரும்பாகவொண்ணாது" என்று ஜகந்நிர்வாஹத்துக்கு வேண்டு மவற்றைப் பாசுரப்பரப்பற விண்ணப்பஞ் செய்வராய்த்து. பிராட்டிமாரோடிருக்குமதிலும் இனிதாயிருக்குமிறே அவனுக்கு இவர்தம்மைக்கான; ப்ரியேண இறே. "இன்னானைப்ரஹ்மாவாக்க வேணும், இன்னானை மாற்றவேணும்" என்று வேண்டுமவற்றைச் சுருங்கவிண்ணப்பஞ்செய்வர்; "ஐயர் (இங்கே ஸ்ரீவிஷ்வக் ஸேனரைக் குறிக்கும்) யாதொன்று சொல்லிற்று அவையெல்லாமப் படியே" என்று கண்களாலே மேலெழுத்திட்டுக் கொடுக்கும் இவ்வார்த்தையருளிச்செய்தபோது கிடாம்பியாச்சானோடு அல்லா தாரோடு (பட்டருடைய சிஷ்யராய் அமையாதவர்களோடு) வாசியறக் குமிழிநீருண்டது; ஆச்சான்தான் பட்டர்க்கு ஸ்நேஹித் திருக்கும்போர. இளையாழ்வான் (கிடாம்பியாச்சானுடைய சிஷ்யன்), ஆச்சானை (கிடாம்பியாச்சான், பட்டரைவிட வயதிலே முத்தவர், இராமானுசருக்குத் திருமடைப்பள்ளி கைங்கர்யம் செய்து வந்தவர்) "பட்டர்தம்மை ஆஶ்ரயித்தவர்களிற் காட்டிலும் நீர்தாழ அநுவர்த்திப் பானென்?" (பட்டருடைய சிஷ்யர்கள் அவரிடம் வைத்திருக்கும்

தர்ஶநத்துக்கு ஆட்பண்ணும்' என்று நியமித்து, விடை ஸாதிக்க; வரிசையுடன் புறப்பட்டு, வேதாந்திகளை

• இதன் தொடர்ச்சியை 415ஆம் பக்கத்தில் காண்க

---

*ஜிப்பைவிட பன்மடங்கு அதிகமாக நீர் காட்டுவானேன்?) என்று கேட்க, "நீ அன்று கண்டிலைகாண், எம்பெருமானார் பட்டர் கையிலே புஸ்தகத்தைக் கொடுத்துத் திருமுன்பே ஒரு ஶ்லோகத்தை விண்ணப்பம் செய்வித்துத் திருப்பிரம்புக்குப் புறம்பாகக் கொண்டு புறப்பட்டுச் சுற்றும் பார்த்தருளி, நம்முடையாரடங்கலும் நம்மை நினைத்திருக்குமா போலே இவனை நினைத்திருங்கோள்" என்றருளிச் செய்தார்.)*

ஈட்டிலே குறிப்பிடப்பட்டுள்ள இந்த நிகழ்ச்சியின் மூலம் இராமானுசர் பட்டரிடம் கொண்ட அளவற்ற அன்பை நாம் அறிந்துகொள்ளலாம்.

49.3. இராமானுசர், பட்டரைப் பெரியபெருமாள் ஸந்நிதிக்கு அழைத்துக் கொண்டு போய்த் தமக்குமுன்னாக அவருக்குத் தீர்த்தப் பிரஸாதங்கள் கொடுப்பித்து அவரைநோக்கி 'மேல் நாட்டிலே வேதாந்தியென்ற ஒரு பெரியவித்வான் இருக்கிறதாகக் கேள்விப்படுகிறோம்; நீர் அங்கேபோய் அவரைத் திருத்தி நம் விசிஷ்டாத்வைதக் கோட்பாடுகளை பின்பற்றுபவராக அவரைத் திருத்திப் பணிகொள்ளும்' என்று அருளிச்செய்தார். இராமானுசருடைய இந்த அவாவினை அவருடைய காலத்திலே நிறைவேற்றிட பட்டரால் இயலவில்லை.

49.4. மேல்நாட்டிலே திருநாராயணபுரத்தில் பங்குனி மாதத்து உத்தரநக்ஷத்திரத்திலே அந்தணர் வருணத்தில் அவதரித்தவர் மாதவசூரி. இவர் இளமை தொடங்கி, பல ஆசாரியர்களிடம் அநேக சாஸ்திரங்களைப் பயின்று, தேர்ந்து பற்பல ஊர்களுக்குச் சென்று சமயவாதஞ் செய்து தம்கல்வித் திறத்தைக்காட்டி அதுபற்றி வியந்து அவர்கள் அளித்த விசேஷ

வெகுமானங்களைப் பெற்றுப் பெருஞ்செல்வமுடையவராய்த் திகழ்ந்துவந்தார்.

49.5. வேதாந்த பாண்டித்தியத்தால் **வேதாந்தி** என்று பெயர் படைத்து, கங்கோரையென்கிற ஊரைத் தாம்வாழு மிடமாகக் கொண்டு, ஆறுசாஸ்திரங்களையும் தாம்கரை கண்டமைக்கு அறிகுறியாக அந்தந்த சாஸ்திரங்களின் பெயரால் ஆறு ஆசனங்களை இடுவித்து அந்த ஆசனங்களின் மேல் பெருமிதம் தோன்ற வீற்றிருந்து, அநேக சீடர்கள் புடைசூழ, தம்மிடம் வருகிற வித்வான்களை எல்லாம் வாதப்போரில் வென்று, சிறந்த அத்வைத பண்டிதராய் பெரும்சிறப்புடன் வாழ்ந்து வந்தார். இராமானுசர் இந்த மாதவசூரியைத்தான் திருத்திப்பணிகொள்ளுமாறு பட்டருக்கு நியமனம் செய்தருளினார்.

49.6. "மாறன் பணித்த தமிழ்மறைக்கு மங்கையர்கோன், ஆறங்கங்கூற" என்றபடி வடமொழி வேதங்கள் நான்குக்கும் ஆறுசாஸ்திரங்கள் அங்கமாக அமைந்திருப்பதைப் போல அவ்வேதங்களின் உட்பொருள் கொண்டு நம்மாழ்வார் அருளிச் செய்த நான்கு திவ்வியப்பிரபந்தங்களுக்கும் அங்கங்களாகத் திருமங்கையாழ்வார் ஆறுதிவ்யப் பிரபந்தங்களை அருளிச் செய்தார். அவற்றுள், திருநெடுந்தாண்டகத்திலே பட்டர் மிகவும் ஊன்றி அதன் ஆழ்பொருளில் ஈடுபட்டு 'திருநெடுந்தாண்டக சாஸ்திரம் வல்லவர்' என்று ஒரு பெயர் பெற்றவராய் விளங்கிவந்தார்.

49.7. பட்டர், அப்பிரபந்தத்தின் அர்த்தத்தைத் தமது திருவோலக்கத்திலே பலகாலும் பரக்க உபந்யஸிப்பர். அதிலும் "***மைவண்ண நறுங்குஞ்சி ....***" [திருநெடுந்தாண்டகம் - 21] என்று தொடங்கும் பாசுரத்திற்கு மிக விரிவாக உபந்யாஸம் அருளிச் செய்வர். அதுகேட்டு இராமானுசருடைய ஐந்து ஆசார்யர்களுள் ஒருவரான திருவரங்கப்பெருமாள் அரையர், மிகவியந்து, 'முன்பு ஓர் ஆசாரியர் இடத்திலும் இப்படிப் பொருள்

*• 415இன் தொடர்ச்சி*
*ஜயித்துவர; வேத₃ாந்திகளும் ஸம்ஸாரத்தில் அருசியாலே ஸந்யஸித்து, கு₃ருகுலவாஸம் பண்ணும் காலத்திலே,*

கேட்கப் பெற்றதில்லை; இப்பொழுது இவரிடத்திலே இது கேட்கப் பெற்றோம்! " என்று கொண்டாடி, பட்டரை நன்கு மதிக்கலானார்.

49.8. பட்டர் ***திருநெடுந்தாண்டக சாஸ்திரம்*** கொண்டு மாதவசூரி எனப்படும் வேதாந்தியைத் திருத்திப் பணிகொண்டு அவருக்கு ***நஞ்சீயர்*** என்ற திருநாமம் சாற்றியருளினார்.

*(ஆளவந்தாரைப் போல உடையவருக்கும் தம்முடைய காலத்திலே செய்துமுடிக்க முடியாத சில நினைவுகள் உண்டு. அவற்றில் ஒன்று தர்க்க, ந்யாய, வ்யாகரண, மீமாம்ஸா சாஸ்த்ரங்களில் வல்லவரான மாதவாசார்யர் என்ற அத்வைதியைத் திருத்திப்பணி கொண்டு அவராலே நம்முடைய விசிஷ்ட்டாத்வைத ஸித்தாந்தத்திற்குப் பெருமை சேர்க்க எண்ணினார். உடையவர் இத்தகைய பெருமை படைத்தவரான மாதவாசார்யரைத் திருத்திப் பணிகொள்ளுமாறு ஸ்ரீபராசரபட்டரை நியமித்தருளினார். அவ்வாறே ஸ்ரீபட்டரும், ஸ்ரீமாதவாசார்யரைத் திருத்திப்பணிகொண்டு அவருக்கு நஞ்சீயர் என்ற திருநாமமும் சாற்றியருளினார். உபதேசரத்னமாலை 50-ஆம் பாட்டில்:*

**நம்பெருமாள் நம்மாழ்வார் நஞ்சீயர்நம்பிள்ளை**
**யென்பர் அவரவர்தம்மேற்றத்தால் – அன்புடையோர்**
**சாற்று திருநாமங்கள் தானென்றுநன்னெஞ்சே!**
**ஏத்ததனைச்சொல்லிநீ யின்று.**

*– என்று நஞ்சீயர் என்ற திருநாமத்தின் பெருமையை ஸ்ரீமணவாள மாமுனிகள் அருளிச்செய்துள்ளார்.*

*(திருவரங்கத்தில் பகல்பத்து உத்ஸவ தொடக்கத்தின் முதல்நாள் பெரியபெருமாள் ஸந்நிதியில் திருநெடுந்தாண்டகம் தொடக்கமாகும். அன்றையதினம் மாலைப்பொழுதில் அரையர்கள்*

திருவிக்கிரமன் திருவீதித்திருமதிள் கேவலம் ஜீர்ணமாய்ச் சரிந்துவிழ, வீரஸுந்த₃ர ப்₃ரஹ்மராயர் அந்த மதிளைக் கட்டி வைத்தார்.

---

*எழுந்தருளி பெரியபெருமாளுக்கு வெகுஅருகில் திருநெடுந்தாண்டகம் முதற் பாசுரத்தைத் தாளத்தோடு ஸேவிப்பர். அதன்பிறகு சந்தன மண்டபத்தில் முதற்பாட்டிற்கு வ்யாக்யானம், அபிநயம் ஆனபிறகு முதற்பாசுரமான 'மின்னுருவாய்' தொடங்கி பத்தாம் பாசுரமான "பட்டுடுக்கும்" ஈறாக அமைந்துள்ள பாசுரங்களுக்கான தம்பிரான் படி வ்யாக்யானம் அரையர்களால் ஸேவிக்கப்படும். இந்த நிகழ்ச்சி திருவரங்கம் பெரியகோயிலில் மட்டுமே நடைபெறும் சிறப்புடைய நிகழ்ச்சியாகும். மற்றைய திவ்யதேசங்களில் நடைபெறுவதில்லை. இது, எம்பெருமானார் நியமனம் அடியாக மாதவாசார்யரை திருநெடுந்தாண்டக சாஸ்திரம் கொண்டு ஸ்ரீபராசரபட்டர், திருத்திப்பணி கொண்டதை நினைவிற் கொள்வதற்காக ஏற்படுத்தப் பட்ட வைபவம் ஆகும்.)*

49.8.1. அன்று முதலாக நஞ்சீயர் பட்டரைப் பிரியாமல் அடிமைசெய்துகொண்டு அவர்திருவுள்ளத்துக்கு மேன்மேலும் உகப்பை விளைவித்திட, பட்டரும் அவர்க்குச் சம்பிரதாய ரகஸ்யார்த்தங்களையெல்லாம் அருளிச்செய்து திருவாய்மொழி முதலிய திவ்யப்பிரபந்தங்களின் விசேஷார்த்தங்களையும் விவரிக்க, நஞ்சீயர் அவற்றை ஆதரத்துடன் கேட்டுத் தம் நன்னெஞ்சிற் பூரித்துக்கொண்டு அவரருகிலேயிருந்தார்.

49.9. அக்காலத்திலே திருவரங்கம் பெரியகோயிலின் ஸப்தபிரகாரங்களுள் ஆறாவது பிராகாரமான திரிவிக்கிரமன் திருவீதித்திருமதிள் மிகவும் பழுதடைந்துச் சரிந்துவிழ, அதனைச் சீர்படுத்திக் கட்டுவிக்கத் தொடங்கிய வீரஸுந்தரப்பிரஹ்மராயன் எனும் சிற்றரசன் அந்த மதிளை பிள்ளைப்பிள்ளையாழ்வான்

திருமாளிகை உள்ள இடத்தில் மதிளை நேரே எடுத்து செல்வதற்கு இடையூறாய் அமைந்திருந்ததால், முன்போல மதிளை ஒதுக்கிக் கட்டாமல் அவர் திருமாளிகையை இடித்து நேரொழுங்காகத் திருமதிள்கட்டுவிக்க முயன்றான். அதனை அறிந்த பட்டர், அச்சிற்றரசனை நோக்கி 'நீ கட்டுவிக்கிற திருமதிளோ பெருமாளுக்கு ரக்ஷகம்?; பிள்ளைப் பிள்ளை யாழ்வான் சிறந்த பாகவதோத்தமர். கூரத்தாழ்வனுடைய சிஷ்யர்களில் முதன்மையானவர். ஆகையால் அவருடைய வாழ்த்தன்றோ நம்பெருமாளுக்குப் பாதுகாப்பு?

49.9.1. திருமங்கையாழ்வார் நான்காவது பிராகாரங் கட்டுவிக்கிற போது தொண்டரடிப்பொடியாழ்வார் திருமாலை சேர்க்கிற இடமாகிய "அடந்தை நடந்தை" என்னும் பூஞ்சோலைகள் நேர்பட, அவற்றையழித்துக் குறுக்கி மதிள்கட்ட மனங் கொள்ளாமல் ஒதுக்கி மதிள் கட்டவில்லையா? அதுபோலவே இப்பொழுதும் பிள்ளைப்பிள்ளையாழ்வான் திருமாளிகையை விட்டு ஒதுங்கத் திருமதிள் கட்டுவிப்பதே தகுதி' என்று அறிவுரை வழங்கினார்.

49.9.2. வீரஸுந்தரன், ஆசார்யபுத்திரரென்ற அச்சமின்றிப் பட்டரது வார்த்தையை மதியாமல், ஆழ்வானுக்கு அந்தரங்க சிஷ்யரென்ற பெருமையையும் பாராது பிள்ளைப்பிள்ளை யாழ்வான் திருமாளிகையை இடித்துத் தள்ளி நேர்படத் திருமதிள் கட்டுவித்தான். இது காரணமாகப் பட்டர்க்கும் அவ்வரசனுக்கும் உண்டான மனஸ்தாபம் நாளடைவிலே மேலிட, வீரஸுந்தரன் பட்டரை ஸ்ரீரங்கத்திலிருக்கவொட்டாது மிகவும் உபத்திரவிக்க, பட்டர் யாரிடமும் சொல்லாது கோயிலினின்று புறப்பட்டுத் திருக்கோட்டியூர்க்கு எழுந்தருளலானார்.

49.10. பட்டர் திருக்கோட்டியூரிலே எழுந்தருளி இருக்கும் போது, திருவரங்கத்தையும் பெருமாளையும்

விட்டுப்பிரிய நேர்ந்ததைக் குறித்து மிகவும் வருத்தமுற்று, திருவரங்கப் பெருங்கோயிலிற் பிரணவாகார விமானத்திலே சேஷசயனத்தில் திருமகளும் நிலமகளும் திருவடிவருட வலக்கைகீழ்கொடுத்துப் பள்ளிகொண்டு அருள்கிற இந்திர நீலமணிவண்ணான கமலக் கண்ணனை எளியேன் நணுகிக் கண்ணாரக்கண்டு வாயார வாழ்த்துவது எந்நாளோ!" என இவ்வகையான கருத்துகளமைந்த சிறந்த சில இரங்கற்பாக்களை [வடமொழியில்] பாடி அரற்றிக் கொண்டிருந்தனர்.

49.11. திருக்கோட்டியூரிலே நம்பெருமாளின் பிரிவை ஆற்றிக் கொள்ளும் வண்ணம் அடியார்கள் வேண்ட ஆழ்வார்கள் விஷயமாக "***பூதம் ஸரஸ்ய ...***" என்று தொடங்கும் திவ்யப்ரபந்த அநுசந்தான பொதுத் தனியனையும், ஆண்டாள் விஷயமாக "***நீளாதுங்க ஸ்தநகிரி ....***" என்று தொடங்கும் திருப்பாவைக்கான தனியனையும் அருளிச்செய்தார்.

49.12. இவ்வாறு நிகழ்கிறகாலத்திலே, கடலைக் கலக்கினாற் போலப் பட்டர் திருவுள்ளத்தைக்கலக்கி பாகவத விரோதம் செய்தவனான வீரசுந்தரன் இறந்துபோனான். அதன் பிறகு, திருக்கோட்டியூரிலிருந்து புறப்பட்டு ஸ்ரீரங்கத்துக்கு எழுந்தருளும் காலத்துத் திருக்காவிரியாற்றினருகே வந்தவாறே, இத்திருப்பதியைச் சிலகாலம் பிரிந்திருக்க நேர்ந்த வருத்தமும் இப்போது வந்துகூட நேர்ந்த மகிழ்ச்சியும் விரவி ச்லோகரூபமாக வெளிப்படத்தொடங்கவே, அத்திருக் காவிரியில் படிந்தது முதலாகவ தம்முடைய அனுபவங்களைக் வெளியிடும் முறைமையிலே ***ஸ்ரீரங்கராஜஸ்தவம்*** எனும் அற்புதமான ஸ்தோத்ரம் திருவவதரித்தது.

49.13. ஒருநாள், பட்டர் பெரியபெருமாளைச் ஸேவித்து நின்றபோது, அத்திருவரங்கநாதன் கடாக்ஷித்து நம் 'உடையவர் ஸ்ரீபாஷ்யமும் கீதாபாஷ்யமும் செய்தருளினார்: நீர் ஸஹஸ்ர

* பக்கம் 416இன் தொடர்ச்சி

*அதின்பின்பு, வேத$_3$ாந்திகளான நஞ்சீயரும், ப$_4$ட்டரும் த$_3$ர்ஶநம் நிர்வஹித்துக்கொண்டிருக்கும் காலத்திலே; திருவரங்கவள்ளலார் திருமஞ்சந விண்ணப்பம் செய்கிறதுக்கு, நாநாவித$_4$மாக உத்ப்ரேக்ஷித்து, ஶ்லோகங்களும், அதுக்கு ஈடுகளும் அருளிச்செய்து, கைஶிக புராணத்துக்கும் ஈடும் அருளிச்செய்து, ஒரு கார்த்திகை மாஸத்தில் கைஶிக த்$_3$வாத$_3$சியினன்று புராணத்துக்கு அருளப்பாடு ஸாதி$_3$த்து, பட்டும் பருத்தியும் முதலான வரிசைகளை ஸாதித்தவுடனே,*

---

நாமத்துக்குப் பாஷ்யம் செய்யும்' என்று நியமிக்க, பட்டர் அந்தப் ஆணையைச் சிரமேற்கொண்டு வெகு சிறப்பாக ஸஹஸ்ரநாம பாஷ்யம் செய்தருளினார். *(இந்த ஸஹஸ்ரநாமபாஷ்யத்திற்கு ப[illegible]ட்ட பெயர் பகவத்குண தர்பணம் என்பது.)*

49.14. பட்டர், நம்பெருமாள் திருமஞ்சனம் கண்டருளும் பலசமயங்களில் அவ்வழகிலே மிகவும் ஈடுபட்டு வெவ்வேறு சமயங்களில் அருளிச்செய்த புகழ்த்தொடர்கள் *(கட்டியங்கள்)* இன்றும் வழக்கில் உள்ளன.

49.14.1. சில மாதப்பிறப்புதினங்கள், பிரதி ஏகாதசி, அமாவாசை, ரேவதியுடன் கூடிய நாட்கள், ஸூர்யசந்திர கிரஹணங்கள், அநேக உத்ஸவங்களின் கடைசி நாட்கள் ஆகிய தினங்களில் நம்பெருமாள் திருமஞ்சனம் கண்டருள்வது வழக்கம்.

49.14.2. அப்போது வேதவிண்ணப்பம் செய்யவும், கட்டியம் கூறவும், புரோஹிதரான பட்டர் எழுந்தருளுவது மரபு. வரகவியாகவும், ஆசுகவியாகவும் விளங்கியவரும், பரமரஸிகருமான பட்டரை அங்குள்ள பெரியோர்கள் பெருமாளை ஒரு ஶ்லோக ரூபமாக வர்ணிக்கும்படி ப்ரார்த்திப்பர். பட்டரும் அதற்கிணங்கி ஒரு அழகிய ஶ்லோகம் அருளி, பெருமாளை நதி, மலை, சமுத்திரம், கல்ப விருக்ஷம், மேகம், சூரியன்,

*தாமருளிச்செய்த ஈட்டுடனே புராணத்தை விண்ணப் பஞ்செய்ய; பெருமாளும் போர உகந்தருளி 'நம் ப₄ட்டனை மேல்வீட்டில் விட்டுவா' என்று கொவணவனை நியமித் தருள; ப₄ட்டரும் உகப்புடனே முன்போலே ப்₃ரஹ்ம ரத₂த்திலே திருமாளிகையிலே ஸகல வரிசைகளுடனே எழுந்தருளி, ப்₃ரஹ்ம ரந்த்₄ரத்தை பே₄தி₃த்துக்கொண்டு திருநாட்டுக்கெழுந்தருளினார்.*

---

சந்திரன் முதலிய பொருள்களில் ஒன்றாக வருணித்து, அதற்குத்தாமே ச்ருதி, ஸ்ம்ருதி, இதிஹாஸ புராணங்கள், காவ்யங்கள், அருளிச் செயல், பூர்வாசாரிய ஸ்ரீஸூக்திகள் இவற்றிலிருந்து மேற்கோள்கள் காட்டி ***வ்யாக்யானமும்*** செய்து போருவது வழக்கம். *(ஒரு நூலுக்கு ஆக்கியோனே விரிவுரை எழுதினால் எத்தகைய சிறப்புடையதோ அத்தகைய சிறப்புடையது பட்டர் அருளிச்செய்த திருமஞ்சன கட்டியங்களுக்கு அவரே செய்தருளிய விரிவுரை.)*

49.15. பட்டரின் ஶ்லோகங்கள் சொற்சுவை, பொருட் சுவை நிறையப் பெற்று கேட்பவர்களின் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் தன்மையுடையன. இவற்றிற்கு பட்டர் தாமே அருளிச் செய்துள்ள உரைகள் ஈடு இணையற்று விளங்குகின்றன.

49.15.1. இவை ஸம்ஸ்க்ருதம், தமிழ் இரண்டும் கலந்த இனிய மணிப்பிரவாள நடையில் அமையப்பெற்று, படிப்போரை பகவத் குணங்களில் ஆழங்காற் படவைக்கும் இயல் புடையன. இன்றும் பட்டரின் திருவம்சத்தவர்கள் பட்டரின் திருமஞ்சன ஶ்லோகங் களை அவரே அருளிய உரையுடன் ஏடுபடுத்தி வைத்துள்ளனர். ஒவ்வொரு திருமஞ்சனத்தின் போதும் ஒவ்வொரு ஶ்லோகமாக அதன் உரையுடன் நம்பெருமாள் முன்பு விண்ணப்பம் செய்து வருகிறார்கள்.

49.16. நம்பெருமாள் திருமஞ்சனம் கண்டருளுகையில்

ஶ்லோகம் விண்ணப்பம் செய்யும் முன்பு, கோயில் ஸ்தானீகர், "அருளப்பாடு பராசரபட்டர்" என்று அருளப்பாடு ஸாதிப்பர். உடனே பட்டர் வம்சத்தவர் "நாயன்தே" என்ற மறுமொழியுடன் நம்பெருமாள் திருமுன்பு பணிவாக வந்து நிற்பர்.

49.17. ஸ்ரீபராசரபட்டர், அஷ்டாக்ஷரமென்னும் பெரிய திருமந்திரத்துக்கு விவரணமாக அஷ்டஶ்லோகீ என்ற வட மொழியில் அமைந்த நூலை அருளிச்செய்தார். பின்புள்ள ஆசார்யர்கள் அநேகர் செய்தருளிய ரஹஸ்ய வியாக்கியானங்கள் அனைத் திற்கும் இது முன்னூலாய் விளங்கிவருகிறது.

49.18. அருளிச்செயல்களுக்கு இவர் கூறும் பொருள்கள் அறிஞர்களுக்கு விருந்தாக அமைந்துள்ளது. இவரது நூற் புலமை ஸஹஸ்ரநாம பாஷ்யத்தால் நன்கு விளங்குகின்றது. வேறு வேதாந்த நூலும் இவர் இயற்றியுள்ளார்; ஆனால் அவை தற்பொழுது கிடைக்கப்பெறவில்லை. வேதாந்த தேசிகன் காட்டும் மேற்கோள்களின் மூலம் இவர் இத்தகைய நூல்களை இயற்றியது அறியப்படுகிறது. இவர் ஒரு சிறந்த கவிஞரா கவும். விளங்கினார். பெரியபிராட்டியார் புருஷகாரமாக பெரியபெருமானைப் பற்றும் சேதநனுக்குப் பெரியபிராட்டியின் குணங்களைக் கையிலங்கு நெல்லிக்கனி போல் காட்ட வல்லது, இவரால் இயற்றப்பட்ட "ஸ்ரீகுணரத்நகோசம்" என்னும் நூல். இந்நூலின் திருநாமமே பிராட்டியின் குணரத்நங்கள் பொதிந்துள்ள பொக்கிஷம் போன்றது என்று குறிப்பிடுவதால் இந்நூலின் சிறப்பை நாம் அறிந்து கொள்ளலாம். 61 ச்லோகங்கள் கொண்டது இந்நூல்.

49.19. வேறு சில துதிகளும், விடுதி ச்லோகங்களும் *(முக்தகம்)* இவரால் இயற்றப்பட்டுள்ளன. "க்ரியாதீபம்" என்னும் அநுஷ்டான க்ரந்தமொன்றும் இவரருளியுள்ளார். சுருங்கக் கூறின், எம்பெருமானாருக்குப் பிறகு அவரைப் போல் பேரும் பெருமையும் பெற்று விளங்கியவர் இவர் ஒருவரே. கவியுலகில்

காளிதாஸனது உவமைத்திறம், பவபூதியின் ஸ்வபாவோக்தி, பாரவியின் [?] அர்த்த கௌரவம், முராரியின் தனிப்போக்கு இவை யாவும் சேர்ந்து இவரொருவரிடமே மிளிருகின்றன எனின் மிகையாகாது.

49.20. ஒரு கைசிக துவாதசியன்று பெருமாள் ஸந்நிதியிலே பராசரபட்டர் கைசிகபுராணம் வாசித்தருளிய அழகினில் உகந்து, "பட்டரே! உமக்கு மேல்வீடு தந்தோம்" என்று அருளிச் செய்ய இவரும் "***மஹாப்ரஸாதம்***" என்று அங்கீ கரித்தருளி பெருமாள் தம்மை விசேஷகடாக்ஷம் செய்தருளின உபகாரத்தைச் சிந்தித்து, "நாயந்தே! ஆசன பத்மத்திலே அழுத்திமிட்ட திருவடித் தாமரைகளும் அஞ்சேல் என்ற கையும், கவித்தமுடியும் முறுவல் பூத்த சிவந்த திருமுகமண்டலமும், திருநுதலில் கஸ்தூரித் திருநாமமும் பரமபதத்தில் கண்டிலேனாகில் ஒரு மூலையடியே முறித்துக் கொண்டு குதித்து மீண்டுவருவேன்" என்று நம்பெருமாளையும் பெரியபெருமாளையும் ஆபாதசூடம் (*திருவடி தொடங்கி திருமுடி ஈறாக*) அநுபவித்து திருமாளிகைக்கு எழுந் தருள திருப்பதியிலுள்ளவர்கள் அடங்கத் திருமாளிகையிலே



*ஸ்ரீபராசரபட்டர்*

## சீராமப்பிள்ளை வைப₄வம்

*50. அநந்தரம், அவருடைய திருத்தம்பியார் சீராமப் பிள்ளை பௌரோஹித்யமும் புராணபட₂ந கைங்கர்யமும் பண்ணிக் கொண்டிருந்தார்.*

---

அமுது செய்தருளின பின்பு பெருங்கூட்டமாக எழுந்தருளி யிருந்து, திருநெடுந்தாண்டகத்திற்கு அர்த்தம் அருளிச்செய்து கொண்டிருக்கையில் "அலம்புரிந்த நெடுந்தடக்கை" *(திரு நெடுந்தாண்டகம் 6)* என்கிற பாட்டுக்கு அர்த்தமருளிச் செய்கிற போது, "அஞ்சிறைப்புகள் தனிப்பாகன்" என்கிறவிடத்திலே "பறவையேறு பரம்புருடா நீ யென்னைக்கைக் கொண்டபின், பிறவி யென்னுங் கடலும் வற்றிப் பெரும்பதம் ஆகின்றதால்" *(பெரியாழ்வார் திருமொழி 5.3.2)* என்று இத்தை இரட்டித்து *(இரண்டுமுறை)* அநுஸந்தித்தருளித் திருக்கண்களை மலர விழித்துத் திருமேனியைச் சிலிர்ப்பித்துப் புன்முறுவல் செய்து திருமுடியிலே அஞ்சலி செய்துகொண்டு அணையிலே சாய்ந்து நிற்கச்செய்தே, ஶிர: கபாலம் வெடித்துத் திருநாட்டுக்கு கெழுந்தருளினர்.

50. ஸ்ரீபராசரபட்டருடைய திருத்தம்பியார் திருநாமம் சீராமப்பிள்ளை. இவர்கள் இருவரும் இரட்டையர்கள். ஸ்ரீபராசர பட்டர் திருநாட்டுக்கெழுந்தருளிய, பிறகு கூரத்தாழ் வானுடைய கைங்கர்யங்களான பௌரோஹித்யத்தையும் *(கோயில் புரோஹிதம்)* புராணபடந கைங்கர்யத்தையும் *(பெரியபெருமாள் திருமுன்பு ஸ்ரீவிஷ்ணுபுராணம், ஸ்ரீவராஹ புராணத்தின் உள்ளீடான கைசிக மஹாத்மியம் போன்றவைகளை ஸேவிப்பது)* ஸ்ரீவேதவ்யாஸ பட்டர் என்று என்றழைக்கப்படும் சீராமப்பிள்ளை மேற்கொண்டு வந்தார். ஸ்ரீபராசரபட்டர், ஸ்ரீவேதவ்யாஸபட்டர் பரம்பரையினர் இன்றும் இந்தக் கைங்கர்யங்களை செய்து வருகின்றனர்.

## கூரநாராயணஜீயர் வைப$_4$வம்

*51. நஞ்ஜீயர் த$_3$ர்ஶநம் நிர்வஹித்துக் கொண்டிருக்கிற காலத்திலே; விண்ணப்பஞ் செய்வாரிலே ஒருத்தர் பெருமாள் ஸந்நிதி$_4$க்கு யோக்$_3$யமாகாமலிருக்க; ஆழ்வானுடைய தே$_3$விகள் ஆண்டாள்-அவரிடத்தில் க்ருபையாலே, ஆழ்வான்*

---

51. இராமானுசருக்குப் பிறகு ஸ்ரீவைஷ்ணவ ஆசார்ய பீடத்தை அலங்கரித்தவர் எம்பார். பூர்வாஶ்ரமத்தில் விரக்த ராகையாலே ஸந்ததியில்லை. அவர் திருத்தம்பியாரான சிறிய கோவிந்தப் பெருமாள் குமாரர் ஸ்ரீபராங்குஶதாஸர். அவர் குமாரர் எம்பார்; அவர் குமாரர் ஸ்ரீரங்கநாராயண ஜீயர். இவருக்கு நலந் திகழ் நாராயண ஜீயர், கூரநாராயண ஜீயர் ஆகிய திருநாமங்களும் அமைந்துள்ளன. நலந்திகழ் நாராயண ஜீயரின் திருநக்ஷத்ரம் மார்கழி மாதம் கேட்டை. திருவவதார ஸ்தலம் திருவரங்கம். பூர்வாஶ்ரமத்தில் குமாரர் எடுத்தகை அழகியநாயனார். ஆசார்யர் பெரியபட்டர். திருவாராதனம் ஹயக்ரீவர். குலம் வடமாள், குடி வட்டமணி, பாரத்வாஜ கோத்ரம். இவருக்குத் தனியன்

ஸ்ரீபராஶரப$_4$ட்டார்ய சிஷ்யம் ஸ்ரீரங்க$_3$பாலகம் ।
நாராயணமுநிம் வந்தே$_3$ ஜ்ஞாநாதி$_3$கு$_3$ணஸாக$_3$ரம் ॥

(ஸ்ரீபராசரபட்டரின் சீடராய், திருவரங்கம் பெரிய கோயிலை ரக்ஷிப்பவராய், ஞானம் முதலான குணங்களுக்குக் கடலாயிருப் பவரான நலந்திகழ் நாராயணஜீயரை வணங்குகிறேன்.)

51.1. எம்பாருக்குப் பிறகு ஸ்ரீபராசரபட்டரும், அவருக்குப் பிறகு அவருடைய சிஷ்யரான நஞ்சீயரும் ஸ்ரீவைஷ்ணவ ஆசார்யபீடத்தை அலங்கரித்து வந்தனர். நஞ்சீயர் ஆசார்ய பீடத்தை அலங்கரித்து வந்த காலத்தில் *(கி.பி.1113-1208)* விண்ணப்பம் செய்வார்களான அரையர்களில் ஒருவர் பெரிய

*திருமாலிருஞ்சோலையிலே எழுந்தருளியிருக்கச் செய்தே, ஆழ்வான் திருவடிகளிலே ஆஶ்ரயித்து ஸந்யஸித்து, ஆசார்யன் குடியை நிரூபகமாகக் கற்ற '**கூரநாராயணஜீயர்**' என்று திருநாமத்தையுடையவராய், மஹாமாந்த்ரிகராய், கோயில்வாஸம் பண்ணிக்கொண்டிருக்கிறவரை அழைத்து, 'உம்முடைய மந்த்ரங்களும் ஒரு கைங்கர்யத்திலே உபயோகிக்கும் என்று சொல்லியிருந்தீரே! நீரிப்போது இந்த விண்ணப்பஞ் செய்வாரைப் பெருமாள் கைங்கர்யத்துக்கு*

---

பெருமாள் ஸந்நிதிக்குச் சென்று கைங்கர்யம் செய்வதற்கு இயலாமல் திருநோவு சாற்றிக்கொண்டார் *(உடல்நலம் குன்றியதால் அவரால் கைங்கர்யத்தை மேற்கொள்ள இயலாமல் போயிற்று)* அவ்வாறு திருவரங்கப் பெருமாள் அரையர் என்ற திருநாமம் கொண்ட அந்த அரையர் ஸ்வாமியினுடைய நோய் தீருவதற்கான 'மந்த்ரப் பிரயோகம்' செய்வதற்காகக் கூரத்தாழ் வானின் தேவிகளான ஆண்டாள் திருமாலிருஞ் சோலையில் எழுந்தருளியிருந்த கூரநாராயண ஜீயர் என்பாரைத் திருவரங் கத்துக்கு எழுந்தருளும்படி ப்ரார்த்தித்துக் கொண்டாள்.

*(ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தில் மந்திரஸித்தி படைத்தவர் கள் பகவத் பாகவத் கைங்கர்யத்துக்கே அந்த ஸித்தியை உபயோகித் திடுவார்கள். அந்த வித்யையை தன்னுடைய நலனுக்காகவோ பொருள் ஈட்டுவ தற்காகவோ உபயோகப்படுத்துவதில்லை. இந்தக் கொள்கை யில் தலைசிறந்தவர் ஸ்ரீகூரநாராயணஜீயர். இவர் அபரிமிதமான மந்த்ர சக்தி படைத்தவர். அவருடைய மந்த்ர சக்தியைக் கொண்டு ஆண்டாளுடைய ப்ரார்த்தனைக்கு இணங்கத் திருவரங்கப் பெருமாள் அரையருக்கு ஏற்பட்ட நோயினைப் போக்குவதற்கு திருவரங்கத்திற்கு எழுந்தருளினார்.)*

**"ரங்கேசவிஜ்ஞப்திகராமயஸ்ய சகார சக்ரேசநுதிம் நிவ்ருத்தயே| ஸமாச்ரயேஹம் வரபூரணீம் ய: தம் கூரநாராயணநாமகம் முநிம்||"**

யோக்₃யராம்படி பண்ணும்' என்று நியமிக்க, அந்தக் கூரநாராயணஜீயரும், ஸுத₃ர்ஶநஶதகத்தைப் பண்ணினார். தத்காலத்திலேயிருந்த அரையரிலே ஒருத்தர், கேவலம் தூ₄ர்த்தராய், சிற்றின்பத்திலே மண்டி, கீழ்ப்பறைச்சேரியிலே திரிய; தெரியச்சொன்னாலும் கேளாமல் ஸ்வஜநங்களாலே நிரஸ்தராய், பறைச்சேரியிலேதானே நியதமாக வாஸம் பண்ணிக்கொண்டிருக்குங் காலத்திலே; பெருமாள் ஒரு மஹோத்ஸவத்திலே எட்டாந்திருநாள் கிழையூருக்கு எழுந் தருளுகிறதாக, அக்கரை நாலுகால் மண்டபத்திலே எழுந் தருளியிருக்க; இவர் பறைச்சேரியிலேயிருந்து பள்ளும் பறையும் இசையுடனே பாடக் கேட்டருளி; பெருமாள்

---

**(எந்த கூரநாராயணஜீயர் திருவரங்கப்பெருமாள் அரையருடைய நோய் தீர்வதன் பொருட்டு அபேக்ஷிதங்களை நிறைவேற்ற வல்ல திருவாழியாழ்வான் விஷயமான ஸ்தோத்திர மாகிய ஸ்ரீஸுதர்சன சதகத்தை அருளிச்செய்தாரோ அந்த ஸ்ரீகூரநாராயண ஜீயர் ஸ்வாமியை அடியேன் பணிகின்றேன்.)** *(இந்த ஸுதர்சன சதகமானது நூறு ச்லோகங்கள் கொண்டது. இந்த சதகத்தை பாராயணம் செய்பவர்களுக்கு அனைத்து மங்களங்களும் உண்டாகும் என்பது நம் முன்னோர்கள் கருத்து.)*

**51.2. அரையர்களிலே ஒருவர் தம்முடைய கைங்கர்யத்தை மறந்து திருவானைக்கோயிலுக்கு அருகே ஒரு பறைச் சேரியிலே சிற்றின்பத்திலே மண்டி அந்தப் பறைச் சேரியிலேயே இருக்கலானார். ஒரு மஹோத்ஸவத்தின் எட்டாம் நாள் கீழையூர் எனப்படும் திருவானைக்கோயிலுக்கு செல்லும் நிமித்தமாக நம்பெருமாள் ஒரு நாலுகால் மண்டபத்திலே எழுந்தருளியிருந்தார்.**

**51.2.1. அப்போது பறைச்சேரியிலிருந்த அரையர் பள்ளும் பறையும் இசையுடன் பாடக்கேட்டருளி நம்பெருமாள் தம்**

*ஸ்ரீபாத₃ம் தாங்குவாருக்கு கு₃ருவாயிருந்து கொண்டு பறைச் சேரியிலேயிருக்கிற அரையரை ஸந்நிதி₄க்கு அழைத்து வரச்சொல்லி நியமித்தருள; அவரும் வருகிறதுக்கு ஸங்கோசித்திருக்க; அனைத்துக்கொத்து பரிகரங்களும் ஜீயர்களும் ஸ்ரீவைஷ்ணவர்களும் ஸங்க₃தராயிருக்க; பெருமாளும் தம் விஷயீகாரம் ப்ரஸித்₃த₄மாம்படி அவருக்கு* **'வரந்தரும் பெருமாளரையர்'** *என்று பட்டப்பேர் ஸாதித்து, அவர் ஸகலருக்கும் ஸர்வா பீ₄ஷ்டங்களும் அப்போது வரங்கொடுக்கும்படி அநுக்₃ரஹித்தருளி; அவருக்கு விஷய வைலக்ஷண்யத்தை உண்டாக்கி, பரிஶுத்₃த₄ராக்கி, திருவூறல் நடந்து திரும்பி எழுந்தருளுகிறபோதும் ஏழாந்திருநாள் (பெருமாள்) நாய்ச்சியார் கோயிலுக்கு எழுந்தருளு கிறபோதும் அவர் பாடின பள்ளும் பறையும் இசையிலே கேட்டருளும் படித் திருவுள்ளம்பற்றி; அந்தப்படியே செய்யச் சொல்லி நியமித்தருளினார். அது முதலாக அரையருக்கு* **வரந்தரும்**

---

முடைய ஸ்ரீபாதம் தாங்குவோரை பறைச்சேரிக்கு அனுப்பி அவரை அழைத்துவரும்படி நியமித்தருளினார். அந்த அரையரும் நம்பெருமாள் திருமுன்புவர கூசித்திருக்க தாம் அவரை ஏற்றுக் கொண்டதை அனைவரும் அறிந்துகொள்ளும் வண்ணம் அந்த அரையருக்கு **வரந்தரும் பெருமாள் அரையர்** என்ற திருநாமம் சாற்றியருளினார். அவருக்குச் சிற்றின்பத்தில் இருந்த மோஹத்தைப் போக்கி கைங்கர்யமாகிய செல்வத்தை மீண்டும் ஊரறியத்தந்து தூய மனத்தராய் விளங்குகின்ற அந்த அரையரைக் கொண்டு நம்பெருமாள் சித்ரா பௌர்ணமியன்று திருவூறல் *(கஜேந்த்ர மோக்ஷம்)* கண்டருளி திரும்பி எழுந்தருளுகிற போதும், ஒவ்வொரு ஏழாம் திருநாளுக்கும் நெல் அளவை கண்டபிறகு ஸ்ரீரங்கநாய்ச்சியார் ஸந்நிதிக்கு எழுந்தருளுகிற போதும் அந்த அரையர் பாடின பள்ளும் பறையும் இசையிலே கேட்டருளும்படி நம்பெருமாள் திருவுள்ளம் பற்றினார்.

பெருமாளரையர் என்கிற பட்டப்பேரும் சென்று வருகிறது. ஆக, நாலு பட்டப்பேர் அரையருக்கு.

இந்தப்படி பெருமாள் அரையரை அநுக்ரஹித்தருளி வாழ்ந்தருளுங் காலத்திலே, மேற்கே ஸ்ரீரங்கபட்டண ப்ரபு, ப்ரேரிதனாய் ஒரு க்ஷுத்ரமுண்டான ஸந்யாஸி, பெரிய பெருமாளை ஸ்ரீரங்கபட்டணத்துக்குக் கொண்டு போகிறதாக

---

அவ்வாறே பள்ளும்பறையும் இந்த உத்ஸவங்களில் கேட்டருளி வந்தார்.

[தற்போது பள்ளும் பறையுடன் அரையர் இந்த உத்ஸவங் களில் ஸேவிப்பதில்லை. ஏழாம் உத்ஸவ நாட்களில் ஸ்ரீரங்க நாய்ச்சியார் ஸந்நிதிக்கு எழுந்தருளும்போது அரையர்கள் கானம் பாடுவதில்லை. திருவூறல் உத்ஸவம் கண்டருளி ஆஸ்தானத்திற்கு எழுந்தருளும்போது திருநெடுந்தாண்டகம் ஸேவிக்கப்படுவதாக அரையர்கள் தெரிவிக்கின்றார்கள். இந்த மாறுதல் எப்போது ஏற்பட்டது என்பதை வரையறுக்க இயலாது. ஆயினும் அன்றைய தினம் அரையர்களுக்கு பல அருளப்பாடுகள் இருந்தபோதிலும் வரந்தரும் பெருமாள் அரையர் என்ற அருளப்பாடு மட்டும் ஸாதிக்கப் படுகிறது. திருவரங்கத்தில் பல நடைமுறைகள் மாற்றமடைந்த போதிலும் ஒருசில நடைமுறைகள் இத்தகைய வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த நிகழ்ச்சிகளை நமக்கு நினைவூட்டுகின்றன. திருவரங்கம் பெரியகோயிலில் அரையருக்கு நான்கு அருளப்பாடுகள் உண்டு. அவையாவன: (1) வரந்தரும் பெருமாள் அரையர், (2) கோயிலுடைய பெருமாளரையர் (3) மதியாத தெய்வங்கள் மனமுறைவாணப் பெருமாளரையர், (4) நாதவினோத அரையர்.]

51.3. நம்பெருமாள் அனைத்து உத்ஸவங்களையும் அழகுறக் கண்டருளிக்கொண்டிருந்த காலத்தில் ஸ்ரீரங்கப் பட்டணத்திலே இருந்த அரசன் ஒருவன் மந்த்ர சக்தி படைத்த

*அத்₃ருஶ்யாஞ்ஜநத்தைப் போட்டுக்கொண்டு ஒருத்தருக்கும் தெரியாமல் ப₃லிபீட₂த்தில் ப்ரஸாத₃த்தை எடுத்துக்கொண்டு*

---

ஒரு ஸந்நி யாஸியை திருவரங்கத்துக்கு அனுப்பிப் பெரிய பெருமாளுடைய சக்தியை மந்த்ரபூர்வமாக ஆகர்ஷணம் செய்து ஸ்ரீரங்கப் பட்டணத்திலே கொண்டு போய் சேர்ப்பதற்காக அனுப்பிவைத் திருந்தான். இந்த ஸந்யாசி யார் கண்ணுக்கும் தெரியாமல் கண்களிலே அஞ்ஜனம் (மை) இட்டுக்கொண்டு ஒவ்வொரு நாளும் மந்த்ரப்ரோயகம் செய்து கொஞ்சம் கொஞ்சமாக அந்த சக்தியை மந்த்ரபூர்வமாக ஒரு கலத்தில் சேமித்துக் கொண்டான்.

*(ஒரு ஸந்நிதியை பாலாலயம் செய்யும்போது மூலவிக்ர ஹத்தினுடைய சக்தியை மந்த்ரபூர்வமாக யாகாதிகளைச் செய்து எழுதி வைத்துள்ள ஒரு படத்திலே சேர்க்கிறோம். அதன் பிறகு கோயில் மற்றும் கர்ப்பக்ருஹ திருப்பணிகள் முடிந்த பிறகு மஹாஸம்ப் ரோக்ஷண வைபவம் நடைபெறுகிறது. அப்போது அவ்வாறு எழுதிவைத்த படத்தில் இருக்கும் மூல பிம்பத்தின் சக்தி, நீர் நிறைந்த ஒரு குடத்தில் கலா ஆகர்ஷணம் செய்யுப்படுகிறது. அதன்பிறகு இந்த கடத்திற்கு யாககுண்டங்களிலே மந்த்ரபூர்வமாக யாகாதிகளைச் செய்வதன் மூலம் அந்தக் குடத்தில் எழுந்தருளு யிருக்கும் தீர்த்தருபியான எம்பெருமான் திருப்பணி தொடங்குவதன் முன்பு இருந்த நிலையினை அடைகிறார். அந்தத் தீர்த்தம் கொண்டு மூலவிக்ரஹத்திற்கு ப்ராணப்ரதிஷ்டை செய்யப்படுகிறது. இவ்வாறு மூலபிம்பத்திலிருந்து நீக்கப்பட்ட சக்தியானது மறுபடியும் அந்தப் பிம்பத்தைச் சென்றடைகிறது. இந்தச் செய்கையைப் போலவே ஸ்ரீரங்கப்பட்டணத்து ஸந்யாஸி பெரியபெருமாளுடைய சக்தியை ஆகர்ஷணம் செய்யமுற்பட்டான்.)*

51.3.1. இந்த ஸ்ரீரங்கப்பட்டணத்து ஸந்யாஸி தான் உண்ணும் ஆகாரமாக ஒவ்வொரு நாளும் பலிபீடத்தில் சேர்க்கப் படும் சுத்த அன்னத்தை உட்கொண்டு வந்தான்.

தேஹதாரணம்பண்ணி மந்த்ரஶக்தியாலே பெரியபெரு மாளைத் திருவனந்தாழ்வான் திருப்படுக்கையிலும் நாலு அங்குலம் சலிப்பிக்க; மூலப்ருத்யரும் நம்பிமாரும் உள்ளூ ராரும் கண்டு அனைவருடன் உரைக்க; கூரநாராயண ஜீயரும்,

*(பலிப்பிரஸாதம் சுத்த அன்னமாகவே இருக்கவேண்டும். இது ஆகம நியதி. பெருமாளுக்கு சர்க்கரைப்பொங்கல், புளியோதரை போன்ற ப்ரஸாதங்கள் கண்டருளப் பண்ணுவதால் அவற்றை பலிப்ரஸாதமாக ஸாதிக்கக் கூடாது. மேலும் பலிப்ரஸாதத்தை ஸாதித்த பிறகு அதன் சேஷத்தை (மிகுதியை) கர்ப்பக்ருஹத்திற்கு எடுத்துச்செல்லக் கூடாது. இதுவும் ஆகமக் கோட்பாடே. நடைமுறையில் பலர் இத்தகைய ஆகமவிதிகளைக் கடைபிடிப்பதில்லை. ஒரு கோயிலுடைய ஸாந்நித்யம் என்பது அன்றாடம் ஆகம விதிக்கு உட்பட்ட கைங்கர்யங்களைச் செய்வதாலே நிலைநிற்கிறது. ஸம்ப்ரோக்ஷணம் முடிந்தபிறகு கோயிலினுள் அமைந்துள்ள மூலவிக்ரஹத்தில் அனைத்து சக்தியும் சேர்க்கப்படுகிறது. அதன்பிறகு கைங்கர்யங்களில் குறைவு ஏற்படுகிறபோது சிறுகச் சிறுக அந்தச் சக்தி குறைகின்றது. இந்தச் செயலை ஒரு மின்கலப் பெட்டிக்கு (Battery) ஒப்பிடலாம். அன்றாடம் அந்த மின்கலப் பெட்டியில் அமைந்துள்ள திரவத்தின் அடர்த்தி ஒரு குறிப்பிட்டநிலையில் இருந்தால்தான் அதிலிருந்து மின்சாரம் பெறப்படும். அமிலத்தின் அடர்த்தி அதிகரிக்க அதிகரிக்க மின்கலப் பெட்டி ஒரு நிலையில் மின்சார உற்பத்தியைச் செய்ய இயலாது. இதே அமைப்பில் தான் ஒரு கோயிலும் இயங்குகிறது.)*

51.3.2. ஸ்ரீரங்கப்பட்டணத்து ஸந்யாஸி சக்தி ஆகர்ஷணம் செய்யச்செய்ய பெரியபெருமாளுடைய படுக்கையானது நான்கு அங்குலம் கீழே சென்றடைந்ததைக் கண்ட நம்பிமார் *(கோயில் அர்ச்சகர்கள்)*, ஸ்தலத்தார், உள்ளூரார் ஆகியோர் கூரநாராயண ஜீயரிடம் இந்தச் செய்தியைத் தெரிவித்தனர். கூரநாராயணஜீயரும் நிகழ்ச்சிகளைத் தொடர்புபடுத்தி ஆராயும்போது ஒவ்வொரு

சேதியைக் கேட்டு, உபாயமாகச் சோதிக்குமளவில்; ப₃லி பீட₂த்தில் ப்ரஸாத₃ம் அத்₃ருஶ்யமாய்ப் போகிறபடியினாலே; ஒருநாள் ப₃லிப்ரஸாத₃த்திலே கடுகும் மிளகும் கலந்து சேர்த்து ப₃லிப்ரஸாத₃ம் பண்ணுவிக்க; அதையறியாமல் அந்த க்ஷுத்₃ர ஸந்யாஸி எப்போதையும் போலே அந்த ப்ரஸாத₃த்தை ப₄க்ஷிக்க, அழல்வேக₃த்தாலே கண்ணிலே நீர்சொரிந்து அஞ்ஜனம் கரைந்து வெளிப்பட்டான். அநந்தரம் கூரநாராயண ஜீயரும் அந்த ஸந்யாஸியை ப₃ஹுப்ர லோப₄நம்பண்ணி, கருவுகலத்தில் பதா₃ர்த்த₂ங்களைக் காண்பித்து ஸமாதா₄நங் களாலே வஶீகரித்து, பெருமாளை யதா₂ஸ்தி₂தமாக மந்த்ர ஶக்தியாலே எழுந்தருளப்பண்ணுவித்து, கருவுகலத்திலே அவனுக்கு வேண்டின வஸ்த்ராப₄ரணாதி₃களைக்கட்டி அந்த ஸந்யாஸியின் பின்னே ஆள்கள் கையிலே அனுப்பி, கூட வழித்துணையாக நாலு ஜட்டிகளை அனுப்பி, வத்த

---

நாளும் பலிபீடத்தில் சேர்க்கப்படும் அன்னமானது உடனே காணாமல் போவதை அறிந்துகொண்டார். அவருடைய அறிவுரை யின் பேரில் பலிப்ரஸாதத்தோடு கடுகும், மிளகும் கலந்து சேர்த்து பலிபீடத்தில் ஸாதிக்கப்பட்டது. அந்த ப்ரஸாதத்தை உண்ட ஸந்யாஸிக்கு அழல் வேகத்தாலே கண்களிலே நீர் சொரிய, கண்களிலே தடவப்பட்டிருந்த மையானது கரையக்கரைய அவனு டைய முழு உருவம் அனைவருக்கும் வெளிப்படலாயிற்று.

51.3.3. அந்த ஸ்ரீரங்கங்கப்பட்டண ஸந்யாஸியை கருவு கலத்திற்கு அழைத்துச்சென்று அவனுக்கு வேண்டிய பொன்னை யும், பொருளையும் கொடுத்து அவனை தம்வயப்படுத்திக் கொண்டார் கூரநாராயணஜீயர். மேலும் அவன் பெரியபெருமாளிட மிருந்து ஆகர்ஷித்த சக்தியை மீண்டும் பெரியபெருமாளிடம் சேர்ப்பிக்கச் செய்தார்.

51.3.4. கூரநாராயணஜீயர் அவனுக்கு வேண்டிய

வ்யாம்ஸத்தை அவர்களுடன் சொல்லியனுப்பிவைக்க; ஸந்யாஸியும், அவர்களுடன் புறப்பட்டு, ஜாக்3ரதையாய்ப் போய், அப்புறம் நிர்ப்ப4யனா யிருக்க; இந்த ஜட்டிகள் நாலுபேரும், அவன் அஶுசியாயிருக்கிற ஸமயத்திலே சடக்கென அவனை வதி4த்து, வஸ்த்ராப4ரணாதி3களை யதா2பூர்வமாக கருவுகலத்தில் முதலிடுவித்தார்கள்.

கீழையூரிலே சைவம் விஞ்சி, பெருமாள் எட்டாந் திருநாளுக்கு அகி2லாண்டே3ஶ்வரிக்கு ஸேவைஸாதி4த்து ஜம்பு3 தீர்த்த2த்திலே திருவடிவிளக்கி, கிழக்கே உத்தம ஶீலிக்கு வடக்கே திருமங்கைமன்னன் திருத்தோப்புக் கெழுந்தருளுகிறதுக்கு க்ரிமிகண்ட2ன் நாள்முதலாகச் சேஷ்டை பண்ணுகையில்; "அவர்களை நிரஸிக்கவேணும்" என்று இந்தக் கூரநாராயணஜீயர் அவர்களுடனே மருவி

---

பொன்னையும் பொருளையும் கொடுத்து அவனை ஸ்ரீரங்கப் பட்டணத்திற்கு அனுப்பிவைத்தார். அந்த ஸந்யாஸிக்குத் துணையாக நான்கு மல்யுத்த வீரர்களையும் அனுப்பி வைத்தார். அந்த ஸ்ரீரங்கப் பட்டணத்து ஸந்யாஸி தன் ஊருக்குச் செல்லும் வழியில் அவனோடு கூடவந்த நான்கு மல்யுத்த வீரர்களும் அந்த ஸந்யாஸியை வதித்து *(கொன்று)* அவனிடமிருந்த பொன்னை யும் பொருளையும் மீண்டும் கொண்டுவந்து கருவுகலத்தில் சேர்த்தார்கள்.

51.4. நம்பெருமாள் எட்டாம் திருநாளுக்குத் திருவானைக்கா கோயிலுக்கு எழுந்தருளி அங்கு அகிலாண்டேஶ்வரிக்கு ஸேவை ஸாதித்து, ஜம்புதீர்த்தத்திலே திருவடி விளக்கி, அந்த ஊருக்கும் கிழக்கே உத்தமஶீலிக்கு வடக்கில் திருமங்கை மன்னன் திருத்தோப்புக்கு எழுந்தருளுவார். அப்போது திருவானைக் கோயில் சைவர்கள் அதிக எண்ணிக்கையில் ஒன்றுசேர்ந்து பலவிதமான இடையூறுகளைச் செய்து வந்தனர்.



*ஸ்ரீகூரத்தாழ்வான் - ஸ்ரீரங்கம்.*

ஸ்ரீவத்ஸசிஹ்நமிச்ரேப்₄யோ
நமஉக்தி மதீ₄மஹே,
யதுக்தயஸ் த்ரயீகண்ட்டே₂
யாந்தி மங்களஸூத்ரதாம்.



*ஸ்ரீபராசரபட்டர் - ஸ்ரீரங்கம்.*

ஸ்ரீபராசர ப₄ட்டார்ய:
ஸ்ரீரங்கே₃ஶ புரோஹித:
ஸ்ரீவத்ஸாங்க ஸுத: ஸ்ரீமான்
ஶ்ரேயஸே மே(S)ஸ்து பூ₄யஸே

ஸ்ரீ:

# திருவரங்கன் திருமுற்றத்து அடியார்கள் திருவடிகளில் ஒரு விண்ணப்பம்

திருவரங்கம் பெரியகோயில் கருடமண்டபத்தின் மேற்குப்புரத்தில் ஸ்ரீரங்க விமானத்தின் ஆவிர்ப்பாவம், ஸத்யலோகத்தில் ஸ்ரீரங்கநாதனை பிரஹ்மா ஆராதித்தது, சோழமன்னனுடைய தவம் ஆகியவற்றைச் சித்தரிக்கும் மிகப்பெரிய அளவிலான வண்ண ஓவியங்கள் வரையப் பெற்று வைக்கப்பட்டுள்ளன.

சக்கரவர்த்தித் திருமகனாரால், இக்ஷ்வாகு குல தனமான ஸ்ரீரங்கநாதன் ஸ்ரீவிபீஷணாழ்வானுக்குப் பட்டா பிஷேகப் பரிசாக அளிக்கப்பட்ட நிகழ்ச்சி தொடங்கி, தர்மவர்மா ஸ்ரீரங்கநாதனை பிரதிஷ்டை கண்டருளித் திருமதிள் அமைத்தது ஈறாக அனைத்து நிகழ்ச்சிகளும் வண்ணஓவியங்களாக வரைந்து வைத்திட கணேசன் கலைக்கூடத்தைச் சார்ந்த திரு.முருகன் அவர்கள் பாரித்துள்ளார்கள். ஒரு ஓவியத்தினை வரைந்து, அதற்கு கண்ணாடி போட்டு பாதுகாப்பான முறையில் மண்டபத் தில் வைப்பதற்கு ரூபாய் 35,000/- தேவைப்படுகிறது. இந்த நூலின் இரண்டு பாகங்களின் அட்டையிலும் நாம் காணும் வண்ணப்படங்கள், கணேசன் கலைக்கூடத் தாரால் வரையப்பட்டு தற்போது கருட மண்டபத்தில் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ள ஓவியங்களே.

இவ்வாறு ஓவியங்களை வரைந்து அங்கே வைப்பதற்கு விருப்பமுடையோர் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி: ஸ்ரீகணேசன் கலைக்கூடம், மலைவாசல், மலைக்கோட்டை, திருச்சி.

*ஸ்நேஹம்பண்ணி, புரையறக் கலந்து, அந்த சைவர் விஸ்வஸித்தபின்பு, அவர்களுக்கு "மஹேஶ்வர பூஜை பண்ணுகிறோம்" என்று கிழக்கே காட்டழகியசிங்கர் கோயிலுக்குப் பின் வெளியிலே பெரியதாகச் சாலையும் நிரைச்சலும் கட்டிவைத்து, அதிலே பாகயத்நத்தைப் பண்ணுவித்து, பெரியதாக ஒரு கொப்பரையிலே நெய்யையும் காய்ச்சி வைத்து, சைவர்களனைவரையும் அழைப்பித்து, அவர்களனைவரும் சாப்பிடவிருந்தவுடனே, தாமும் அந்தக் காய்கிற நெய்க்*

---

51.4.1. நம்பெருமாள் புறப்பாடு கண்டால் திருவானைக் கோயில் சைவர்களுக்கு பொறுக்க வொண்ணாததாய் இருக்கும். திருநாளின்போது நம்பெருமாள் எழுந்தருளினால் தூக்குப் போட்டுக் கொண்டு தற்கொலை செய்துகொள்வதும், அவர் எழுந் தருளும்போது ஊதப்படும் திருச்சின்ன ஒலி கேட்டால் முட்டிக் கொள்வதுமான செய்கைகளை திருவானைக்கா சைவர்கள் செய்துவந்தனர். *(ஆதாரம் திருமாலை- 7ஆம் பாட்டிற்கான பெரிய வாச்சான் பிள்ளை வியாக்யானம்)* திருவரங்கம் பெரிய கோயிலுக்குச் சொந்தமான நிலங்களில் விளைந்த பயிர்களை மாடுகளை விரட்டி அடித்து மேயச்செய்வர்.

51.4.2. சைவர்கள் இவ்வாறான இடையூறுகளைப் பல ஆண்டுகளாகச் செய்துவந்தனர். திருவரங்கத்தில் உள்ளோர் கூரநாராயணஜீயரிடம் சென்று முறையிட்டனர். அந்த ஜீயரும் சைவர்களோடு கூடியிருந்து அவர்களுக்கு நன்மை பண்ணு கிறோம் என்று சொல்லி ஒரு மஹேஶ்வர பூஜைக்கு ஏற்பாடு செய்தார். கிழக்கே காட்டழகிய சிங்கர் கோயிலுக்கு பின்வழியில் பெரிதாகக் கொட்டகை அமைத்து அதிலே ஒரு பாகசாலையை *(சமையல் செய்யுமிடம்)* நிர்மாணித்தார். அந்த இடத்தில் ஒருபெரிய கொப்பரையில் *(விளிம்பு கொண்ட அகலமான வாயை உடைய ஒரு பாத்திரம்)* நன்றாக நெய்யைக் காய்ச்சி வைத்தார். சைவர்கள் அனைவரையும் சாப்பிட அழைத்து அவர்கள்

*கொப்பரையிலே நரஸிம்ஹயந்த்ரத்தை மார்பிலே கட்டிக் கொண்டு குதிக்கிற போது, அந்த ஶைவரனைவரும் தீய்ந்து ப₄ஸ்மமாய்ப் போனார்கள்.*

*இதுவும், ஒருகால விஶேஷத்திலே பதினெட்டாம் பெருக்குக்குப் பெருமாள் எழுந்தருளி, முன்நடந்தபடி திருப்பள்ளி ஓடத்திலே ஏறியருளி, திருப்பள்ளிஓடத் திருநாள் கண்டருளுகையில்; க்ஷுத்₃ர மந்த்ராக்ருஷ்டராய் நடுத் திருக்காவேரியிலே ப்ரவாஹத்துடனே எழுந்தருள; அச் சேதியைக் கேட்டு, கூரநாராயணஜீயரும், தம்முடைய*

---

பந்தியிலே உட்கார்ந்திருக்கும் போது தம்முடைய மார்பிலே நரஸிம்ஹ யந்திரத்தை கட்டிக் கொண்டு காய்கிற நெய்க் கொப்பரையிலே அவர் குதிக்க அந்த கொட்டகையில் இருந்த சைவர்கள் அனைவரும் தீய்ந்து சாம்பலாகிப் போனார்கள்.

54.5. காவிரி கரைபுரண்டு ஓடுகின்ற காலத்தில் ஒவ்வொரு ஆண்டும் பதினெட்டாம் பெருக்கிற்கு நம்பெருமாள் திருப்பள்ளி ஓடத்திலே எழுந்தருளித் தெப்பத்திருநாள் கண்டரு ளுவார். *(வான்பொய்த்திடும் தான்பொய்யாக் காவிரி ஒரு ஜீவநதியாக விளங்கிய காலமது. திருவரங்கத்தின் இருமருங்கிலும் காவிரியானது கரைபுரண்டு ஓடும். அந்த ஓட்டத்திலே தெப்போத்ஸவம் நடைபெறும்.)*

54.5.1. அவ்வாறு ஒருஆண்டு தெப்போத்ஸவம் கண்டரு ளுகிற போது நம்பெருமாளும் உபயநாய்ச்சிமாரும் எழுந்தருளி யிருந்த தெப்பம் ஒரு மந்த்ரவாதியினுடைய க்ஷுத்ரமந்திர ப்ரயோகத்தினாலே காவிரியின் நடுவிலே வெள்ளச்சுழலிலே செல்ல ஆரம்பித்தது. அப்போது கூரநாராயணஜீயர் தமது வலது கையில் போட்டிருந்த பவித்திரத்தை வலப்பக்கமாகத் திருப்ப, திருப்பள்ளி ஓடமும் காவிரி நீர் வெள்ளச்சுழலின் நடுவே

**கையில் வலயபவித்ரத்தை வலமாகத் திருப்ப; பெருமாள் திருப்பள்ளி ஓடமும் ப்ரவாஹத்துக்கெதிரே நிலையிலே யெழுந்தருளி, நாய்ச்சிமாரும் பெருமாளும் ஸுகமாகக் கோயிலிலே எழுந்தருளினார்.**

---

நிலைகொண்டிட நம்பெருமாளும் நாய்ச்சிமார்களும் எந்த ஆபத்தும் இன்றி ஆஸ்தானம் எழுந்தருளினார்கள். *(ஸந்யாஸிகள் தமது வலதுகரத்திலே பவித்ரம் தரித்தே எந்த கைங்கர்யத்தையும் செய்யவேண்டும். அந்தச் செயல் ஆசீர்வாதமாக இருந்தாலும் அல்லது திருவாராதனம் ஸமர்ப்பிப்பதாக இருந்தாலும் பவித்ரம் இன்றி காரியம் இல்லை. ஸந்யாஸிகள் கையில் பவித்ரம் தரித்திருந்தனர் என்பதற்கு மேலே குறிப்பிடப்பட்டுள்ள நிகழ்ச்சியே சான்றாகும்.)*

54.5.2. இந்த நிகழ்ச்சிக்குப்பின் கூரநாராயணஜீயர், கோயில் உள்துறை நிர்வாக அதிகாரியும், முதலியாண்டானுடைய திருப்பெயரனாருமான கந்தாடை தோழப்பருடைய உதவி கொண்டு ஊருக்கு மேற்கே பெரியதாக ஓர் ஊருணியை (குளத்தை) வெட்டுவித்து, அதிலே திருப்பள்ளிஓடத் திருநாள் நடத்தும்படி பண்ணிவைத்தார்.


ஸ்ரீரங்கம் தெப்பக்குளம்

ப்ரதிஸம்வத்ஸரமும் திருக்காவேரி பெருக்குவந்தால் திருக்குறளப்பன் ஸந்நிதியும் முழுகிப்போய், கோயிலி லேயும் ஜலம் வருகையில், இச்சேதியை இந்த தேஶாதி

---

*(கூரநாராயணஜீயர் காலந் தொடங்கி திருவரங்கத்தில் தெப்போத்ஸவம் இந்தக் குளத்தில்தான் நடைபெறுகிறது. இந்தக் குளத்திற்கான நீர் காவிரியிலிருந்து வருவதற்காக பல வாய்க்கால்கள் அமைந்துள்ளன. அவையெல்லாம் தற்போது அடைபட்டுக்கிடக் கின்றன. தெப்பக்குளத்திலும் நீர் முழுஅளவில் அதாவது மத்தியிலே உள்ள நீராழி மண்டபத்தின் விளிம்பு வரையில் நிலை கொள்வ தில்லை. இந்தக் காரணத்தினால் தெப்போத்ஸவத்தன்று நம்பெருமாளும் உபயநாய்ச்சிமார்களும் மைய மண்டபமாகிய நீராழி மண்டபத்திற்கு எழுந்தருளுவதில்லை. ஆகவே தற்போது நடைபெறும் தெப்போத்ஸ வத்தை முழுமையான உத்ஸவமாகக் கொள்ள முடியாது. ஒவ்வொரு ஆண்டும் தெப்போத்ஸவ சமயத்தில், குளத்தில் சக்திவாய்ந்த இயந்திரங்களைக் கொண்டு நீர் இறைத்து விடப்படுகிறது.*

*கூரநாராயணஜீயர் காலத்தில் ஆடிப்பதினெட்டாம் நாளன்று தெப்போத்ஸவம் நடைபெற்று வந்தது. அதன்பிறகு சடையவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தில் (கி.பி.1250-1276) காவிரியில் ஊருணி வெட்டி சித்திரை ப்ரஹ்மோத்ஸவத்தின் ஒருபகுதியாக தெப்போத்ஸவம் நடைபெற்றது.*

*கிருஷ்ணதேவராயர் காலத்தில் (கி.பி. 1517) அவர் பெயரில் ஏற்படுத்தப்பட்ட ப்ரஹ்மோத்ஸவம் நடைபெற்று வந்தது. காலப்போக்கில் இந்த ப்ரஹ்மோஸவமானது மாற்றம் பெற்று தெப்போத்ஸவமாக மாசி மாதத்தில், திதி அடிப்படையில் நடைபெறும் உத்ஸவமாக மாற்றம் பெற்றது. தற்போது ஒன்பது நாள் உத்ஸவ மாக நடைபெறும் தெப்போத்ஸவத்தில் அனைத்து நாட்களிலும் விட்டவன் விழுக்காடு ஸ்ரீரங்கநாராயணஜீயர் மடத்திற்கு அனுப்பி வைக்கப்படுவது குறிப்பிடத்தக்கது.)*

பதியான ப்ரபுவுக்கும் அறிக்கைபண்ணி, ஸ்ரீஸேநாபதி து,ரந்த,ரரான கந்தாடைதோழப்பருடனேயும் ஆலோசனை பண்ணி, மேற்கே புந்நாக, தீர்த்த,த்தின் தெருவுக்கு முதலாகத் தெருக்கடைசி திருக்காவேரியை வெட்டிவிடுமளவில், சிந்தாமணி ப்,ராஹ்மணர் தங்களூரெல்லையிலே வெட்ட வொட்டோம் என்று குறுக்கே படுத்துக்கொண்டு, ப்ரதிப,ந்த,கம்

* இதன் தொடர்ச்சியை 442ஆம் பக்கத்தில் காண்க

54.6. ஒவ்வொரு ஆண்டும் திருக்காவிரியில் வெள்ளப் பெருக்கு ஏற்பட்டால் தற்போதைய ராஜகோபுரத்திற்கு அருகில் அமைந்துள்ள திருக்குறளப்பன் ஸந்நிதியும் மூழ்கிப் போய் விடும். மூன்றாம் குலோத்துங்க சோழன் காலத்தில் *(கி.பி.1178 - 1218)* காவிரி தற்போதைய ராஜகோபுரத்திற்கு அருகில் அகண்ட காவிரியாக ஓடிக் கொண்டிருந்தது. காவிரியில் நீர்மட்டம் உயர உயர ஸப்த ப்ராகாரத்திற்குள்ளும் காவிரி வெள்ளம் புகுந்துவிடும். தென்திருக்காவிரியின் அருகில் அமைந்திருந்த திருக்குறளப்பன் ஸந்நிதியும் நீரிலே மூழ்கிவிடும்.

54.6.1. கூரநாராயணஜீயர் அவர் காலத்தில் ஸேனாபதி துரந்தரராய் *(கோயில் உள்துறை நிர்வாஹ அதிகாரியாய்)* விளங்கிய கந்தாடை தோழப்பருடன் கலந்து ஆலோசித்து அப்போது நாட்டை ஆண்டுவந்த சோழமன்னனிடம் *(மூன்றாம் குலோத் துங்கன்)* கோரிக்கை ஒன்றை முன்வைத்தார். அந்த அறிக்கை யில் ஆண்டு தோறும் இந்த வெள்ளப் பெருக்கினால் திருவரங் கத்திற்கு ஏற்படும் அபாயத்தினைத் தடுத்து நிறுத்த வேண்டு மானால் மேற்கே புந்நாக தீர்த்தத்திற்கு அருகில் காவிரியின் போக்கை சிந்தாமணிகிராமத்தின் வழியாகத் திருப்பிவிடவேண்டு மென்றும், அதற்கு அரசனுடைய இசைவு தேவையென்றும் அதில் குறிப்பிட்டிருந்தார்.

54.6.2.அப்போது சிந்தாமணி ப்ராஹ்மணர்கள் கிராம எல்லையிலே படுத்துக்கொண்டு தங்களூர்ப் பக்கம் காவிரியைத்

திசைதிருப்பிவிடக் கூடாது என்று போராட்டம் நடத்தினர். (குடி நீருக்காகவும், விவசாயத்திற்கான நீரினைப் பெறுவதற்கும், சாலை மறியல் குடம் உடைப்புப் போராட்டம். ஓர் ஊரிலிருந்து இன்னொரு ஊருக்கு நீர் எடுத்துச் செல்லும் திட்டத்திற்கு எதிர்ப்பு போன்றவைகள் இன்று நேற்று ஏற்பட்டதல்ல, சோழர் காலம் தொடங்கி நடை பெற்று வரும் நிகழ்ச்சிகளாகும்.)

[திருவரங்கம் கோயில் மூன்றாம் திருச்சுற்றான குலசேகரன் திருச்சுற்றின் கிழக்குப்பகுதியில் கல்வெட்டு எண். A.R.E.No.113 of 1938-39 ஸ்ரீரங்கம் கல்வெட்டு எண்.142 அமைந்துள்ளது. இந்தக் கல்வெட்டானது மூன்றாம் குலோத் துங்கனின் 20-ஆம் ஆட்சியாண்டில் அதாவது கி.பி.1198-ஆம் ஆண்டில் பொறிக்கப்பட்டுள்ளது. மிக நீண்ட சொற்றொடர்களைக் கொண்ட இந்தக் கல்வெட்டு பல முக்கியமான செய்திகளைத் தெரிவிக்கின்றது. அவற்றில் சில கீழே தரப்பட்டுள்ளன.

1. மூன்றாம் குலோத்துங்கனின் இயற்பெயர் வீரராஜேந்திரன்.

2. ஸ்ரீரங்கம், திருவானைக்கா மற்றும் அதைச் சார்ந்த பல கிராமங்களிலும் காவிரி வெள்ளத்தினால் மண் மேடிட்டிருந்தன.

3. பல நஞ்சைநிலங்களும், தோட்டங்களும் உருக் குலைந்தன.

4. காவிரியில் ஏற்பட்ட இந்த வெள்ளத்தினால் அந்தந்த நிலங்களுக்குரிய எல்லைகள் மாற்றம் பெற்றன.

5. அரசனுடைய ஆணைப்படி "அண்ணவாயில் உடையான் காங்கேயராயர் என்பார் நியாயத்தினை எடுத்துச் சொல்பவராகச்" (Arbitrator) செயல்பட்டார்.

6. இரண்டு ஊரிலும் உள்ள தேவஸ்தானத்திற்குச் சொந்தமான நிலங்கள் எவை எவை என்பதைப் பற்றிய விபரங்களைச் சேகரித்து

ஸ்ரீரங்கம் தேவஸ்தானத்திற்குச் சொந்தமான நிலங்களுக்குத் திருவாழிப் பொறித்த கற்களையும் (ஸ்ரீஸுதர்சனம் பொறிக்கப்பட்டகற்கல்), ஜம்புகேஸ்வரர் தேவஸ்தானத்திற்குச் சொந்தமான நிலங்களுக்கு திரிசூலம் பொறிக்கப்பட்ட கற்களையும் எல்லைகளாக ஏற்படுத்தி வைத்தார்.

7. திருச்சிராப்பள்ளியில் வசித்தோருடைய நிலங்கள் புதியதாக திசைதிருப்பிவிடப்பட்ட காவிரியாற்றினால் அழிக்கப்பட்டதால் கொட திட்டை (தற்போதைய கொத்தட்டை) என்னும் ஊரில் அவர்களுக்கு மாற்று நிலம் அளிக்கப்பட்டது. "தென்மெற்கு சிராத் தென்னாற்றில் நி ............. திருச்சிராப்பள்ளி யுடையார் தெவதானம்(தேவதானம்) ஆலங்குடியில் விடவெண்டும் நிலந் திருவரங்கத்துக்கு உடலாக விட்டு விட்ட நிலத்துக்குத் தலைமாறு கொ(ட) திட்டையில் அழகிய மணவாளப் பெருமாள் திரு(நாமத்து)க் காணியிலெ பற்றிப் பரிவற்தனை பண்ணக் கடவர்களாகவும் இப்–"

8. "பரிவர்த்தனைக்குப் பொருந்தாமை சொன்னார் உளராகில் துரோகிகள் பட்டது படக்கடவர்களாக" என்ற வாசகங் களோடு இந்தக் கல்வெட்டு முடிவடைகிறது.

இந்தக் கல்வெட்டு கி.பி.1198ஆம் ஆண்டு ஏற்படுத்தப் பட்டது. இதில் கூறப்பட்டுள்ள நிகழ்ச்சிகளை மீண்டும் கி.பி.1546 ஆம் ஆண்டு பொறிக்கப்பட்ட கல்வெட்டில் முன் நடந்த நிகழ்ச்சிகளை பின்பு நடந்த நிகழ்ச்சிகளோடு இணைத்துக் கூறும் யுக்தி கொண்டு (Flash back) விவரிக்கப்படுகிறது. அவ்வாறு விவரிக்கும்போது அன்று (கி.பி.1198ஆம் ஆண்டு) நடந்த சில செய்திகள் இந்தக் கல்வெட்டில் விவரிக்கப்படுகின்றன.

கி.பி.1546-ஆம் ஆண்டு விஜயநகர மன்னனான சதாசிவராயர் காலத்துக் கல்வெட்டு எண்.A.R.E. No.13 of 1936-37, ஸ்ரீரங்கம் கல்வெட்டு எண்.460, மூன்றாம் ப்ராகாரத்தின் உட்பகுதியில் அமைந் துள்ளது.

இந்த கல்வெட்டின்படி ஔ(வு)க்குத் திருவேங்கட அய்யங்கார் என்று அழைக்கப்பட்ட ஸ்ரீசைலபூர்ணாசார்ய தாதாசார்யருக்கு சிந்தாமணி கிராமத்தைப் பொலியூட்டாக வழங்கியமை தெரிவிக்கப் படுகிறது. அந்தக் கிராமத்தை தாதாசார்யர் ஸ்ரீரங்கநாதனுக்கு தன்னுடைய காணிக்கையாக கொடுத்தார் என்பதும், அவ்வாறு கொடுக்கும்போது "நலந் திகழ் நாராயணஜீயர் எனப்படும்" ஒன்றான ஸ்ரீரங்கநாராயண ஜீயர் காலத்தில் பெரியபெருமாளுக்கு நடைபெற்ற முறையில் திருவாராதனங்கள், அமுதுபடிகள் ஸமர்ப்பித்திட வேண்டுமென்றும் குறிப்பிடப்பட்டுள்ளது.

8-2-1547-ஆம் தேதியிட்ட இந்தக் கல்வெட்டு மூன்றாம் குலோத்துங்கன் காலத்தில் காவிரியானது சிந்தாமணிப்பக்கம் ஒட்டம் கொள்ளும்படி திருப்பிவிடப்பட்டது பற்றியும், அப்பொழுது அவர் களுக்கு கொளக்குட்டைக் (கொடத்தட்டை என்று 1198 ஆம் ஆண்டு கல்வெட்டு இந்த ஊரைக் குறிப்பிடுகிறது. கி.பி.1547ஆம் ஆண்டு கொத்தட்டை கிராமத்தைத் தாதாசார்யர் வம்சத்தவர்கள் கோயிலுக்குச் சொந்தமான கிராமமாக ஸ்ரீபண்டாரத்தில் சேர்ப்பித்தபோது அந்த கிராமத்தில் வசித்தவர்களும் கோயில் கைங்கர்யத்தில் ஈடுபடுத்தப் பட்டனர். இன்றும் கொத்தட்டையார் வம்சத்தவர்கள் பெரிய கோயிலில் பண்டாரிகளாக கைங்கர்யம் செய்துவருகின்றனர்.) கிராமத்தை பரிவர்த்தனை பண்ணிக்கொடுத்ததைப் பற்றியும் குறிப்பிடப் பட்டுள்ளது.

(ராஜகோபுரம் அருகில் ஓடிக்கொண்டிருந்த காவிரியின் பெரும்பகுதி மலடு செய்யப்பட்டு, அதன் வடகரையில் நாணல் செடிகள் நடப்பட்டதாகவும் இந்தக்கல்வெட்டு குறிப்பிடுகின்றது. தற்போது ராஜகோபுரத்திலிருந்து தென்திருக்காவிரிக்குச் செல்லும் வழியில் ஓடும் "திருமஞ்சனக்காவிரியே" கூரநாராயணஜீயர் காலத்து காவிரியின் தெற்குக் கரையாகும். இன்றும் இந்தத் திருமஞ்சனக் காவிரிக்கு மலட்டாறு என்றே பெயர் வழங்கி வருகிறது. பெரிய பெருமாளுக்கு நாலு தளிகை ஸமர்ப்பிப்பதற்கும், அதில் ஒரு

*தளிகையை ஔவுக்கு திருவேங்கட அய்யங்கார் ஸந்தான பரம்பரை அனுபவித்துக்கொண்டு வரக்கடவதாகவும் இந்தக் கல்வெட்டில் குறிப்பிடப்பட்டுள்ளது. மிகச்சிறந்த வரலாற்றுச் செய்தியைப் பறைசாற்றும் கல்வெட்டாக இதை நாம் கொள்ளவேண்டும்.)*

(5) பின்பு நலந்திகழ் நாராயணஜீயர் திருவரங்கத் திருப்பதியை யாறு கொள்ளுகிறது கண்டு மெல் (மேல்) முகம் ஆனை காத்தான் கரைக்கு யந்த்ர ஸ்தாபநமும் பண்ணி சாஸ தாவையும், ப்ரதிஷ்டித்து கிழியாறுங்கிழித்து தென் திருக் காெ(ே)வரி (காவேரி) மலடு செய்வித்து மலடனாறு கெட வடகரை நாணல் நடவும் கிழியாற்றுக்கு தென்கரை னாணல் (நாணல்)

(6) நடாமல் சிந்தாம(ணியில்) இடங்கொடுக்கவும் கட்டளை இட்டு சிந்தாமணி மஹாஜனங்களுக்கு கொள(கு) ட்டை க்ராமம் பரிவர்த்தனை பண்ணிக் கொடுக்கையில் ெ(ே)ழான் (சோழன்) அழைப்பித்து ஸந்நியாசியாநவன் "ஸர்வபூத ஸௌஹார்த்த முண்டாய்" இருக்கவேண்டி இருக்க *(அனைவருடைய நன்மையிலும் நாட்டமுடையவனாக இருக்கவேண்டியவன்.)* இப்படி ப்ராஹ்மண ஹிம்ஸை பண்ண லாமோ என்று கெழ்க (கேட்க) ப்ராஹ்மண ஹிம்ஸைக்கு

(7) ஆஞ்ஞை இடுகிற பரதேவதைதாெ(தானே)ன "[மந்] நிமித்தம் க்ருதம் பாபமபி தர்மமாய கல்பதே!" *(ஸர்வேஶ்வரனான என்பொருட்டுச் செய்யப்பட்ட பாபமும் என் ப்ரபாவத்தால் புண்ணியச் செயலாகவே ஆகிறது;)* என்று ஸ்ரீபகவத் கீதையிலே சொன்னது கண்டு.

*(இந்தக் கல்வெட்டில் ஸ்ரீபகவத்கீதை என்று குறிப்பிடப் பட்டுள்ளது. ஆனால் ஸ்ரீபகவத்கீதையில் இந்த வாக்கியத்திற்கான ஆகரத்தை கண்டு பிடிக்க இயலவில்லை. ஆயினும் இந்த வாக்யம்*

* 437ன் தொடர்ச்சி

பண்ணுகையில், அவர்களுக்கு "பெருமாள் கைங்கர்யம்" என்று எத்தனையாகத் தெரியச் சொன்னாலும், கேளாத படியாலே, அந்த ப₄க₃வத்கைங்கர்ய விரோதி₄களை அறப்பார்த்து (அழிக்க உபாயம் தேடி), திருக்காவேரியையும் தெற்கே

திருமலை ஒழுகில் எடுத்தாளப்பட்டுள்ளது.) செய்தொங் காணு மென்ன அது கெட்டு (கேட்டு) சோழன் ஸந்தோஷித்து இதுவே நினைவானால் இந்தப்பாவம் அடிக்கழஞ்சு பொன் பெறுமென்று ஸ்ரீரங்கநாத தேவற்கு தாரைவாத்து

(8) கொடுத்ததுக்கு பின்பு நெடுநாளைக்கு மேலாகச்சில காலம் பண்டாரவாடையாய் திறந்து போன சிந்தாமணிக்ராமம் ............ தான மாநியம் .......... நஞ்சே ............ புஞ்செ ................ ................. சிந்தாமணி நத்தஞ் செய்தவை சிதடர் வாஸ்து, வாஸ்து சேஷம் ஆறு ப்ராப்தி வாய்க்கால் ப்ராப்தி வெள்ளாங்குடி இருப்பு

(9) (லில்) மற்றும் எப்பேறபட்ட சகல சமுதாய ப்ராப்தியும் Em£mh "நிதி நிக்ஷேபஜலபாஷாணாதி அஷ்டபோக தேஜஸ்வாமங்களும்" உள்பட நமக்கு நம்முடையே ப்ரிய சிஷ்யநாய ஸ்வஸ்தி ஸ்ரீமந் மஹாமண்டலேஸ்வர ஸோமகலுதி திலகாயமானநாந இராம இராஜா ஸதாசிவராய மஹா இராயர்.

(10) கையில் ஏகதேசமாய் தாரை வார்ப்பித்து தருகையில் நாந்(ன்) நலந்திகழ் நாராயணஜீயர் இட்ட கட்டளை படியிலே பெருமாளுக்கே பொலியூட்டாய் இராயர்க்கும் இராஜாவுக்கும் ................. ஸமர்ப்பித்து]

54.6.3. அவ்வாறு போராட்டம் செய்தவர்களிடம் காவிரி திசை திருப்பப்படுவது பெரியபெருமாளுக்கு ஏற்படும் ஆபத்தினை தவிர்ப்பதற்கு என்று சொல்லியும் அவர்கள் செவிசாய்க்கவில்லை. அப்பொழுது கூரநாராயணஜீயர் தம்முடைய மந்த்ர பலத்தால்

*திருப்பி, திருமுடிக்குறை விப்ரநாராயணன் தோப்புக்குக் கிழக்கு முதலாகத் திருவரங்கந் திருப்பதிக்கு இருபுறமும் கரையும் போடுவித்து, அதிலே அணியரங்கன் வாய்த் தளையும் கட்டுவித்து, அந்தக் கரையிலே புந்நாக3 தீர்த்தத் துக்கு ஆக்3நேயபா4க3த்திலே உடைப்பு எடுக்கிற ஸமயமா யிருக்கையில், தம்முடைய ஶிஷ்யனான* ***கருணாகர தா3ஸனை*** *அங்கே காவலாகவைத்து, அவனை அறப்பார்ப்பித்து (தீர ஆராய்ந்து); அதுக்கு வடக்காக, ரக்ஷையாக க்ஷேத்ர தே3வதையையும் ப்ரதிஷ்டி2ப்பித்து, கோயிலுக்கு ரக்ஷையாக க்3ராமதே3வதையான* ***திருவரங்கச்செல்வி****யையும் ப்ரதிஷ்*

---

அவ்விரோதிகளை மனம் மாறச்செய்து விக்ரமநாராயணன் தோப்புக்குக் கிழக்குப் பகுதியிலிருந்து காவிரியைத் திசைதிருப்பி இருபுறமும் கரையெடுத்து அதிலே அணியரங்கன் வாய்த் தளை[லை]யும் *(வாய்க்காலின் தலைப்பு மதகு - Regulator)* கட்டுவித்து, அதன் கரையிலே புந்நாக தீர்த்தத்திற்கு அருகில் உடைப்பு எடுக்கிற சமயத்தில் தம்முடைய சிஷ்யனான கருணாகர தாஸனை அவ்வாறு உடைப்பு எடுக்காத அளவிற்குக் கரையை பலப்படுத்தி மேற்பார்வையிட்டு வரும்படி நியமித்தருளினார். அந்த கரைக்கு வடக்காகக் காவிரியைக் காப்பதற்கு காளியம்மன், பிடாரி, ஐயனார் ஆகியோரை பிரதிஷ்டிப்பித்தார் என்று கோயிலொழுகில் குறிப்பிடப்பட்டுள்ளது.

*(இடிந்துபோன ஒரு கோயிலில் இருக்கும் காளியம்மன், ரத்தக்காட்டேரி, சங்கிலி கருப்பன், போன்ற துர்தேவதைகள் குல தெய்வமாகக் கொள்ளப்பட்டு வருகின்றன. ஸ்ரீவைஷ்ணவக் கோட் பாடுகள் இவற்றை அனுமதிப்பதில்லை. ஆயினும் பெரும்பாலான மக்கள் ஆட்டுமந்தைக் கூட்டம் போல் செயல்படுவதால் தற்காலத்தில் இவர்களை திருத்த இயலாது. இத்தகைய சிந்தனைகளுக்குத் தாம் சார்ந்துள்ள மதத்தைப் பற்றிய உண்மையான அறிவு இல்லாமையே காரணமாகும்.)*

டிப்பித்து, கீழ்ப்புறம் பத்ரம்பண்ணி, இந்தப்படி சுத்ருடைய க்ருத்ரிமங்களுக்கு அவகாசமில்லாதபடி அரணைப்பண்ணி; கோயிலுக்கு மேற்கே பெரியதாக ஒரு ஊரணியை வெட்டு வித்து, அதிலே திருப்பள்ளி ஓடத் திருநாள் நடத்தும்படி பண்ணிவைத்து; கீழையூர் ஐம்புலிங் கத்துக்கு நேராகக் கரையமுகியிங்கரை ப்ரதிஷ்டிப்பித்து, தச்சக்தி அபிவ்ருத மாம்படி (வளர்ச்சியுறும்படி) பண்ணி; கோயிலிலே ஒருத்தரும் குடியிராதபடி பந்த்ரஸ்தாபநம் பண்ணி, ஜ்வரத்தை புண்டாக்கி; கோயிலிலே ராஜமஹேந்த்ரன் திருவீதியிலே கீழண்டையிலே திருமண்டபம் ஜீர்ணோத்தாரணம்பண்ணி, சித்ரங்களை எழுதுவிக்கு மளவில்; சுவரிலே ஸ்ரீராமாயணம் யுத்தகாண்டம் எழுதியிருக்கையில், அந்த ப்ரதிமைகள்

---

54.6.4.ராஜமஹேந்திரன் திருச்சுற்றிலே உறையூர் கமலவல்லி நாய்ச்சியாரையும், சாந்து நாய்ச்சியாரையும் (*துலுக்க நாய்ச்சியாரையும்*),சேரகுலவல்லியையும் புனர்நிர்மாணம் பண்ணிவைத்தார். (*தற்போது உறையூர் கமலவல்லி நாய்ச்சி யாருடைய விக்ரஹம் இந்தத் திருவீதியில் காணப்படவில்லை. ஆயினும் சில இடங்களில் உறையூர் கமலவல்லி நாய்ச்சியார் இருந்ததற்கான அடையாளங்கள் உள்ளன. குறிப்பாக சந்தன மண்டபத்தின் தெற்குப் பகுதியில் ஸந்நிதி கருடனுக்குச் செல்லும் வழியில் இரண்டு அறைகள் காலியாக உள்ளன. அவற்றிலே ஓர் அறையில் உறையூர் கமலவல்லி நாய்ச்சியார் குடிகொண்டிருந் திருக்கக் கூடும்.*)

54.6.5. ராஜமஹேந்திரன் திருச்சுற்றின் வடமேற்கு மூலை யில் அமைந்துள்ள யாகசாலையில் கோபிநாதரையும், நாழிகை கேட்டான் வாசலின் உட்புறம் வடக்குநோக்கி சங்கநிதி பத்ம நிதியையும், அந்தத் திருவாசலின் முகப்பில் பத்ர ஸுபத்ரர் ஆகிய துவாரபாலகர்களையும் ஜீர்ணோத்தாரணம் பண்ணிவைத்தார்.

யதா2ஶாஸ்த்ரமாக இருந்தபடியாலே ராத்ரி நித்யமாக யுத்3த4ங்கள் ப்ரவ்ருத்தங்களாய் விடிவோறே ரக்தமாம் ஸாதி3கள் விழுந்திருக்கக்கண்டு, அங்க3ப4ங்கா3தி3களைப் பண்ணிவைத்தும்; அந்தத் திருவீதியிலே, உறையூர் கமல வல்லி நாய்ச்சியாரையும், சாந்து நாய்ச்சியாரையும், சேரகுல வல்லிநாய்ச்சியாரையும், யாக3ஶாலையிலே கோ3பிநாத2ரையும், ஶங்க2நிதி4 பத்3மநிதி4யையும், அந்தத் திருவாசல் வெளிப்புறத்திலே ப4த்3ரஸுப4த்3ரரையும், ஜீர்ணோத்3த4ரணம் பண்ணுவித்து; குலஶேக2ரன் திருவீதியிலே சேனைவென்றான் திருமண்டபத்துக்கு மேற்கு துலாபுருஷ மண்டபத்திலே ஸ்ரீவராஹநயினாரையும், அதுக்கு வடக்குத் திருமங்கையாழ்வார் திருநடைமாளிகையிலே வஸந்த கோ3பாலனையும், ஹயக்3ரீவரையும்; தெற்கில் ஆரியப4ட்டாள் வாசலுக்குக்

---

54.6.6. குலசேகரன் திருவீதியில் சேரனைவென்றான் திருமண்டபத்தில் *(துலாபுருஷ மண்டபத்தின் மேற்குப்பகுதியில் அமைந்துள்ளது. தற்போது இந்த மண்டபத்தில்தான் நம்பெருமாள் பவித்ரோத்ஸவம் கண்டருளுகிறார்.)* ஸ்ரீவராஹ நாயனாரையும், அந்த இடத்திற்கு வடக்கு பகுதியாகிய திருமங்கையாழ்வார் திருநடைமாளிகையில் வஸந்த கோபாலனையும், ஹய க்ரீவரையும் பிரதிஷ்டை செய்தார்.



*பவித்ரோத்ஸவ மண்டபத்தில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீஹயக்ரீவர்*

கிழக்கே சுந்தரபாண்டியதேவர் துலாபுருஷ மண்டபத்திலே, குழலூதும் பிள்ளையையும், அந்நாதி எம்பெருமானையும், ஆலிநாடன் திருவீதியில் சந்த்₃ரபுஷ்கரணிக்கரையிலே கோ₃விந்த₃னையும், வேத₃வ்யாஸரையும், ஞானப்பிரானை யும்; அகளங்கன் திருவீதி வடக்குத் திருவாசலுக்குக் கிழக்கே, எடுத்தகை அழகியநயினாருக்கு நாய்ச்சியாரையும், எதிராஜன்

---

*(குலசேகரன் திருவீதியின் மேற்குப் பகுதியே திருமங்கை யாழ்வார் திருநடை மாளிகை என்று குறிப்பிடப்படுகிறது. ஆயினும் தற்போது பவித்ரோத்ஸவ மண்டபத்தின் மேற்குப் பகுதியில் ஸ்ரீவராஹ நாயனாரும், ஹயக்ரீவரும், சரஸ்வதியும் எழுந்தருளி யுள்ளனர். அந்தக் காலத்தில் பூர்வசார்யர்கள் ஓலைப்படுத்திய வ்யாக்யானங்கள் மற்றைய நூல்கள் ஆகியவற்றின் பிரதிகள் திருமங்கையாழ்வார் திருநடைமாளிகை என்று அழைக்கப்பட்ட பகுதியில் அமைந்திருந்த சரஸ்வதி பண்டாரத்தில் பாதுகாப்பாக வைக்கப்பட்டிருந்தன. இன்றும் இந்தப் பகுதியில் பல அறைகள் உள்ளதை நாம் பார்க்கலாம். இந்த ஸரஸ்வதி பண்டாரத்தின் காப்பாளராக ஸரஸ்வதிதேவி பிரதிஷ்டை செய்யப்பட்டிருந்தாள். பல படையெடுப்புகளில் சின்னா பின்னமாக்கப்பட்டதால் ஸ்ரீரங்கம் கோயில் பல மாறுதல்களை அடைந்துள்ளது. அவற்றில் ஒன்று சரஸ்வதி பண்டாரத்தில் இருந்த சரஸ்வதி விக்ரஹம், பவித்ரோத்ஸவ மண்டபத்திற்கு இடம்பெயர்ந்திருக்கலாம்.)*

54.6.7. ஆலிநாடன் திருச்சுற்றின் தெற்குப்பகுதியில் ஆர்யபட்டாள் வாசலுக்கு கிழக்கில் ஸ்ரீபண்டாரத்திற்கு எதிரில் ஒருமண்டபம் அமைந்துள்ளது. *(கோயிலொழுகு இந்த மண்ட பத்தை சுந்தரபாண்டியன் துலாபுருஷ மண்டபம் என்று குறிப் பிடுகிறது. ஆனால் கூரநாராயண ஜீயர் காலத்தில் இந்த மண்டபம் சுந்தரபாண்டிய துலாபுருஷ மண்டபம் என்ற பெயருடன் இருந்திருக்க இயலாது. ஏனெனில் முதலாம் சடையவர்மன் சுந்த ரபாண்டியன் தான் பல துலாபுருஷ மண்டபங்களைக் கட்டினான்.*

கோயிலுக்கு வடக்கே, திருவாழியாழ்வானுக்கு எதிராக பார்த்தஸாரதியையும், சக்கரவர்த்தித் திருமகனுக் கெதிராக விட்டலேஶ்வரனையும் ப்ரதிஷ்டிப்பித்தார்.

---

*அவன் ஆட்சி ஆண்டு கி.பி.1250-1276. கூரநாராயண ஜீயர் திருவரங்கத்தில் எழுந்தருளியிருந்த காலத்தில் அதாவது கி.பி.1200-இல் சுந்தரபாண்டியன் பெயரில் அந்த மண்டபம் அமைந்திருக்கமுடியாது. கோயிலொழுகின் குறிப்புகள் பலமுறை எழுதப்பட்ட நிலையிலும், கி.பி.1323-ஆம் ஆண்டு உலுக்கான் படையெடுப்பில் பலர் கொல்லப் பட்டதாலும், ஏடுகள் தீக்கு இரையாக்கப்பட்டதாலும் முரண்பாடான செய்திள் காணப்படுகின்றன.)*

54.6.9.இந்த மண்டபத்தின் ஒரு தூணில் திருக்குழலூதும் பிள்ளையை பிரதிஷ்டிப்பித்தார். *(ஸ்ரீரங்கம் செல்பவர்கள் இன்றும் இந்த விக்ரஹத்தைக் காணலாம். இந்த இடத்தில் திருக்குழலூதும் பிள்ளையைத் தூணிலே பிரதிஷ்டைக் கண்டருளியதற்குக் காரணம் ஒவ்வொரு ஆவணி ரோஹிணியன்று நம்பெருமாள் ஸ்ரீபண்டாரத் திற்கு எழுந்தருளுவார். அங்கு திருமஞ்சனமாகி அரையர்களால் பெரியாழ்வார்திருமொழி ஸேவிக்கப்படும். அன்று விசேஷமான ஆபரணங்களை அணிந்துகொண்டு நம்பெருமாள் காட்சியளிப்பார்.)*

54.6.10. கோயிலொழுகு இந்த திருவீதியில் அந்தாதி எம்பெருமானை பிரதிஷ்டிக்கப்பட்டதாகக் கூறுகிறது. இந்த விக்ரஹம் எங்குள்ளது என்று அறியமுடியவில்லை. மேலும் அந்தாதி எம்பெருமான் என்று எந்த பிம்பத்தையும் வழக்கில் குறிப்பிடுவதில்லை. ஸ்ரீரங்கம், திருவெள்ளறை ஆகிய இரண்டு திவ்ய தேசங்களில் மட்டும் அந்நமூர்த்தி கோயில் கொண்டுள்ளார். கோயிலொழுகை ஏடுபடுத்தியவர் அந்நமூர்த்தி எம்பெருமானை அந்தாதி எம்பெருமான் என்று குறிப்பிட்டிருக்கலாம்.

54.6.11. ஆலிநாடன் திருவீதியில் சந்திரபுஷ்கரிணிக்

*இப்படி இந்தக் கூரநாராயணஜீயர், தேஶாந்தரி ஜீயரா யிருந்து அநேகம் ப்ரகாரம் கோயிலை நிர்வஹித்து அபிமாநி யாயிருக்கிறபடியினாலே, ஸ்தலத்திலே அனைத்துக் கொத்து பரிஜநங்களும், "இப்படி அபிமாநியான ஜீயர் நமக்குத் தலைவராய் அதீநபரராயிருக்கவேணும்" என்று ஆலோசனை பண்ணி, எம்பெருமானார் நியமநத்தையும் அதிக்ரமிக்க மாட்டாதேயிருக்கும் காலத்திலே; கந்தாடையாண்டான் பௌத்ரர் பெரியஆயி யாகம்பண்ண, அந்த யாகஶாலைக்குப் பெருமாள் எழுந்தருள, ஆயியும் ஹ்ருஷ்டராய், தம்முடைய ஸர்வஸ்வத்தையும் பெருமாளுக்கு ஸமர்ப்பிக்க; அநந்தரம் ஒரு உத்ஸவகாலத்திலே, பெருமாள் முதலியாண்டானுக்கு உத்தரம்ஸாதித்த ஸேநாபதிபட்டையமும், சேரன் ஸமர்ப்பித்த*

---

கரையில் கோவிந்தனையும், வேதவியாஸரையும், ஞானப் பிரானையும், அகளங்கள் திருவீதி வடக்குத் திருவாசலுக்கு நேரே அமைந்துள்ள எடுத்தகை அழகியநாயனாருக்கு நாய்ச்சியாரையும், உடையவர் ஸந்நிதிக்கு வடக்கே ஸ்ரீசக்கரத்தாழ்வார் ஸந்நிதிக்கு நேர்எதிரே பார்த்தஸாரதியையும், உள்ளாண்டாள் ஸந்நிதியில் எழுந்தருளியுள்ள சக்கரவர்த்தி திருமகனுக்கு நேர் எதிரில் விட்டலேஶ்வரனையும் பிரதிஷ்டிப்பித்தார்.

54.7. இவ்வாறு இந்த கூரநாராயண ஜீயர் வெளியூரி லிருந்து வந்த ஜீயராயிருந்தும், கோயிலைக் கட்டிக்காத்தபடியால் ஸ்ரீரங்கத்திலே உள்ள அனைத்து கொத்துப் பரிஜனங்களும், இவ்வாறு ஸ்ரீரங்கஸ்ரீயை வளர்க்கும் இந்த ஜீயர் நமக்கு தலைவராய் ஆதீனபரராய் இருக்க வேணும் என்று தம்முள் ஆலோசனை செய்துகொண்டிருக்கும் காலத்தில் முதலியாண்டான் திருவம்சத் தில் அவருடைய ப்ரபௌத்ரரான பெரியாயி, சேநாபதி துரந்தரராய் எழுந்தருளியிருந்தார். இவர் கந்தாடை தோழப்பருடைய குமாரர். ஒரு யாகம் பண்ணும் காலத்தில் தம்முடைய அனைத்து சொத்தையும் யாக சாலைக்கு எழுந்தருளிய நம்பெருமாளுக்கு

தா3நஸாஸநமும், தா3நபூர்வகமாக அந்த ஆயிக்கு ப்ரஸாதி3த்து, ததீ4நமான உடையவரிலச்சினையான திருவாழி மோதிரத்தையும், ஆயி ஸம்மதியுடனே அனைத்துக்கொத்து பரிகரமும் கூரநாராயண ஜீயருக்கு ஸந்நிதி4யிலே ப்ரஸாதி3க்கும்படி பண்ணி, ஜீயரை மட2த்திலே விட்டு வந்தார்கள்.

அதுமுதலாக, **கூரநாராயணஜீயர்** ப4க்த்யதிஶயத்தாலே **நலந்திகழ் நாராயணஜீயரா**யிருந்தவருக்கு "**ஸ்ரீரங்க3 நாராயண ஜீயர்**" என்று திருநாமமாய்த்து. இந்த ஸ்ரீரங்க3நாராயண ஜீயர் கைங்கர்ய விவரம்:- செங்கோல் த4ரித்து ஸ்ரீகார்யம் நிர்வஹிக்கிற கோவணவர் கைங்கர்யத்திலே பிரித்துக் கட்டுகிறதுக்கு விவரம்:- திருமஞ்சநத்துடனே கருவுகல வாசலிலே வந்து, அஞ்சநக்காப்பு முதலான ஸுக3ந்

---

ஸமர்ப்பித்தார். முதலியாண்டான் சந்ததியினரால் அனுபவத்தில் இருந்துவந்த உடையவர் இலச்சினையான திருவாழி மோதிரத்தையும், சேநாபதி பட்டயத்தையும், அனைத்துக் கொத்து பரிகரத்தால் கூரநாராயண ஜீயருக்குக் கொடுத்தார்கள். அதுமுதலாக நலந்திகழ் நாராயணஜீயர் என்ற கூரநாராயண ஜீயருக்கு ஸ்ரீரங்கநாராயண ஜீயர் என்ற சிறப்புத் திருநாமமும் வழக்கத்தில் ஏற்பட்டது.

54.8. இந்த ஸ்ரீரங்கநாராயண ஜீயர் பரம்பரையில் எழுந்தருளியிருக்கும் ஜீயர் மேற்கொள்ளும் கைங்கர்யங்கள்:

54.8.1. செங்கோல் தரித்து ஸ்ரீகார்யம் நிர்வஹிக்கிற கோவணவர் கைங்கர்யங்களில் ஒரு பகுதியான திருமஞ்சனம் கருவுகல வாசலில் வந்தவாறே, நம்பெருமாளுக்கு சாற்றப்படும் அஞ்சனக்காப்பு, ஸ்ரீரங்கநாய்ச்சியார் கோயிலுக்கு அனுப்புகிற அஞ்சனக்காப்பு முதலானவைகளுக்கு திருவாழி இலச்சினையிடுதல்.

த₃ாதி₃களைத் திருத்தி வைத்து, நாய்ச்சியார் கோயிலுக்கு அனுப்புகிற அஞ்சநக்காப்பு முதலான ஸுக₃ந்த₄ங்களுக்குத் திருவாழியிலச்சினையிட்டு, ஸந்நிதி₄யிலே புகுந்து திருவாராத₄நம் நடப்பித்து, அலங்காராஸநார்த்த₂ம் ஸந்நிதி₄யிலேயிருந்து, கஸ்தூரித் திருமண்காப்பு அஞ்சநக் காப்பு சாத்தியருளின பின்பு, நாய்ச்சியார் கோயிலுக்குப் போய், அங்கேயும் திருவாராத₄ந காலத்திலே இலச்சினைப் படியேயிருக்கிற அஞ்சநக்காப்பு கஸ்தூரித் திருமண்காப்பு

---

*(ஸுகந்த பரிமள வஸ்துக்களை இவ்வாறு இலச்சினை யிட்டு அனுப்புவதன் நோக்கம் அவற்றின் தரம், குணம், மணம் சோதிக்கப்பட்டு அனுப்பப்படுகின்றன என்பதற்கான அடையாளம்.*

*பெரியபெருமாள் கைங்கர்யத்திற்கு உரியதான எந்தப் பொருளும் தரம்மிக்க பொருளாய் அமையவேண்டும். அந்த வஸ்து வின் தன்மை உயர்ந்தே காணப்பட வேண்டும். இவற்றை மேற் பார்வையிடுவதற்காகவே ஸ்ரீரங்கநாராயண ஜீயர் பட்டத்தில் இருப்பவர் தம்முடைய இலச்சினையை இடுவது என்ற வழக்கம் ஏற்படுத்தப்பட்டுள்ளது. தற்போது இந்த நடைமுறைகளெல்லாம் மறைந்து விட்டன. கடைத்தெருவிலே விற்கப்படும் தரம் தாழ்ந்த ஸுகந்த பரிமளங்களும், நெய்யும், மற்றைய பொருள்களும் பெரியபெருமாளுக்கு அர்ப்பணிக்கப்படுகின்றன. இந்தப் போக்கினை தடுத்து நிறுத்த யாராலும் இயலவில்லை. "**ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா ப்ரதிவாஸரமுஜ் ஜ்வலா**" என்று அனைத்து ஸ்ரீவைஷ்ணவர்களும் கூறுவதன் பொருள் என்ன?)*

54.8.2. பெரியபெருமாளுக்கு நடைபெறும் திருவாராதங் களையும், மண்டபங்களில் நம்பெருமாள் எழுந்தருளும்போது நடைபெறும் திருவாராதனங்களையும், அலங்கார ஆசனமான கஸ்தூரி திருமண்காப்பு சாற்றியருளின பின்பு, ஸ்ரீரங்கநாய்ச்சியார் ஸந்நிதிக்குச் சென்று அங்கேயும் திருவாராதன கைங்கர்யத்தை

ஆனவுடனே, வெளியிலே புறப்பட்டு எழுந்தருளுகிறதும், புழுகாப்புச் சாத்துவிக்கிறதும், குறுக்காவரணத்துக்குப் பின்பு கோவணவரில் ப்ரதா$_4$நராய் மட$_2$த்திலேயிருந்து நிறைவு குறைவு விசாரிக்கிறதும் கைங்கர்யம்.

இவர் பேர் விவரம்:- பெருமாள் புறப்பட்டுத் திரு வணுக்கன் திருவாசலுக்கு மேற்கே திரும்பினவுடனே ஸேவிக்க, தீர்த்த$_2$மும் பரிவட்டமும் ஒரு திருமாலையும் ஸ்ரீஶட$_2$கோபனும் ஸாதி$_3$த்து, பின்பு செங்கோலதி$_4$காரிக்கு ஸேநை முதலியார் வாசலிலே, அன்றியிலே அங்கேதானே, வரிசைகளை ஸாதி$_3$க்கும்படி பண்ணியும், நித்யமாக செங் கோலுக்கு முன்னே ஸேநைமுதலியார் ஸந்நிதி$_4$யிலே, ப்ரஸாத$_3$ ஸ்வீகாரம் பண்ணுவிக்கிறதும், தீர்த்த$_2$ விநியோக$_3$த் திலும் ப்ரஸாத$_3$ விநியோக$_3$த்திலும் செங்கோலுக்கு முன்னே '**ஸ்ரீரங்க$_2$நாராயணஜீயர்**' என்று அருளப்பாடு ஸாதி$_3$த்து

---

மேற்பார்வையிடுவதும் ஸ்ரீரங்கநாராயண ஜீயருடைய கைங்கர்ய மாகும். ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் புனுகுகாப்பு சாற்றுவிக் கிறதும், கோவணவர் வரிசைக்கு தலைவராகவும், எம்பெருமானார் எழுந்தருளியிருந்த மடத்தின் நிர்வாஹத்தைச் செம்மையாகச் செய்தலும் ஆகியவை இந்த பட்டத்தில் எழுந்தருளியிருக்கும் ஜீயருடைய கைங்கர்யங்கள்.

54.8.3. நம்பெருமாள் புறப்பாடு கண்டருளும் நாட்களில் திருவணுக்கன் வாசலுக்கு மேற்கே திரும்பினவுடனே ஸேவிக்க தீர்த்தமும் பரியட்டமும், ஒரு திருமாலையும், ஸ்ரீசடகோபனும் ஸாதிக்கப்படும். செங்கோல் அதிகாரிக்கு சேனை முதலியார் வாசலிலே எந்த மரியாதையும் ஸாதிக்காமல் மேலைப் படியிலே வரிசைகள் ஸாதிக்கும்படி பண்ணியும், சேனை முதலியார் ஸந்நிதியிலே தம்முடைய தேஹரக்ஷணத்திற்காக ப்ரஸாத ஸ்வீகாரம் செய்வதும், தீர்த்த ப்ரஸாத விநியோகங்களிலே

விநியோகம் ஸாதிக்கிறதும், தேஹதாரணத்துக்கு ஸேனை முதலியார் ஸந்நிதியிலே ப்ரஸாதஸ்வீகாரம் ஸாதிக் கிறதும், கோயில் ஸ்ரீகார்யங்களிலே 'ஸேநாபதி துரந்தரரான ஸ்ரீரங்கநாராயணஜீயர்' என்று திருமுகமெழுதுகிறதும் நூதநமாகையாலே; அநாதியாய் திருமொழித் திருநாளிலே திருமாலை அபிநயத்திலே 'அரங்கனார்க் காட்செய்யாதே' என்கிற ப்ரகரணத்திலே, ப்ரதமம், ஸ்ரீஸேநாபதிதுரந்தரரான கோவணவர் கைங்கர்யத்தை அபிநயிக்கிறதிலே, செங்கோல் தரித்து ஸ்ரீகார்யம் விசாரிக்கிற ப்ரகாரத்தை அநுஸரிக்கிற

---

***ஸ்ரீரங்கநாராயண ஜீயர்*** என்ற அருளப்பாடு ஸாதிக்கப்படுவதும் ஸ்ரீரங்கநாராயண ஜீயருக்கே உரித்தான மரியாதைகள்.

54.9. கோயில் ஸ்ரீகார்ய கோப்புகளிலே ***சேநாபதி துரந்தரரான ஸ்ரீரங்கநாராயண ஜீயர்*** என்று கையெழுத் திடுவது, புதிதாகப் புகுத்தப்பட்ட நடைமுறையாகும்.

54.9.1. இவை புதிதாகப் புகுத்தப்பட்டவை என்பதை நாம் இன்றும் அறிந்துகொள்ளலாம். பகல்பத்துத் திருவிழாவில் ஐந்தாம்நாள் உத்ஸவத்தில் திருமாலை பாசுரங்களுக்கு அரையர் அபிநயம் செய்தருள்வார். அன்றையதின நிகழ்ச்சிகள் "***அரையர் திருவாராராதனம்***" என்று குறிப்பிடப்படுகிறது. அன்றைய தினம் திருமாலை ப்ரபந்தத்தில் முதல் பாட்டு தொடங்கி ஆறாம் பாட்டு வரை அபிநயத் தோடும் தாளத்தோடும் ஸேவிக்கப்படும்.

*மறம்சுவர் மதிளெடுத்து மறுமைக்கேவெறுமைபூண்டு*
*புறம்சுவரோட்டைமாடம் புரளும்போதுஅறியமாட்டீர்*
*அறம்சுவராகிநின்ற அரங்கனார்க்குஆட்செய்யாதே*
*புறம்சுவர்கோலஞ்செய்து புள்கௌவக்கிடக்கின்றீரே.*

என்ற பாசுரத்தில் '***அரங்கனார்க்கு ஆட்செய்யாதே***' என்கிற ப்ரகரணத்திலே ஒவ்வொரு நாளும் விஶ்வரூபம் தொடங்கி

தேயல்லாமல், நூதநமான ஸ்ரீரங்க$_3$நாராயணஜீயரை அநுஸரிக் கிறதில்லை. இந்த ஸ்ரீரங்க$_3$நாராயண ஜீயர் பட்டம் ஸ்த$_2$லத் தாரால் உண்டாக்கினபடியாலே, அதீ$_4$நபரம்பரையாய் வருகை யன்றிக்கே, ஜீயர் திருநாட்டுக் கெழுந்தருளின வுடனே, திருவாழி மோதிரமும் மட$_2$மும் ஸ்ரீப$_4$ண்டா$_3$ரத்திலே சேர; பரிகரங்களும், அதுக்குப் பின்பு ஸ்த$_2$லத்திலே அனைவரும் ஸம்மதித்து, ஒரு ஜீயரை "ஸ்ரீரங்க$_3$நாராயண ஜீயர்" என்று ஸந்நிதி$_4$யிலே அவர்வரிசையை ஸாதி$_4$த்து, திருவாழிமோதிரமும் ஸாதி$_4$த்து, மட$_2$த்திலேயும் கொண்டு போய் விட்டு, அநிவாரண ஸ்ரீப$_4$ண்டா$_3$ரத்திலே செலவழிக்கிறதாக நடந்தது.

துலுக்காவணத்துக்குப் பின்பு, காலவிஶேஷத்திலே, உத்தமர்கோவில் ஸ்ரீரங்க$_3$ராஜர் ஸ்ரீரங்க$_3$நாராயணஜீயராய்,

---

அரவணை ஈறாக நடைபெறும் நிகழ்ச்சிகளை அரையர் அபிநயித்துக் காட்டுவார். ஸ்ரீரங்கநாராயண ஜீயர் சேனாபதி துரந்தரராய் செய்தருளும் கைங்கர்யங்களை அபிநயத்தில் வெளிப்படுத்துவதில்லை. அந்தக் கைங்கர்யம் இடையில் ஏற்பட்டதாலே அவ்வாறு அபிநயம் செய்வதில்லை.

51.10. ஸ்ரீரங்கநாராயண ஜீயர் பட்டம் ஸ்தலத்தாரால் உண்டு பண்ணப்பட்டது. பட்டத்தில் எழுந்தருளியிருந்த ஜீயர் ஸ்வாமி பரமபதித்தவுடன் அந்தப் பட்டத்திற்குரித்தான திருவாழி மோதிரமும், மடமும் ஸ்ரீபண்டாரத்திலே சேர்க்கப்படும். அதன் பின்பு ஸ்தலத்தார்கள் அனைவருடைய சம்மதத்துடன் ஒரு ஜீயரை ஸ்ரீரங்கநாராயண ஜீயராக தேர்ந்தெடுத்த பின் அவருக்கு பெரியபெருமாள் ஸந்நிதியிலே அந்த பட்டத்திற்கு உண்டான மரியாதைகளை ஸாதித்து திருவாழி மோதிரத்தினையும் அவரிடம் சேர்ப்பித்து, மடத்திலே கொண்டுபோய் விடுவார்கள். அன்றைய தின செலவுகள் அனைத்தும் ஸ்ரீபண்டாரக் கணக்கிலே எழுதப்படும்.

51.11. முகம்மதியர்களுடைய படையெடுப்பிற்குப் பின்பு

*வாசாலகராகையாலே மடத்துக்கு ஸ்ரீரங்கராஜர் திருவாராதனமுண்டுபண்ணி, அதீநம் ஸ்ரீபண்டாரமாகையாலே, ஸ்ரீரங்கராஜர் திருவாராதநத்துக்குத் திருக்கொட்டாரத்திலே அமுதுபடி, நெய்யமுது, திருவிளக்கெண்ணெய், பாலமுதுக்குப்பசு, அதுக்குத் தவிடு முதலானதுகளுமுண்டாக்கிக் கொண்டு பற்றினார். கோயில் பரிஜநங்களில், ஶூத்ரக் கொத்துக்கு ஆஶ்ரயணமும் ஸாதித்துக்கொண்டு வந்தார்.*

*ஸ்தலத்தாரனைவரும் கல்பித்த கட்டளைப்படிக்கு, உடையவர் நடப்பித்த ஸம்ப்ரதாயநுகுணமாகக் கொத்துக்கு நிர்ணயமும், ஜீயர் ஏகாங்கி வ்யவஸ்த்தையும், இவர்களுக்குக் கைங்கர்யமும், திருமுகப்பட்டையமாக தர்மவர்மாவின் திருமதிளிலே திருவணுக்கன் திருவாசலுக்கு மேற்கே ஶிலா லிகிதம் பண்ணுவித்தார்கள்.*

---

உத்தமர்கோயில் ஸ்ரீரங்கராஜர் என்பார் ஸ்ரீரங்கநாராயண ஜீயர் பட்டத்தில் எழுந்தருளியிருந்தார். இவர் தம்முடைய வாக்கு வன்மையால் மடத்தில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீரங்கராஜருக்கு திருவாராதன க்ரமங்களை ஏற்படுத்தி வைத்ததோடு மட்டு மல்லாமல் ஒவ்வொரு நாளும் திருக்கொட்டாரத்திலே இருந்து அமுதுபடி, நெய்யமுது, திருவிளக்கெண்ணை, பாலமுதுக்கு பசு, அதுக்குத் தவிடு போன்றவற்றை அனுப்பிவைக்கும்படியான ஏற்பாடுகளையும் செய்துவைத்தார்.

51.11.1. இவ்வாறாக ஸ்தலத்தார் அனைவரும் ஏற்படுத்தி வைத்த கட்டளைப்படியும், உடையவருடைய ஆணைக்கு உட்பட்ட கொத்துக்குத் தலைவராக ஸ்ரீரங்கநாராயண ஜீயர் விளங்கியமையும் அந்த ஸ்ரீரங்கநாராயண ஜீயருக்கு ஏகாங்கிகள் உதவியாளர்களாக இருந்தார்கள் என்ற விவரங்களும், அவர்களுக்கு ஏற்பட்ட கைங்கர்யங்களும், தர்ம வர்மாவின் திருமதிளிலே, திருவணுக்கன் வாசலுக்கு மேற்கே கல்வெட்டாக ஏற்படுத்தி வைத்தார்கள் என்று கோயிலொழுகு குறிப்பிடுகிறது. ஆயினும் தற்போது அத்தகைய கல்வெட்டு காணப்படவில்லை.

## பெரியாயி, சிறியாயி வைப₄வம்

52. முதலியாண்டான் பௌத்ரரான கந்தாடைதோழப்பர் ஸ்ரீகார்யம் நிர்வஹிக்கையில்; அவர் குமாரரரான பெரிய

---

தொண்டைமண்டலத்தில் காஞ்சிபுரத்திற்குக் கிழக்கே பச்சை வாரணப் பெருமாள்கோயில் என்று அழைக்கப்படும் புருஷமங்கலம் என்ற ஊரில் வாதூல கோத்ரத்தில் தோன்றியவர் அனந்தநாராயண தீக்ஷிதர். அவருடைய பத்னி பூமிநாய்ச்சியார். இவர் ஸ்ரீராமாநுஜரின் சகோதரி ஆவார். கி.பி.1033-ஆம் ஆண்டு சித்திரை மாதத்தில் புனர்வஸு நக்ஷத்ரத்தில் அனந்தநாராயணதீக்ஷிதர் பூமிநாய்ச்சியார் தம்பதிகளுக்குப் புத்திரராக ஸ்ரீமுதலியாண்டான் அவதரித்தார். ஸ்ரீமுதலி யாண்டானும் இராமானுசருடன் திருவரங்கத்துக்கு எழுந்தருளி அவருடன் கூடியிருந்து பல கைங்கர்யங்களை நடத்திக்கொண்டுவந்தார். இராமானுசருக்கு திரிதண்டம் போல விளங்கிவந்தவர் முதலியாண்டான்.

கூரத்தாழ்வான் "திருவரங்கச் செல்வனாரால் உபய விபூதியும் தம்வசமாக்கப்பெற்ற பெருமை வாய்ந்த ஜகதாசார்யரான இராமானு சருடன் **பதக்கு** ஆத்ம ஸம்பந்தம் இருப்பினும் முதலியாண்டானைப் போலே **உழக்கு** தேஹஸம்பந்தம் நமக்கு இல்லையே" என்று குறைபட்டுக் கொள்வராம். எம்பெருமானாருக்கும் முதலியாண் டானுக்கும் உண்டான உறவை

**அஜஹத்பாகிநேயத்வம் பாதுகாத்வம் த்ரிதண்டதாம் |**
**ஸம்ப்ராப்தோ யதிராஜஸ்ய குணைஸ்தத்ப்ரீதி ஹேதுபி ||**

[*"மகிழ்விக்கும் ஆத்மகுணபூர்த்தியால் யதிராஜருக்கு விலகாத ஸகோதரிபுத்ரர் என்ற உறவையும், பாதுகையாகையையும், த்ரிதண்டமாகையையும் ஆகிய மூன்று நிலைகளையும் பெற்றார் (முதலியாண்டான்)*" ] என்று பூர்வர்கள் அருளிச்செய்து போருவர்.

முதலியாண்டான் தமது ஆறு திருக்குமாரத்திகளையும் இராமானுசர் நியமனப்படி, 74 ஸிம்ஹாஸனாதிபதிகளில் (1) முடும்பை நம்பி (2) முடும்பை அம்மாள் (3) ஆஸூரிப் பெருமாள் (4) கிடாம்பிப் பெருமாள் (5) குமாண்டூர் இளையவில்லி ஆச்சான் (6) வங்கிபுரத்து நம்பி. இவர்களின் திருவம்சத்தில் உதித்த குமாரர்களுக்குக் கன்னிகா தானம் செய்து கொடுத்தார்.

தமக்குப்பிறகு பெரியபெருமாள் கைங்கர்யத்தைத் தொடர்ந்து செய்வதற்கு ஆண் சந்ததி இல்லையே என்று வருத்த முற்றிருந்தார். இவருடைய திருவுள்ளத்திலே ஒடுகின்ற இந்தக் குறையை அறிந்தவரான இராமானுசரும் முதலியாண்டானை அழைத்து தான் அமுது செய்த சேஷமான "போனகம் செய்த சேடத்தைக்" கொடுத்து இதை தேவரீர் பார்யையிடத்திலே தந்து ஸ்வீகரிக்கும்படிச் செய்யும் என்று நியமிக்க, முதலியாண்டான் இராமானுசர் நியமனப்படி தமது பத்நியிடம் அந்த மஹா ப்ரஸாதத்தைத் தந்து ஸ்வீகரிக்கும்படி செய்தருளினார்.

அது முதலாக முதலியாண்டான் தேவிகளும் கர்ப்பம் தரித்துப் பன்னிரு திங்கள் ஆனவளவிலே கி.பி.1108-ஆம் ஆண்டு மாசி மாதம் புநர்வஸு நக்ஷத்ரத்தன்று ஆசார்யரான இராமானுசரின் ப்ரஸாத விசேஷத்தினாலே கந்தாடை ஆண்டான் திருவவதாரம் செய்தருளினார்.

முதலியாண்டானும் ஆசார்ய மஹாப்ரஸாதத்தாலே அவதரித்த படியாலே இளையாழ்வாரான இராமானுசர் என்று தம்முடைய புத்திரர்க்கு திருநாமம் சாத்தியருளினார்.

இராமானுசர் நியமனப்படி தாமே இவருக்கு வேத சாஸ்த்ராதி, ஸ்ரீபாஷ்யக்ரந்தங்கள், திவ்யப்ரபந்தங்கள் முதலானவைகளை ஸாதித் தருளினார். பின்பு, ஆட்கொண்டவில்லி ஜீயர் ஸந்நிதியிலே ஸகல ரஹஸ்யார்த்தங்களும் கற்ற கந்தாடையாண்டான் தமது 18வது திருநக்ஷத்திரத்திலே திருக்கல்யாணம் செய்விக்கப்பட்டவராய், நம்பெருமாள் ஸ்ரீகார்யத்திலும் தர்சனநிர்வாகத்திலும், இராமானுசர்

*ஸ்ரீபாதத்திலேயேற்பட்டதான ஸ்வரூப கைங்கர்யத்தில், திருத்தகப்பனாரான முதலியாண்டானுக்கு உசாத்துணையாய் இருந்து வந்தார். முதலியாண்டான் கி.பி.1136-ஆம் ஆண்டு திருநாடு அலங்கரித்தார்.*

52. கந்தாடை ஆண்டானும் பெரியபெருமாள் ஸ்ரீசேனாபதி துரந்தரராக 95 திருநக்ஷத்ரம் "வையம் மன்னி வீற்றிருந்து விண்ணுமாள்வர்மண்ணூடே" என்கிறபடியே கோயிலிலே ஸ்ரீகார்யம் நிர்வஹித்து எழுந்தருளியிருந்தார்.

52.1. கந்தாடை ஆண்டானுக்குப் பெரியபெருமாள் அநுக்ரஹத்தாலே திருவாடிப் பூரத்தன்று திவ்ய மங்கள ரூபத்தோடே கூடின ஒரு குமாரர் திருவவதாரம் செய்தருளினார். அவருக்கு பச்சைவாரணப்பெருமாள் என்ற திருநாமம் சாற்றப் பெற்றது.

52.1.2. நம்பெருமாள், ஒரு மஹோத்ஸவத்திலே முதலியாண்டானின் திருப்பேரனாரும், கந்தாடை ஆண்டானின் திருக்குமாரரானவரும், ஸ்ரீகார்ய துரந்தரரருமான வாதூல தேசிக ச்யாம ஹஸ்தீசரை *(பச்சை வாரணப் பெருமாளை)* குளிரத் திருக்கண்களால் நோக்கியருளி "நீர் நமக்கு தோழப்பரன்றோ" *(உற்ற நண்பர்)* என்று சோதிவாய்த் திறந்து நியமனமான வன்று தொடங்கி இவருக்குக் கந்தாடைதோழப்பர் என்ற சிறப்புத் திருநாமம் உண்டாயிற்று. ஸ்ரீமணவாளமாமுனிகள் தம்முடைய உபதேசரத்தினமாலை ப்ரபந்தத்திலே,

*துன்னு புகழ்க் கந்தாடை தோழப்பர் தம்முகப்பால்,*
*என்ன உலகாரியனோ வென்றுரைக்க*
*பின்னை உலகாரியன் என்னும் பேர் நம்பிள்ளைக்கோங்கி*
*விலகாமல் நின்றது என்றும் மேல். (உபதேச ரத்தினமாலை-51)*

என்று அருளிச்செய்துள்ளார்.

52.1.3. கூரத்தாழ்வானைத் திருவடி பணிந்த ஒரு

*வரத₃ாசார்யர் சின்னவரத₃ாசார்யர் இருவரும், ஜ்ஞாநப₄க்தி வைராக்₃ய நிஷ்ட₂ர்களாய், அழகியமணவாளப்பெருமாள்*

---

ஸ்ரீவைஷ்ணவர் ஆச்ரம, ஸ்வீகாரம் செய்து கொண்டு கூர நாராயண ஜீயரென்றும், நலந்திகழ்நாராயண ஜீயரென்றும், திருநாமங் களுடன் கூடியவராய், ஸுதர்சன மஹாமந்திரமும் கைபுகுந் தவராய் ஸுதர்சன உபாஸகராய் இருந்துகொண்டு ஸ்தலத்திற்கு *(ஸ்ரீரங்கம்)* பல உபகாரங்கள் செய்து கொண்டிருந்தார்.

52.1.4. ஒரு ஆடி பதினெட்டாம் பெருக்கிலே நம்பெருமாள் எழுந்தருளியிருந்த தெப்பமானது வெள்ளத்தில் அடித்துச்சென்றிட, இவ்வாறு காவிரியாற்றில் தெப்போத்ஸவம் கொண்டாடுவது நம்பெருமாளுடைய பாதுகாப்புக்கு உகந்ததல்ல என்று தீர்மானித்த கந்தாடை தோழப்பரும், கூரநாராயண ஜீயரும் புதிதாக ஸ்ரீரங்கத்தின் மேற்குப்பகுதியிலே தெப்பக்குளம் ஒன்றினை ஏற்படுத்தினார்கள். *(பார்க்க பக்கம் 435)*

52.1.5. கந்தாடைத் தோழப்பருக்கு [1] பெரிய வரதாசார்யர், [2] சிறிய வரதாசார்யர், [3] ஈயான் ராமாநுஜாசார்யர், [4] அம்மாள் என்கிற தேவராஜகுரு என்ற திருநாமம் கொண்ட நான்கு திருக்குமாரர்கள் அவதரித்தருளினார்கள்.

52.2.1. கந்தாடைத்தோழப்பருடைய காலத்திற்குப் பிறகு அவரது குமாரர்களான பெரிய வரதாசார்யர், சிறிய வரதாசார்யர் ஆகிய இருவரும் நம்பெருமாள் ஸ்ரீகார்யத்திற்கு கடவர்களானார்கள்.

52.2.2. பெரிய வரதாசார்யர், சிறிய வரதாசார்யர் இருவரும் பெரியபெருமாளுடைய கைங்கர்யங்களை மேற் கொண்டு வருகையில் ஒருநாள் சிறிய வரதாசார்யர், பெரிய பெருமாளுக்கு ஸமர்ப்பிப்பதற்காகப் பாலமுது காய்ச்சிக் கொண்டு வந்தார். அவ்வாறு அவர் கொண்டு வந்த பாலமுதில் ஒரு துரும்பு இருக்கக்கண்ட பெரியவரதாசார்யர், இந்தப்பால் பெரிய

திருமேனி, திருப்பவள கைங்கர்யங்களை ஆராய்ந்து கொண்டு, நித்யம் பாலமுது காய்ச்சி அமுது செய்யப் பண்ணுகையில்; ஒருநாள் ராத்ரி சின்னவரதாசார்யர் பாலமுது காய்ச்சிப் பெருமாளுக்கு அமுது செய்யப்பண்ணி, பெரியவரதாசார்யருக்குக் காட்டியருள; அவரும், அந்தப் பாலிலே த்ருணமிருக்கக்கண்டு, 'இது பெரிய பெருமாள் திருமிடற்றில் குத்தும்' என்று தொண்டை விக்கி மோஹிக்க; சின்னவரதாசார்யரும், அது கேட்டு மூர்ச்சித்து, க்ரமத்திலே மோஹம் தெளிந்தவாறே, பெரிய பெருமாள் ப்ரஸந்நராய் இருவருக்கும் மாத்ருபாவனையாக "**பெரியாயி, சிறியாயி**" என்று திருநாமம் ஸாதித்தார். சில காலத்துக்குப் பின்பு, ராஜகோபத்தாலே பெரியாயி அதீநம்விட்டு, திருமழிசைக்கு

---

பெருமாளுக்கு ஸமர்ப்பிக்கப்பட்டிருந்தால் அதில் உள்ள துரும்பானது பெரியபெருமாள் நெஞ்சிலே குத்தியிருக்குமே என்று ஒரு தாய் நினைப்பது போல நினைந்து மூர்ச்சையடைந் தார். இவ்வாறு தன்னுடைய தமையனார் அரற்றிக்கொண்டு மூர்ச்சையடைந்ததைக் கண்ட சிறிய வரதாசார்யரும் மயக்கமுற்று கீழே சாய்ந்தார்.

52.2.3. இவ்விருவருடைய தாயன்பை உலகோர் அறிந்து கொள்ளும் வண்ணம் பெரியபெருமாள் சோதிவாய்த் திறந்து அவ்விருவரையும் பெரியாயி, சிறியாயி என்ற விசேஷத் திருநாமம் இட்டருளினார். *(ஆயி-தாய்)*

52.3.1. பெரிய வரதாசார்யர் என்கிற பெரியாயி ஒரு பங்குனி மாதத்திலே பெரும் வேள்வி ஒன்றினைச் செய்தார். அப்போது நம்பெருமாளுக்குப் பெரியதிருநாள் எனப்படும் பங்குனி ப்ரஹ்மோத்ஸவம் நடைபெற்று வந்தது. நம்பெருமாள் ஒருநாள் ஆயியின் யாகசாலைக்கு மேற்காக ஒரு திருமண்ட பத்திற்கு எழுந்தருளும்போது பெருமழை பொழியத் தொடங்கியது.

*எழுந்தருள; கந்தாடை தோழப்பரும், பெருமாள்கோயிலுக்கு எழுந்தருளினார்.*

---

52.3.2. அந்த சமயத்தில், மழை வலுக்கும்முன் நம்பெருமாளை தம்முடைய யாகசாலைக்கு எழுந்தருளப் பண்ணிக்கொண்டு வருவதற்கான ஏற்பாடுகளை செய்து தாம் யாகசாலையில் எழுந்தருளியிருந்தார் பெரியாயி. அவ்வாறு எழுந்தருளிய நம்பெருமாள் திருவடிகளில் ஆயி தம்முடைய சொத்துக்களையும், ஸந்நிதி நிர்வாஹம் உட்பட அனைத்தையும் ஸமர்ப்பித்தார்.

52.3.3. வாதூலதேசிகபதம் நிர்வஹித்து வந்த ஆயி சுவரநாராயண ஜீயரிடம் இராமானுசருடைய திருவிலச்சினையான திருவாழி மோதிரத்தை ஸாதித்து, கோவணவர் கைங்கர்யத்திலே ஒரு பகுதியான கஸ்தூரி திருமண்காப்பு, புனுகுகாப்பு சாற்றும் கைங்கர்யத்தினை அவருக்குத் தந்து சேனைமுதலியார் ஸந்நிதியிலே அவருடைய ஜீவனோபாயத்திற்கு மாதுகரம் *(பிக்ஷை)* சாதிக்கும்படியும், உடையவர் எழுந்தருளியிருந்த மடத்தை அவருக்கு ஸாதித்தார்.

52.4. சில காலத்திற்குப் பிறகு நாட்டை ஆண்டுவந்த சோழ மன்னன் பெரியாயி இடத்தில் அபசாரப்பட்டவளவிலே, பெரியாயியும் ஸ்ரீரங்கத்திலே இருக்கும் இருப்பைத் தவிர்ந்து திருமழிசைக்கு எழுந்தருளினார். அவர் திருத்தகப்பனாரான கந்தாடைதோழப்பரும் பெருமாள் கோயிலேற *(காஞ்சிபுரம்)* எழுந்தருளினர்.

53.1. சில காலத்திற்குப் பிறகு காஞ்சீ தேவப்பெருமாள் கந்தாடைதோழப்பர் ஸ்வப்நத்திலே “உம்முடைய மூன்றாவது குமாரரான ஈயான் ராமாநுஜாசார்யராலே ஸ்ரீரங்கம் சேரப்போகிறீர்” என்று அருளிச்செய்தார்.

## ஈயான் ராமாநுஜாசார்யர் வைப₄வம்

53. சிலகாலத்துக்குப் பின்பு, தே₃வப்பெருமாள், கந்தாடை தோழப்பர் ஸ்வப்நத்திலே, ப்₄லோகஷட்கத்தாலே 'உம்முடைய மூன்றாம் குமாரராலே ஸ்த₂லம் சேரப்போகிறீர்' என்று நியமிக்க; பின்பு, ஒருகாலத்திலே பெரியாயி திருவடிகளிலே அபசாரப்பட்ட கலிகாலசோழன் மாண்டு, சோழப்பட்டங்கள் குலைந்து, பஞ்சதிருவடி முத்துக்ருஷ்ண ராஜா ராஜ்யம் பண்ணுகையில், அழகியமணவாளப் பெருமாள் அவன் ஸ்வப்நத்திலே, 'நம் கார்யம் பார்க்கைக்கு தே₃வப் பெருமாள் ஸந்நிதி₄யிலே போயிருக்கிற தோழப்பர் குமாரர் ஈயானை அழைப்பித்து, முதலியாண்டானதீ₄நத்தைத் தத₃தீ₄ந மாக்கும்' என்று சொல்லி நியமித்தபடியினாலே, அவனும்

---

53.1.1. அதன் பிறகு பெரியாயி திருவடிகளிலே அபசாரப் பட்ட சோழன் இறந்துபட்டான். சோழருடைய ஆதிக்கம் வீழ்ச்சியுற்று, பஞ்சத் திருவடி முத்துகிருஷ்ணராஜா நாட்டை ஆட்சி செய்து கொண்டிருந்த காலத்தில் நம்பெருமாளும் அவன் கனவிலே காட்சியளித்து "நம் கார்யம் பார்க்கைக்கு தேவப் பெருமாள் ஸந்நிதிக்குப் *(காஞ்சிபுரம்)* போயிருக்கிற கந்தாடை தோழப்பர் குமாரர் ஈயானை அழைப்பித்து முதலியாண்டான் ஆதீனத்தைத் தததீனமாக்கும் *(அவருக்கு உரியதாகச் செய்யும்)* என்று நியமித்தருளினார்.

*(இந்த காலகட்டத்தில் நாயக்க மன்னரான முத்துகிருஷ்ண ராஜா நாட்டை ஆண்டுகொண்டிருக்கவில்லை. சோழர்களுடைய நலிவுற்ற காலம், ஹொய்சாளர்களுடைய ஆதிக்கம், அதன் பிறகு பாண்டியர்களுடைய எழுச்சி, முகம்மதியர்களுடைய படையெடுப்பு (கி.பி.1311), அந்தப் படையெடுப்பு நிகழ்ந்த சில ஆண்டுகளுக்குப் பிறகு ஏற்படுத்தப்பட்ட விஜயநகரப் பேரரசு (கி.பி.1336), அந்த விஜயநகரப் பேரரசின் 250 ஆண்டு ஆட்சிக்குப் பிறகு*

அவரை அழைப்பித்து, அவர் ஶிஷ்யனாய், பூர்வப்ரகாரம் எல்லாவற்றையும் அவரதீநம் பண்ணினான். அந்த **ஈயான் ராமானுஜாசார்யரும்**, வாதூலதேஶிகராய் அநேக கோபுர ப்ராகார மண்டபங்களை ஜீர்ணோத்தாரணம் பண்ணி, ஸ்வாமிக்கு நித்யோத்ஸவ பக்ஷோத்ஸவாதிகளையும் திருமேனி திருப்பவளோபசாரங்களையும் பயபக்த்யதிஶயத்தோடே நடத்திக்கொண்டு கார்யம் நிர்வஹித்தார்.

---

*ஏற்பட்டது நாயக்கர்களுடைய ஆட்சி. கோயிலொழுகின் இந்தப் பகுதி நாயக்கர்கள் காலத்தில் எழுதப்பட்டது என்பது இதனால் பெறப்படுகிறது. ஸ்ரீவைஷ்ணவ ஆசார்யர்களுடைய வரலாறு எழுதுவதில் ஒவ்வொருவரும் எதிர்கொள்ள வேண்டிய மிகக் கடினமான பகுதி ஆண்டுகள் கணக்கு. அதற்கொரு உதாரணம் கோயிலொழுகின் இந்தப்பகுதியில் காணப்படும் "**கலிகாலசோழன் மாண்டு சோழப்பட்டங்கள் குலைந்து, பஞ்சதிருவடி முத்து கிருஷ்ண ராஜா ராஜ்யம் பண்ணுகையில்**" என்ற பகுதி. முத்து கிருஷ்ணப்ப நாயக்கருடைய காலம் கி.பி.1601-1609. ஈயான் ராமாநுஜா சார்யர் ஸ்ரீரங்கத்திற்கு வந்தகாலம் கி.பி.1220-க்கு மேற்பட்டதாக இருக்கவேண்டும். இந்தக் காலகட்டத்தில் பாண்டியர்கள் சோழமண்டலத்தை தமது ஆட்சிக்குட்பட்ட பகுதியாகக் கொண்டிருந்தார்கள்.)*

53.1.2. அந்த நியமனப்படியே அந்த தேசாதிபதி ஈயான் ராமானுஜாசார்யரை திரும்பவும் கோமிலுக்கு *(ஸ்ரீரங்கம்)* எழுந்தருளப் பண்ணுவித்து அவர் திருவடிகளிலே பணிந்து, முன்புபோலவே எல்லாவற்றையும் அவருக்கு அளித்து, அவரை ஸ்ரீகார்யதுரந்தரராய் வாதூல தேசிகபதம் நிர்வஹிக்கும்படி பண்ணினான்.

53.2.1. அந்த வாதூல தேசிகரான ஈயான் ராமானுஜாசார்யரும் நம்பெருமாள் ஸ்ரீகார்யத்தையேற்று வாதூல தேசிகராய் அனேக கோபுர ப்ராகார மண்டபங்களை நூதனமாகப் பண்ணி, நம்பெருமாளுக்கு அனைத்து கைங்கர்யங்களையும் செய்து கொண்டுவந்தார்.

## எம்பெருமானடியாள் கோயிலைக்காத்தது

54. அவர் குமாரர் **திருக்கோபுரத்துநயினார்**, நரஸிம்ஹ ராஜா துரைத்தனத்தில், பஹுகாலம் ஸ்ரீகார்யம் நிர்வஹித்தார். அவர் இரண்டாம் குமாரரான **சிற்றண்ணர்**, வாதூல தேசிக பத நிர்வாஹகராய், ஸ்ரீரங்க ஸ்ரீகார்ய துரந்தரராய், பஞ்ச திருவடி கேஶவராஜாவைத் தொட்டு ஸ்வாமிக்கு அனைத் தழகும் கண்டருளப்பண்ணி, அநேக கைங்கர்யங்களையும் பண்ணிக்கொண்டிருந்தார். பின்பு, அவர் குமாரர் **ஸ்ரீரங்கராஜ நாதன் வாதூலதேஶிகர்**, பஞ்ச திருவடி வீரப்ப ராஜாவாலே, அழகியமணவாளப் பெருமாளுக்கு அநேக கைங்கர்யம்

---

54. ஈயான் ராமாநுஜாசார்யருக்குப் பிறகு அவருடைய திருக்குமாரரான திருக்கோபுரத்து நாயனார் ஸ்ரீகார்யம் நிர்வஹித்து வந்தார். அவருடைய காலத்திற்குப்பிறகு, நாயனாரின் இரண்டாவது குமாரரான சிற்றண்ணர் ஸ்ரீகார்யம் பார்த்து வந்தார். அவர் காலத்தில் பஞ்சதிருவடி கேசவ ராஜாவின் துணைகொண்டு அநேக கைங்கர்யங்களை மேற்கொண்டு வந்தார். சிற்றண்ணருடைய குமாரர் ஸ்ரீரங்கராஜநாதன் வாதூல தேசிகர். இவருடைய குமாரர் நரஸிம்ஹ தேசிகர்.

*[கோயிலொழுகில் இந்த ஸ்ரீரங்கராஜநாதன் வாதூலதேசிகர் பஞ்சதிருவடி வீரப்பராஜா அளித்த நிதிகொண்டு அழகியமணவாளப் பெருமாளுக்குப் பல கைங்கர்யங்களை நடப்பித்து வந்தார் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இந்தக் குறிப்பு வரலாற்றுச் செய்திகளுக்கு முரண்பட்டதாகும். இந்தக் காலகட்டத்தில் பாண்டியப் பேரரசுக்கு உட்பட்டபகுதியாகத் திருவரங்கம் விளங்கிவந்தது. கி.பி.1?25-ஆம் ஆண்டு தொடங்கி கி.பி.1323-ஆம் ஆண்டு வரை, பாண்டிய மன்னர்களான மாறவர்மன் முதலாம் சுந்தரபாண்டியன், மாறவர்மன் இரண்டாம் சுந்தரபாண்டியன், சடையவர்மன் முதலாம் சுந்தர*

நடப்பித்துக்கொண்டு, ஜ்ஞாநப₄க்தி வைராக்₃யாதி₄கராய், ஸ்ரீகார்யஸ்ரீயைச் சிந்தாமல் மங்காமல் பொங்கும்படி ஸகலோபசார வரிசைகளும் நடப்பிக்க; ஸ்ரீரங்க₃ஸ்ரீயும் தினந்தினம் வ்ருத்₃தி₄யடைந்துவர; ஸ்ரீரங்க₃ ராஜநாத₂னும் ப₃ஹுகாலம் அநபத்யராய், 'ஸ்ரீகார்ய நிர்வாஹத்துக்குப் பின்னுக்கு ஒருத்தருமில்லை' என்று விஷண்ணராயிருக்க; ப₄க₃வதநுக்₃ரஹத்தாலே குமாரர் அவதரித்த பன்னிரண்டாம்நாள் **ந்ருஸிம்ஹதே₃ஶிகர்** என்று திருநாமமும் சாத்தி, ஸ்வாமி ஸந்நிதி₄க்கு ஸேவைக்கு எழுந்தருளின காலம், ஶகாப்₃த₃ம் ஆயிரத்து நூற்று நாற்பத்தொன்பதுக்குமேல் அக்ஷயஸம்வத்ஸரத்தில் 'துலுக்கர் தொண்டைமண்டலம் வ்யாபித்தார்கள்' என்று கேட்டு, ஸ்வாமி ஸந்நிதி₄யிலே 'இங்கே எழுந்தருளியிருக்கிறதும், வெளியிலே எழுந்தருளு

---

*பாண்டியன், மாறவர்மன் முதலாம் குலசேகரன், சடையவர்மன் இரண்டாம் சுந்தரபாண்டியன், சடையவர்மன் வீரபாண்டியன், சடையவர்மன் மூன்றாம் சுந்தரபாண்டியன், மாறவர்மன் இரண்டாம் குலசேகரன் ஆகியோர் பாண்டிய நாட்டை ஆண்டு வந்தனர். இவர்களுடைய காலத்திலே பஞ்சதிருவடி வீரப்பராஜா போன்றவர்கள் எந்தக் கைங்கர்யத்தையும் செய்திருக்க இயலாது. ஏனெனில் அவர்கள் மதுரை நாயக்க வம்சத்தைச் சார்ந்தவர்கள். மதுரை நாயக்கர் வம்சமே கி.பி.1526ஆம் ஆண்டில்தான் தோற்றுவிக்கப் பட்டது.* (The Nayak's of Madura by Sathyanatha Iyer)]

54.1. ஸ்ரீரங்கராஜநாதன் வாதூல தேசிகருடைய குமாரரான நரஸிம்ஹதேசிகர் ஸ்ரீகார்யம் பார்த்து வருகையில் சக ஆண்டு 1149-க்கு மேல் *(கி.பி.1227-ஆம் ஆண்டு)* துலுக்கர் தொண்டை மண்டலத்தில் வெற்றிக்கொடி நாட்டியுள்ளார்கள், அவர்களால் நம்பெருமாளுக்கு எந்த நேரத்திலும் ஆபத்து ஏற்படும் என்று எண்ணி, நம்பெருமாள் திருமுன்பே 'இங்கே எழுந்தருளி

*கிறதும் எது திருவுள்ளம்?' என்று திருவுள்ளச்சீட்டுப் போடுகையில்; 'அழகியமணவாளப் பெருமாள் எழுந்தருளி யிருக்கிறதே திருவுள்ளம்' என்று நியமித்தபடியினாலே, திருநாள் ஆரம்பி₄த்து நடக்கையில், பன்றியாழ்வான் கோவிலிலே ப₃லிவெட்டு மண்டபத்திலே அழகியமணவாளப் பெருமாள் எழுந்தருளியிருக்கிற ஸமயத்திலே, துலுக்கர் சமயபுரம் கடந்து வருகிறதைக் கேட்டு; ஸ்ரீரங்க₃ராஜநாத₂ன் திருவோலக்கத்திலே எழுந்தருளியிருக்கிற பன்னீராயிரம்*

---

யிருக்கிறதும், வெளியிலே எழுந்தருளுகிறதும் எது திருவுள்ளம்?' என்று திருவுள்ளச் சீட்டுப் போடுகையில்; 'அழகியமணவாளப் பெருமாள் திருவரங்கத்தில் எழுந்தருளியிருப்பதே திருவுள்ளம்' என்று நியமித்தபடியினாலே, திருநாள் ஆரம்பித்து நடந்து வந்தது.

54.1.1 உத்ஸவத்தின் ஊடே ஒருநாள் பன்றியாழ்வான் கோயிலிலே பலிவெட்டு *(பொலியூட்டு)* மண்டபத்திலே அழகிய மணவாளப் பெருமாள் எழுந்தருளியிருக்கிற ஸமயத்திலே, முகம்மதியர்கள் படையெடுத்து வந்தால் அப்போது நம்பெரு மாளுக்கு ஓர் ஆபத்து ஏற்படாவண்ணம் எவ்வாறு காத்தருள்வது என்பது பற்றி மற்றையோர்களிடம் கலந்து ஆலோசித்து சில முடிவுகளை எடுத்தார் இந்த நரஸிம்ம தேசிகர்.

*(தென்இந்தியா மீது முதன்முதல் படையெடுத்து வந்தவன் மாலிகாஃபூர். இவனுடைய படையெடுப்பு கி.பி.1310-13-ஆம் ஆண்டுகளுக்குள் நிகழ்ந்தது. சகஆண்டுக் கணக்கில் சில தவறுகள் காணப்படுகின்றன. கோயிலொகு கி.பி.1227-இல் துலுக்கர்களுடைய படையெடுப்பு நடைபெற்றதாகக் குறிப்பிடுகிறது. இது வரலாற்று உண்மைகளுக்கு முரண்பட்ட செய்தி. மேலும் இந்தப் புத்தகத்தின் (கோயிலொழுகு பகுதி I) விவரணம் 193 மற்றும் 198 பக்கங்களில் குறிப்பிட்டுள்ளபடி நம்பெருமாள் இரண்டு தடவை துலுக்கர்*

ஸ்வாமிகளையும் திருவோலக்கம் குலையாம லிருக்கும்படி நியமித்து; திருவாராதநம் நடக்கிறதாகத் திருத் திரைபரிமாறி, சிறு பல்லக்கிலே பெருமாளை யேறியருளப் பண்ணி, ஒரு அர்ச்சகரையும் இரண்டு பரிசாரகர்களையும் ஸ்ரீபாதநும் தாங்குவாரையும் ஶிஷ்யரோடுகூடப் பிள்ளைலோகாசார் யரையும் கூட்டித் தெற்கே அனுப்பி; தாம் கோவிலிலே புகுந்து,

---

*களுடைய படையெடுப்பினால் ஆஸ்தானம்விட்டு அகன்று ஸ்ரீரங்கம் திரும்பி வந்தாரா? அல்லது ஒருதடவை மட்டும் ஆஸ்தானத்தை விட்டு அகன்று மீண்டு வந்தாரா? என்பதும் விவாதத்திற்கு உரிய செய்திகளாகும்.*

*கோயிலொழுகில் இனி வரும் பகுதிகளில் விவரிக்கப்பட உள்ள நிகழ்ச்சிகள் கி.பி.1323-ஆம் ஆண்டு நடைபெற்ற உலுக்கானுடைய படையெடுப்பின் போது நிகழ்ந்த நிகழ்ச்சிகளாகும். ஏனெனில் கி.பி.1310-13-இல் நடைபெற்ற மாலிகாஃபூரின் படையெடுப்பின் போது விலையுயர்ந்த நகைகளும் மற்றைய பொருள்களும் கொள்ளையடிக்கப்பட்டனவே ஒழிய பன்னீராயிரம் மக்களுடைய தலைகள் சீவப்படவில்லை.* "**பன்னீராயிரவர் முடிதிருத்திய பன்றியாழ்வான் மேட்டுக்கலகம்**" *என்று குறிப்பிடப்படும்* **மாபெரும் படுகொலை** *பிற்காலத்தில் முகம்மது பின் துக்ளக் என்று அழைக்கப்பட்ட உலுக்கானுடைய படையெடுப் பின்போது நிகழ்ந்தது. இந்தப் பின்னணியில் இனிவரும் செய்திகளை கவனத்தில் கொள்ளவேண்டும்.)*

54.2. இவ்வாறு முகம்மதியர் பெரும்படையோடு ஸ்ரீரங்கத்தை நோக்கி வருகிறார்கள் என்பதை அறிந்த பரிஜனங்கள் உத்ஸவ நிமித்தமாய் பன்றியாழ்வான் ஸந்நிதியில் எழுந்தருளியிருக்க அழகியமணவாளன் உபயநாய்ச்சிமார்களோடு ஸ்ரீரங்கத்தை விட்டுச் செல்வதை ஊர்மக்கள் அறிந்தால் அவர்கள் அனைவரும் அழகியமணவாளனோடு கூட பெரிய

சில திருவாப₄ரணப் பெட்டிகளையும் திருப்பல்லக்கிலே ஸ்ரீரங்க₃நாய்ச்சியாரையும் சில பரிகரங்களையும் கூட்டி அனுப்பி; பெரியபெருமாள் குலஶேக₂ரன்படி கல்திரை பரிமாறி, முன்னதாக ஒரு விக்₃ரஹத்தை வைத்துக் கதவைப் பூட்டி, நாய்ச்சியார் ஸந்நிதி₄யிலேயும் அந்தப்படி பண்ணி, மர்மஸ்த₂ாநங்களெல்லாம் திரோத₄ாநம்பண்ணி, தாம் திருவோலக்கத்தில் வர; துலுக்கரும் திரையில் புகுந்து விக்₃ரஹத்தைக் காணாமல், பன்றியாழ்வானை அபசாரப் பட்டு, ஸ்வாமிகளனைவரையும் திருமுடிதிருத்தி, கோவிலிலே

---

ஓலக்கமாக அவரைப் பின்தொடர்ந்து செல்ல முற்படுவார்கள் என்பதனால், அழகியமணவாளனுக்கு திருத்திரை பரிமாறி திருவாராதனம் ஸமர்ப்பிப்பதாக திருமணி ஸேவித்துக் கொண்டிருந்தனர்.

54.2.1அழகியமணவாளனையும் உபயநாய்ச்சிமார்களை யும் ஒரு பல்லக்கில் எழுந்தருளப்பண்ணினார்கள். பிள்ளைலோகாசார் யரும் ஒரு அர்ச்சகரும் இரண்டு பரிசாரகர்களும் ஸ்ரீபாதம் தாங்குவோரும் மற்றும் சில சிஷ்யர்களோடு தெற்கு திசை நோக்கி பாதுகாப்பிற்காக அனுப்பி வைத்தார்கள். பிள்ளைலோகாசார்யரும் கோயிலுக்குச் சென்று திருவாபரணப் பெட்டிகளை தம்முடன் எடுத்துக்கொண்டு, ஸ்ரீரங்கநாய்ச்சியாரையும் எழுந்தருளப் பண்ணிக்கொண்டு புறப்பட்டுச் சென்றார். அவ்வாறு செல்வதற்கு முன்பு பெரியபெருமாள் ஸந்நிதிக்கு முன்பு குலசேகரன் படியில் கல்திரை பரிமாறி *(கருங்கல்லாலே சுவர் எழுப்பி)* மற்றைய ரகசிய அறைகளையெல்லாம் அடைத்து விட்டுச்சென்றனர்.

54.3. படையெடுத்து வந்த உலுக்கான், அழகியமணவாள னுடைய விக்ரஹம் இல்லாததனால் கோபம் கொண்டனன். அதனால் அவனுடைய படைவீரர்கள் பன்றியாழ்வான் விக்ரஹத்தை சேதப்படுத்தினர். அங்கே குழுமியிருந்தவர்களையும்

*ப்ரவேஶித்து, செம்பொன் வாசலிலிருந்த விக்₃ரஹத்தை அழித்து, தென்கரை வடகரை எல்லாம் குடிபடைகளுக்குச் சேதமில்லாதபடி எஜமாநன் அழகியமணவாளன் திருமண்ட பத்திலே குடியிருக்குமளவில்; எம்பெருமானடியாரிலே ஒருத்தி அவனை ஸந்தி₄த்து, அவனுடன் கூடியிருந்து நன்றாக வஶீகரிக்குமளவில்; அவனும் முன்நினைத்தபடி கோயிலை ப₃ாதி₄யாமல் இருக்குமளவில், பூர்வம் ஜீயர் யந்த்ரஸ்த₂ாபநம் பண்ணினதினாலே அவனுக்கு ஶரீரத்திலே வ்யாதி₄வரு மளவில், அவன் 'இது தெய்வக்ருதம்' என்று நினைத்து, கோயிலை அழிக்கப் பார்க்குமளவில்; அந்த எம்பெருனடி யாளுபாயமாக, அவனுக்குத் தெரியச் சொல்லி, அவன்*

---

திருக்கோயிலிலே கூடியிருந்தவர்களையும், திருக்கோயிலைச் சுற்றிக் குடியிருந்தவர்களையும் வாளால் வெட்டித் தலையைத் துண்டித்தனர். அதனால் தான் இந்தப் படையெடுப்பானது "**பன்னீராயிரவர் முடிதிருத்திய பன்றி யாழ்வான் மேட்டுக்** P» P®" என்று குறிப்பிடப்படுகிறது. அதாவது "பன்னீராயிரம் குடிமக்களுடைய தலையை துண்டிக்கப்பட்ட நிகழ்ச்சி" என்று பொருள்படும்.

54.3.1. கோயிலிலே புகுந்து பல விக்ரஹங்களை சேதப் படுத்தினர். அதன் பிறகு முகம்மதியர்களுடைய படைத்தளபதி சந்தன மண்டபத்திலே தங்கியிருந்தான். கோயிலுக்கு மேலும் சேதங்களை விளைவிக்காமல் இருந்தபோதிலும் கோயிலின் பலபகுதிகளில் கூரநாராயணஜீயர் பல யந்திரங்களை *(மந்திரித்த உலோகத் தகடுகளை)* வைத்திருந்ததால் அதன் விளைவாக கோயிலில் முகாமிட்டிருந்த படைத்தலைவன் நோய்வாய்ப் பட்டான். கோயிலையும் சேதப்படுத்த முயற்சித்தான். அப்போது அவனுக்கு போகப்பொருளாய் இருந்துவந்த தாஸிகளில் ஒருத்தி அந்த படைத்தலைவனோடு உறவாடி, பெரிய சேதங்களை விளைவிக்கா வண்ணம் கோயிலைக் காத்தாள்.

*நினைத்தபடி செய்யாமல், கே$_4$ாபுரமண்டபக் கொடுங்கை களை அங்க$_3$ப$_4$ங்க$_3$ம் பண்ணுவித்து, த்$_3$வாரபாலகர்கள் முதலான சுற்றில் விக்$_3$ரஹங்களையும் அங்க$_3$ப$_4$ங்க$_3$ம் பண்ணுவித்தார்கள். அவ்வளவிலே அவன் ஸந்துஷ்டனா யிருந்தான். அப்படியும் அவனுக்கு நாள் வரையில் நோய் விஞ்சினபடியினாலே, இவ்விடத்திலே இருப்பைவிட்டு, கண்ணனூரிலே மதிளைப்பிடுங்கிக் கோட்டை கட்டுவித்துப் போனவளவிலே, திருவிடையாட்டத்து அழகியமண வாளனிடக் காணியாளரில் "சிங்கப்பிரான்" என்கிற ப்$_3$ராஹ் மணர், அந்த எம்பெருமானடியாள் முக$_2$மாகத் துலுக்கனைக் கண்டு, அவன் வாசலுக்குக் கார்யகரராயிருந்துகொண்டு, கோயிலுக்குத் தீங்கில்லாதபடி ரக்ஷித்துக்கொண்டிருந்தார்.*

---

54.3.1. சந்தன மண்டபத்தில் இருந்த துவாரபாலகர் களையும் சில கல்தூண்களையும் சேதப்படுத்தினான். இதனால் ஊருக்கு நேரவிருந்த பெரியதொரு ஆபத்து நீங்கியது. அவ்வாறு இருக்கையில் அவனுடைய நோய் மேலும் மேலும் அதிகரிக்க, சந்தன மண்டபத்தில் இருப்பது கூடாதென்று உணர்ந்து பக்கத்து ஊரான கண்ணனூரில் *(தற்போதைய சமயபுரம்)* மதிளை அழித்து அந்தக் கற்களைக்கொண்டு ஒரு கோட்டையினை ஏற்படுத்தி வசிக்கத் தொடங்கினான்.

54.3.3. அழகியமணவாளனுக்கு நிவந்தமாய் விடப்பட்ட நிலங்களை மேற்பார்வையிட்டு வருபவர்களில் *(திருவிடையாட்டத்து அழகியமணவாளன் இடக்காணியாளர்)* ஒருவரான சிங்கப்பிரான் என்னும் அந்தணர் அந்த முகம்மதிய படைத் தலைவனுக்கு போகப்பொருளாய் *(ஆசைநாயகியாய்)* இருந்து வந்த தாஸியின் துணைகொண்டு, அவனை நேரிலே கண்டு, தாம் அந்த முகம்மதிய படைத்தலைவனுக்கு தொண்டு செய்வதாகக் கூறி அவனிடம் பணிக்கு அமர்ந்தார். அதன் மூலம் பெரியகோயிலுக்கு எந்த ஆபத்தும் ஏற்படாவண்ணம் காத்து வந்தார்.

## அழகியமணவாளப்பெருமாள், ஜோதிஷ்குடி திருமாலிருஞ்சோலை கோழிக்கூடு புங்கனூர் வழியாகத் திருநாராயணபுரத்துக்கு எழுந்தருளினது

*55. பெருமாளும், அன்றிரவு தம் நாய்ச்சிமாருடனும் அந்தரங்க, பரிஜநங்களோடும்கூடி, சிறந்த காட்டிலே எழுந்தருள; கள்ளர் தொடர்ந்து ஸர்வஸ்வ அபஹாரம் பண்ண, அவ்விடத்திலும் அப்புறத்திலே போகையில்; அங்கங்கே செறுவஞ்சக்கள்ளர் எதிர்கொண்டு சிறப்புக்கட்டளை அமைக்க;*

---

*(குறிப்பு: ஸ்ரீரங்கநாராயண ஜீயர் குருபரம்பரையில் உலுக்கானுடைய இந்தப் படையெடுப்பு கி.பி.1323-ஆம் ஆண்டு நடைபெற்றதாகக் (சகம் 1245-ஆம் ஆண்டு) குறிப்பிடப்பட்டுள்ளது. இதுவே வரலாற்றுச் செய்திகளுக்கு உட்பட்ட ஆண்டாகும். கோயி லொழுகு குறிப்பிடும் ஆண்டு கி.பி.1227. வடகலை குருபரம்பரை நூல்களில் தெரிவித்துள்ளபடி ஸ்ரீநிகமாந்த மஹாதேசிகன் ஸுதர்சன பட்டருடைய இரு குமாரர்களையும் (பராசர பட்டர், பராங்குச பட்டர்) ஶ்ருதப்பிரகாசிகையையும் காப்பாற்றியதாகக் குறிப்பிடுகிறது. மேலும் கலகத்தின் போது ஸ்ரீதேசிகனும், ஶ்ருதப்ரகாசிகா பட்ட ருடைய இரு குமாரர்களும், இரண்டு நாள்கள் பிணக்குவியல்களின் நடுவே மறைந்திருந்து தப்பித்தார்கள் என்று குறிப்பிடுகிறது. அன்று ஸ்ரீதேசிகனால் ஶ்ருதப்ரகாசிகை காப்பாற்றப் பட்டிருக்கவில்லை யானால் ஒரு மாபெரும் க்ரந்தத்தை நாம் இழந்திருக்கக் கூடும்.)*

55. தெற்கு நோக்கி எழுந்தருளிய அழகிய மணவா ளனுக்கு பல ஆபத்துக்கள் நேரிட்டன. செல்லும் வழியில் கள்ளர் கள் எம்பெருமானுடைய திருவாபரணங்களைக் கொள்ளை யடித்தனர். இவ்வாறு பல இடையூறுகள் நேர்ந்தவண்ணம் இருக்க அவர்களைப் பிள்ளைஉலகாரியன் தம்முடைய அருட் பார்வை கொண்டு திருத்திப்பணி கொண்டார். சிறிது காலம்

*அவர்கள் ப₄ாவமறிந்து, அத்தை பரிக்₃ரஹியாமல் கடாக்ஷித்து, ஜோதிஷ்குடியிலே ஒரு மாஸம் எழுந்தருளியிருக்க; அங்கே பிள்ளைலோகாசார்யர் திருநாட்டுக்கெழுந்தருளி, திருவத்₄யயநாந்தமாகச் சரமகைங்கர்யம் நிறைவேறினபின்பு, திருமாலிருஞ் சோலையேற எழுந்தருளி, ஒரு ஸம்வத்ஸரம் எழுந்தருளியிருந்து, திருநாமத்தாலே ஒரு கிணறும் உண்டு பண்ணி, அவ்விடத்திலும் புறப்பட்டருளி மலையாளத்திலே எழுந்தருளி, அங்கங்கே அவரவர்களாலே ஸத்க்ருதராய் கோழிக்கூடேற எழுந்தருளி, அவ்விடத்திலே சிலநாளெழுந் தருளியிருக்க; அவ்விடத்திலே மற்ற தி₃வ்யதேசங்களிலெம் பெருமான்களும் நம்மாழ்வாருமெழுந்தருள, அந்த எம்பெருமான்களையும் ஆத₃ரித்தருளி, நம்மாழ்வாரைத் தம் தி₃வ்ய ஸிம்ஹாஸநத்திலே வைத்துக் கொண்டு ஒரு ஸம்வத்ஸரம் அங்கே எழுந்தருளியிருந்து; அவ்விடத்திலும் ஆழ்வாருடன் புறப்பட்டருளி, ஸமுத்₃ரத்திலே ஓடத்தின் மேலே எழுந்தருள, மத்₄யே ஆழ்வார் ப்ராமாதி₃கமாக ஸமுத்₃ர ஜலத்திலே*

---

திருமோகூருக்கு அருகாமையில் உள்ள ஆனைமலையில் கொடிக்குளம் (*ஜ்யோதிஷ்குடி*) என்னும் ஊரில் தங்கியிருந்தார். அங்கேயே அவர் நோய்வாய்ப்பட்டு பரமபதித்தார். அதன் பிறகு திருமாலிருஞ்சோலைக்கு அழகியமணவாளன் எழுந்தருளி அங்கே ஓராண்டு எழுந்தருளியிருந்தார். அழகியமணவாளன் திருநாமம் கொண்ட கிணறு ஒன்றும் அங்கே அமைக்கப் பெற்றது.

55.1. பிறகு அங்கிருந்து எழுந்தருளி பல ஊர்களைக் கடந்து கோழிக்கோடு (*தற்போதைய கண்ணனூர்*) சென்றடைந்தார். அந்த ஊரில் பல திவ்யதேசத்து எம்பெருமான்களும், நம்மாழ்வாரும் எழுந்தருளியிருந்தனர். ஓராண்டு அங்கேயே எழுந்தருளியிருந்த பிறகு கடலைக் கடந்து (*உப்பங்கழி எனப்படும்* Back waters) செல்கையில் நம்மாழ்வாருடைய விக்ரஹம் கடலிலே தவறி

எழுந்தருள, பெருமாள் தனித்து எழுந்தருளத் திருவுள்ள மில்லாத படியாலே ஓடத்தைத் திருப்பி, பெருமாள் நியமனத்தினாலே கெருடன் வட்டமிட்டவிடத்திலே முழுகி ஆழ்வாரை யெடுத்துப் பெருமாளுடன் சேர்க்க; பெருமாளும் ஆழ்வாருடன் திருக்கணாம்பியிலே அநேகநாளெழுந் தருளியிருந்து, ஆழ்வாருக்குத் தம் வட்டமணையையும் முத்துச் சட்டையையும் ஸாதித்தருளி, ஆழ்வாரை அங்கே நிறுத்தி, தாம் ஸபரிகரராய் புங்கனூர் வழியாகத் திருநாராயண புரம் எழுந்தருளினார்.

---

விழுந்துவிட, அழகியமணவாளனுடைய நியமனத்தால் அவர் எழுந்தருளியிருந்த ஓடம் திருப்பிச் செலுத்தப்பட்டது. நம்மாழ்வார் கடலில் கைநழுவி விழுந்த இடத்திற்கு மேலே ஒரு கருடன் வட்டமிட்டதால் படகை ஓட்டியோர் கடலில் மூழ்கி நம்மாழ்வாரைக் கண்டெடுத்து அழகியமணவாளனுடன் சேர்த்தியிலே இருத்தி, அக்கரையை அடைந்தார்கள்.

55.2. அங்கிருந்து கர்நாடக மாநிலத்தில் திருக்கணாம்பி என்னும் ஊரில் நம்மாழ்வாரும் அழகியமணவாளப்பெருமாளும் பல ஆண்டுகள் எழுந்தருளியிருந்தனர். அப்போது ஆழ்வாருக்கு தம் வட்டமணையையும், முத்துச்சட்டையையும் அழகிய மணவாளன் ஸாதித்தருளினார். அதன்பிறகு நம்மாழ்வாரை அங்கேயே இருக்கச் செய்து தாம் நாய்ச்சிமார்களோடு புங்கனூர் வழியாகத் திருநாராயணபுரம் எழுந்தருளினார்.

திருக்கணாம்பியில் நம்மாழ்வாருடன் அழகிய மணவாளன் எழுந்தருளியிருந்த காலத்தில் இருவருக்கும் ஒரே வட்டிலிலிருந்து திருவாராதனம் கண்டருளப் பண்ணினார்கள். ஆழ்வார் திருப்படிக்கத் திலிருந்து தீர்த்தமும், அழகியமணவாளனுடைய ஸ்ரீசடகோபனும் கோஷ்டியாருக்கு ஸாதிப்பர்கள். இந்தப் பழக்கத்தை அடியொற்றியே அழகியமணவாளன் ஆஸ்தானம் மீண்டு எழுந்தருளி, பெரிய

கோயிலிலே திருவாராதனம் கண்டருளுகையில் விஷ்வக்ஸேனர் ஸந்நிதியில் திருப்படிக்கத் தீர்த்தம் ஸ்ரீரங்கநாராயண ஜீயர் தொடக்கமான தீர்த்த மரியாதை பெறுவோருக்கு ஸாதிக்கப்பட்டு வந்தது. அவ்வாறே நம்பெருமாள் புறப்பட்டருளினால் நடையிலே சுந்தரபாண்டியன் என்றழைக்கப்படும் 'திருப்படிக்கம்' எடுத்துச் செல்லப்படுவதில்லை.

(தற்போது இவ்வாறான நடைமுறைகளை நாம் காண இயலவில்லை. இவையெல்லாம் காலவெள்ளத்திலே கரைந்து போன நடைமுறைகள். இத்தகைய பொருள் பொதிந்த நடை முறைகள் வழக்கத்தில் இருந்து வந்தன என்பதை மனத்தாலே நினைத்து மகிழ்ந்து கொள்வதைத் தவிர வேறுவழியில்லை.

கோயிலொழுகு தரும் குறிப்புகளின்படி நம்பெருமாள் மேலப்படி வழியாகப் புறப்பாடு கண்டருளி, ராஜமஹேந்திரன் திருச்சுற்றின் வடகிழக்குப் பகுதியில் அமைந்துள்ள விஷ்வக்ஸேநர் ஸந்நிதிக்கு எழுந்தருளி ஸ்ரீசடகோபனை ஸாதித்தருளிய பிறகே மற்றைய ஸ்தலத்தார்களுக்கு மரியாதை நடைபெறவேண்டும். ஆனால் தற்போதைய வழக்கம் இதற்கு முற்றிலும் மாறுபட்டதாக உள்ளது. மேலப்படியிலே ஸ்ரீரங்கநாராயண ஜீயர், பட்டர் திருவம்சத்தவர், வாதூலதேசிகர் திருவம்சத்தவர் ஆகியோருக்கு ஸ்ரீசடாரி ஸாதிக்கப் படுகிறது. அதனால் விஷ்வக்ஸேநருக்கு ஸ்ரீசடாரி மரியாதை அளிக்கப்படுவதில்லை. இவருடைய பெயரே ஸேனை முதல்வர் என்பது. ஆகையாலே இவர்தான் **முதல் மரியாதைக்கு உரியவர்.** அவருக்கு உரிய முதல் மரியாதையை நாம் பறித்து விட்டோம். **இதைப்பற்றி யாருக்கும் எந்த வருத்தமும் இல்லை.** ஏனெனில் விஷ்வக்ஸேநர் வாய் திறந்து தமக்கு இழைக்கப்படும் அநீதியைப் பற்றிச் சொல்வதில்லை. நம்பெருமாளும் கண்டும் காணாதது போல் புறப்பாடு கண்டருளுகிறார். ஆகமங்களில் விஷ்வக்ஸேநருக்குத்தான் முதல் மரியாதை என்று குறிப்பிட்டிருந்த போதிலும், அந்த மரியாதையை மாற்றுவதில் நாம் ஸமர்த்தர்கள். விஷ்வக்ஸேநர் திருமுன்புதான் ஸ்தலத்தார் மரியாதை நடைபெற்று

வந்தது என்னும் செய்தி கோயிலொழுகில் (கோயிலொழுகு, பக்கம்.98, 1976-ஆம் ஆண்டு, புத்தூர் எஸ்.கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் பதிப்பு.) கீழ்க்கண்டவாறு குறிப்பிடப்பட்டுள்ளது.

"அக்காலத்திலே, பெருமாள் புறப்பட்டருளி, ஸேனை முதலியார் ஸந்நிதி வாசலிலே திரும்பி, ஸேனை முதலியாருக்குத் திருமாலை ஸாதித்து கொவணவர் வரிசையான திருமாலையை முதலியாண்டான் வம்ஶ்யரான குமார நரஸிம்ஹாசார்யருக்கு ஸாதித்து, ஆசார்யபுருஷர்கள் திருவோலக்கத்துக்குப் பெரியநம்பி கந்தாடையண்ணான் க்ரமத்திலே நடந்தது."

ஸேனை முதலியாருக்கு முதல் மரியாதை அளிக்கப்படவில்லையே என்பதைப் பற்றி ஸ்தலத்தாருக்கு எந்த வருத்தமும் இல்லை. ஆனால் உண்மைக்கு மதிப்பளிக்கக் கூடியவர்கள், ஏன் மீண்டும் இந்த மரியாதையை ஏற்படுத்திட முயற்சிக்கக் கூடாது. பெரியவர்கள் காலத்திலிருந்து இப்படித்தான் மரியாதை அளிக்கப் படுகிறது என்பதை க்ருபை கூர்ந்து ஒரு சமாதானமாகச் சொல்லாமல் உண்மைச் செய்திகளுக்கு மதிப்பளிக்க வேண்டியது நம் எல்லோருடைய தலையாய கடமையுமாகும்.

ஆரவீடு வம்ச விஜயநகர மன்னர்கள், மதுரை நாயக்க மன்னர்கள், ஆற்காடு நவாபுகள் ஆகியோர் ஆண்ட காலங் களில் ஸ்தலாசார்யர்கள், அப்பொழுது ஆண்ட மன்னனுடன் தமக்கு உள்ள நெருக்கத்தைத் தமக்குச் சாதகமாக ஆக்கிக்கொண்டு பல மரபுகளை மாற்ற முனைந்து வந்தனர் என்றும், கோயில் நிர்வாஹம் அந்தப்புரத்தின் ஒரு பகுதியாக எவ்வாறு விளங்கிவந்தது என்பதையும் கோயிலொழுகின் இரண்டாம் பாகத்தில் தெளிவுபடுத்துவோம். மேலப்படியில் ஸ்தலத்தார்கள் பெற்றுக் கொள்ளும் மரியாதை ஒரு முறை தவறிய மரியாதை மட்டுமல்லாமல் விஷ்வக்ஸேநருக்கு இழைக்கப்படும் பெருத்த அவமரியாதை என்பதையும் சம்பந்தப்பட்ட அனைவரும் உணர்ந்து கொள்ளவேண்டும்.) ]

## பெருமாள் திருவேங்கடத்துக்கு எழுந்தருளியது

56. ஆழ்வாருடனே ஏகாஸநத்திலேயிருந்து ஏகபாத்ரங் களிலே திருவாராத$_4$நம் கண்டருளுகையில்; ஆழ்வார் திருப் படிக்கமும், பெருமாள் ஸ்ரீஶட$_2$கோபனும் ஸாதி$_3$க் கிறது. அதுமுதலாகப் பெருமாள் திருவாராத$_4$நமானவுடனே, திருப்படிக்கத் தீர்த்த$_2$ம் ஸேனைமுதலியார் கோயிலிலே ஸ்ரீரங்க$_3$நாராயணஜீயர் முதலான பாரபத்தியக்காரருக்கு



56. திருநாராயணபுரத்திலே பல ஆண்டுகள் எழுந்தருளியிருந்த பிறகு அழகிய மணவாளன் திருமலை சென்றடைந்தார். அங்கே யாதவராயனால் கி.பி.1360-ஆம் ஆண்டு கட்டப்பட்ட ரங்கமண்டபத்தில் அழகிய மணவாளன் பல ஆண்டுகள் எழுந்தருளி யிருந்தார்.

*(பக்கம்.181, தலைப்பு எண்.39 'கோபணவுடையார்' என்று தொடங்கும் தலைப்பு முதல், பக்கம் 184, தலைப்பு எண்.40ல் 'திருநாளும் கண்டருளினார்' என்று முடியும் முதல் பாரா ஈறாக உள்ள பகுதியில் பெரும்பாலும் 1888-ஆம் வருஷ பதிப்பில் இவ்விடத்தில் உள்ளது. 182ஆம் பக்கம், 9ஆவது வரியில்*

ஸாதி₃க்கிறது. பெருமாள் புறப்பட்டருளினால், அதுமுதலாக, நடையிலே சுந்தரபாண்டியன் கொண்டுபோகிறதில்லை. இந்தப்படி திருநாராயணபுரத்திலேயும் அநேகநாள் எழுந்தருளியிருந்து, ப்ரத₃க்ஷிணமாகத் திருவேங்கடத்துக் கெழுந்தருளி திருமலையிலே ப₃ஹுகாலம் தி₃வ்யோத்ஸவத்துடனே எழுந்தருளியிருந்தார்.

---

*'அவ்விடத்தில்' என்று தொடங்கி, அதே பக்கத்தில் 15-ஆம் வரியில் 'யிருந்து' என்பது வரையிலும், 183ஆம் பக்கத்தில் 3-ஆம் வரியில் 'அவருக்குத் தனியன் கொடுத்த' என்பதும் அப்பதிப்பில் இல்லை. அங்குள்ள பகுதிகள் இங்கிருப்பதே பொருத்தம்.)*

56.1. அழகியமணவாளன் இவ்வாறு திருமலையில் எழுந்தருளியிருந்த காலத்தில் முகம்மதியர்களுடைய சாம்ராஜ்யம் தெற்கே பாண்டியமண்டலம் முழுதும் வியாபித்திருந்தது. கி.பி.1336-இல் ஹரிஹரர், புக்கர் ஆகிய இரு சகோதரர்களுடைய முயற்சியினால் விஜயநகரப் பேரரசு தோற்றுவிக்கப்பெற்றது. ஹரிஹரர் நாட்டை ஆண்டு கொண்டிருக்கையில் செஞ்சியை ஆண்டுவந்த கோபண்ண உடையார் திருமலைக்கு வருகை தந்தார். சந்திரகிரியை ஆண்டுவந்த மன்னனுடன் கலந்து ஆலோசித்து அழகியமணவாளனை திருவரங்கத்திற்கு மீண்டும் எழுந்தருளப் பண்ணுவதற்கான முயற்சிகளை மேற்கொண்டார்.

56.2. அதன் பிறகு சிங்கபுரம் சென்றடைந்து அங்கே அழகியமணவாளனுக்கு அத்யயனோத்ஸவம் தொடக்கமான பல உத்ஸவங்களை ஏற்படுத்தினார். சிங்கப்பிரானுடைய குமாரரான திருமணத்தூண் நம்பி *(திருமணல்தூண் நம்பி)* இவ்வாறு அழகிய மணவாளன் சிங்கபுரத்தில் எழுந்தருளி யிருப்பதைச் செவியுற்று, செஞ்சிக்கு உத்தமநம்பியை அனுப்பிவைக்க, அவரும் கோபண்ண உடையாருக்கு ஸ்ரீரங்கத்தினுடைய சூழ்நிலையையும், சுல்தான்களுடைய படைபலத்தையும் அறிவித்தார்.

அதன்பிறகு பெரும் படையுடன் கண்ணனூர் மீது படையெடுத்து முகம்மதியர் படையினை அழித்து, மீண்டும் அழகியமண வாளனை சக ஆண்டு 1293 *(கி.பி.1371-ஆம் ஆண்டு)* பரிதாபி வருஷம், வைகாசி மாதம் 17-ஆம் நாள் சிங்கபுரத்திலிருந்து அழகியமணவாளனையும், உபயநாய்ச்சிமார்களையும், எழுந் தருளப்பண்ணிக் கொண்டு வந்து திருவரங்கத்தில் சேர்ப்பித்தான். இந்த நிகழ்ச்சிகளை ஸ்ரீரங்கம் கல்வெட்டு எண்.286 தெரிவிக் கின்றது.

*(அழகியமணவாளன் திருவரங்கத்தை விட்டு நீங்கி மீண்டும் ஆஸ்தானம் திரும்பியதைக் கோயிலொழுகின் பல பதிப்புகள் பல்வேறு இடங்களில் விவரித்துள்ளன. குறிப்பாக கி.பி.1311ஆம் ஆண்டு தொடங்கி கி.பி.1371-ஆம் ஆண்டு ஈறாக நடைபெற்ற நிகழ்ச்சிகள் தொடர்ச்சியாகக் குறிப்பிடப்படவில்லை. கோயிலொழுகு விவரிக்கும் செய்திகள் கொண்டு அழகியமணவாளன் கி.பி.1311-ஆம் ஆண்டு முகம்மதியர்களால் எடுத்துச்செல்லப்பட்டு, ஸ்ரீரங்கம் ஸ்தலத்தார் டில்லிக்குச் சென்று மீட்டுக்கொண்டு வருகையில் திருமலைக்காடுகளில் பல ஆண்டுகள் எழுந்தருளியிருந்து கி.பி.1371-ஆம் ஆண்டு ஆஸ்தானம் திரும்பியதாகவும், 59-1/2 ஆண்டுகள் திருவரங் கத்தில் எழுந்தருளியிருக்கவில்லை என்றும் பெறப்படுகிறது. இந்த இடைப்பட்ட ஆண்டுகளில் அவருக்குப்பதில் திருவரங்கமாளிகையாரை ப்ரதிஷ்டை செய்துள்ளனர் என்பதும் அறியப்படுகிறது.*

*ஆனால் கி.பி.1323-ஆம் ஆண்டு பிள்ளைலோகாசார் யாரால் எழுந்தருளப்பண்ணப்பட்ட அழகியமணவாளன் உபய நாய்ச்சிமார்களோடும், ஸ்ரீரங்கநாய்ச்சியாரோடும் சென்றதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. இந்த விக்ரஹங்களே கிபி.1371-ஆம் ஆண்டு திருவரங்கத்திற்கு எழுந்தருளப் பண்ணப்பட்டதாக அறியப் படுகிறது. அவ்வாறாயின் கி.பி.1311-ஆம் ஆண்டு டில்லிக்கு எடுத்துச்சென்றதாகக் கருதப்படும் அழகியமணவாளன், கி.பி.1323-க்கு முன்பாகவே திருவரங்கத்திற்கு எழுந்தருளப்பண்ணப்பட்டாரா*

என்பதைப் பற்றிய தெளிவு கோயிலொழுகில் இல்லை. இந்த நிகழ்ச்சிகளை விவரிக்கும் போது 'கோயிலொழுகு' பல இடங்களில் முன்னுக்குப்பின் முரணான செய்திகளைத் தெரிவிக்கின்றது. இந்தச் செய்திகளை ஒருநிலைப்படுத்திடவும், ஸூரதாணி ஆசைகொண்ட நிகழ்ச்சிகளை உண்மையிலேயே நடைபெற்ற நிகழ்ச்சிகள் என்றும் கொள்ள வேண்டுமானால், கி.பி.1311-ஆம் ஆண்டு கவர்ந்த செல்லப்பட்ட அழகியமணவாளனுடைய விக்ரஹம் கி.பி.1323-ஆம் ஆண்டுக்கு முன்னதாகவே திருவரங்கத்திற்கு மீட்டுவரப்பட்டதாகக் கொள்ளவேண்டும்.

அந்த இடைப்பட்ட காலத்தில் திருவரங்கமாளிகையாரை ப்ரதிஷ்டை செய்திருக்க வேண்டும். மேலும் கி.பி.1311-ஆம் ஆண்டு படையெடுப்பின் போது அழகியமணவாளன் விக்ரஹம் மட்டுமே எடுத்துச்செல்லப்பட்டது. ஆனால் கி.பி.1323-ஆம் ஆண்டு படையெடுப்பின்போது அழகியமணவாளன் உபயநாய்ச்சிமார் களோடும், ஸ்ரீரங்கநாய்ச்சியாரோடும் ஊரைவிட்டு அகன்றதாகக் குறிப்பிடப் பட்டுள்ளது. கி.பி.1371-ஆம் ஆண்டு ஸ்ரீரங்கம் கல்வெட்டும் (கல்வெட்டு எண்.286), கோபணார்யன் உபயநாய்ச்சிமார்களோடு கூடிய அழகியமணவாளனை ப்ரதிஷ்டை கண்டருளியதாகக் குறிப் பிடுகிறது. ஆகவே அழகியமணவாளன் கி.பி.1323-ஆம் ஆண்டுக்கு முன்னதாகவே ஆஸ்தானத்திற்கு திரும்ப எழுந்தருளினார் என்று கொள்வதே பல சிக்கல்களுக்கு உரிய விடையாகும்.)

ப்ரபந்நாம்ருதத்தில் பிற்சேர்க்கையாகக் கீழ்க்கண்ட செய்திகள் கொடுக்கப்பட்டுள்ளன. காஞ்சி மஹாவித்வான் அண்ணங்காசார்யர் ஸ்வாமி தாம் எழுதியருளிய ஸ்ரீதேசிக வைபவப்ராசிகையிலும் இதில் கண்டுள்ள விஷயங்களையே கொடுத்துள்ளார். கோயிலொழுகிலோ அல்லது யந்தீந்த்ரப்ரவண ப்ரபாவத்திலோ காணப்படும் சில செய்திகள் ப்ரபந்நாம்ருதத்தில் காணப்படவில்லை என்பதும் குறிப்பிடத்தக்கது.

"ஒருநாள் அழகியமணவாளனுடைய உத்ஸவத்தில் ஸ்ரீரங்கத்திலிருந்த கணக்கற்ற வைஷ்ணவர்கள் எம்பெருமானை வணங்கிக் கொண்டிருந்தார்கள். அப்போது அங்கிருந்த வைஷ்ணவர் ஒருவர் 'இத்தனை ஸ்ரீவைஷ்ணவர்களும் அழகியமணவாளனை இப்படி வணங்குவது போல் பரமபதநாதனை எப்போது ஒரு சமயத்தில் வணங்குவார்களோ?' என்று பரவசமாய்க்கூறினார். அழகியமணவாளன் அர்ச்சகர் மூலமாக 'அப்படியே ஆகட்டும்' என்று நியமித்தார். அதற்குப் பின் மற்றொரு உத்ஸவம் ஸ்ரீரங்கத்தில் நடைபெற்றது. திருக்காவிரியில் எல்லா ஸ்ரீவைஷ்ணவர்களும் உபயநாய்ச்சிமார் களோடு கூடிய அழகியமணவாளனுக்குத் திருமஞ்சனம் நடத்தினார்கள். அப்பொழுது ஒரு ஒற்றன் வந்து 'பெரிய ஸேனையோடு துருஷ்கன் (யவனன்) ஒருவன் வேதப்ராஹ்மணர்களைக் கொள்ளையடித்துக் கொலை செய்து கொண்டு ஸ்ரீரங்கத்தை நோக்கி வருகிறான்' என்றான்.

இதைக் கேள்வியுற்ற பிள்ளைலோகாசாரியர் முதலான பெரியவர்கள் துணுக்குற்று அனைவரும் கூடி ஆலோசித்து அழகிய மணவாளனிடமே நாம் செய்ய வேண்டியதைப் பற்றிக் கேட்டு விடுவோம் என்று தீர்மானித்து, 'இங்கேயே இருக்கவேண்டும்' அல்லது 'சென்றுவிட வேண்டும்' என்று இரு ஓலைகளில் எழுதி, திருவுள்ளச் சீட்டாகப் போட்டனர். அப்போது பெருமாள் 'இருக்க வேண்டும்' என்னும் சீட்டையே அவர்களுக்கு அளித்தார். அவர்களும் பெருமாளுக்குச் செய்யவேண்டிய கைங்கர்யங்களைச் செய்து கொண்டு அங்கேயே இருந்தார்கள். சில நாட்கள் கழித்து ஒரு ஒற்றன் 'அந்தத் துருஷ்கன் திருக்கண்டியூர் வரை வந்து விட்டான்' என்றும், 'விரை விலேயே ஸ்ரீரங்கம் வந்து விடுவான்' என்றும் பிள்ளைலோகாசாரிய ரிடம் கூறினான். அதைக் கேட்டு அவர் ஸ்ரீரங்கத்தை ரக்ஷிக்கும் பொறுப்பை வேதாந்ததேசிகரிடம் வைத்து, நாய்ச்சிமார்களுடன் அழகிய மணவாளனைத் திருக்கோட்டியூர் செல்லும் மார்க்கத்தில் எழுந்தருளப் பண்ணிக் கொண்டு சென்றார். வேதாந்தாசார்யர் முதலானவர்கள் ஸ்ரீரங்கத்தில் கோட்டைவாசலை அடைத்துவிட்டுக் கோயிலை ரக்ஷித்துக் கொண்டு இருந்தார்கள். கர்ப்பக்ருஹத்தில் அகண்ட தீபத்தை

ஏற்றி அதன் வாயில்களைக் கற்சுவர் திரையிட்டு மறைத்தனர். வேதாந்த தேசிகரும் ஸ்ரீரங்கத்தை விட்டு ஸ்ரீவைஷ்ணவர்களோடு வெளியேறு வதற்கு ஏற்பாடு செய்து கொண்டிருந்தார்.

அந்தத் துருஷ்கன் திருக்கண்டியூரிலிருந்து தெய்வ விக்கிரஹங்களைக் கொள்ளையடித்துக் கொண்டு ஸ்ரீரங்கத்தை நோக்கி விரைவில் வந்தான். அப்பொழுது முதியவரான ஸுதர்சன பட்டர் வேதாந்தாசார்யரிடம் வந்து தம்முடைய இரு பிள்ளைகளையும் ச்ருதப்ரகாசிகை ஸ்ரீகோசத்தையும் ரக்ஷிக்கும்படி சொல்லி அளித்தார். வேதாந்ததேசிகரும் அவ்வண்ணமே செய்தார். துலுக்கப்படை ஸ்ரீரங்கம் கோபுரவாயில் கதவுகளையெல்லாம் தகர்த்துக்கொண்டு உள்ளே நுழைந்தது. அங்கிருந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் அனைவரும் கொல்லப்பட்டு ஒரே சமயத்தில் பரமபதம் அடைந்து பரமபதநாதனை தரிசித்தனர். வேதாந்த தேசிகர் ச்ருதப்ரகாசிகையோடு கூடிய ஸ்ரீபாஷ்ய ஸ்ரீகோசத்தையும் ஸுதர்சன பட்டருடைய இருபிள்ளை களையும் அழைத்துக் கொண்டு, மேல்கோட்டைத் திருநாராயண புரத்துக்குச் சென்றார். லோகாசாரியரால் எழுந்தருளப் பண்ணிக் கொண்டு போகப்பட்ட பிராட்டிமாரோடு கூடிய அழகியமணவாளன் காட்டுவழியிலே பாண்டிய தேசத்திற்குச் சென்றார். அழகியமண வாளனுடைய தனம் அனைத்தும் கள்ளர்களால் அபகரிக்கப்பட்டது. கூடச் சென்ற லோகாசாரியர் கலங்காமல் தம்மிடமிருந்த தனத்தையும் அவர்களிடம் கொடுத்தார். ஜ்யோதிஷ்மதீ புரத்தை அடைந்தவுடன் ஸ்ரீரங்கத்தில் நடந்த விருத்தாந்தத்தைக் கேள்விப்பட்டுப் பொறுக்க மாட்டாதவராய், பிள்ளை லோகாசாரியர் பரமபதத்தை அடைந்தார்.

பிள்ளைலோகாசார்யரின் பிரிவினால் மிக வருந்திய அழகிய மணவாளன் அங்கிருந்து அழகர்மலைக்குச் சென்றார். அங்கே தம் பெயரில் ஒரு கிணற்றை ஏற்படுத்திவிட்டு அழகியமணவாளன் பாண்டிய மண்டலத்திலிருந்து சேரமண்டலத்திற்குச் சென்றார். அந்த மலைநாட்டிலுள்ள பதினான்கு திவ்யதேசங்களையும் கடாக்ஷித்து விட்டு, நாய்ச்சிமாருடன் கூடிய அழகியமணவாளன் மேலக்கோட்டை

## எம்பெருமானடியாளுக்குக் கட்டளையிட்டது

57. ஒரு காலவிசேஷத்திலே நம்பெருமாள் ஸந்நிதியில் துலுக்கர்கள் பெருமாளுக்குத் திருமஞ்சனம் முதலியவைகள் செய்யவொட்டாமலும், கோயிலுக்கு யாரையும் வரவொட்டாமலும் உபத்ரவம் பண்ணிக்கொண்டிருந்தனர். இவர்கள் செய்யும் உபத்ரவத்தைப் பார்த்து மனம் ஸஹியாதவளாய், எப்படியாவது இந்த துலுக்கர்களை இவ்விடத்தினின்றும்

---

திருநாராயணபுரம் சென்றார். மேலக்கோட்டையில் செல்வப் பிள்ளையோடு கூடச் சில நாட்கள் இருந்து விட்டு நாய்ச்சிமாரோடு கூடிய அழகியமணவாளன் திருமலைக்கு வந்தார். திருவேங்கட மலையில் ஸ்ரீநிவாஸனாலே ஆராதிக்கப்பட்ட அழகியமணவாளன் வழிநடந்த களைப்புத்தீர அங்கு சிலகாலம் இருந்தார். அப்பொழுது கம்ஸனுக்கு அக்ரூரன் அமைந்தது போலே ந்ருஸிம்ஹதேவன் *(சிங்கப்பிரான்)* என்னும் அந்தணர் அந்தத் துலுக்கனுக்கு வேண்டியவராக அமைந்தார். அவர் அவனைச் சமயபுரத்திற்கு அழைத்துச் சென்று, ஸ்ரீரங்கத்தை ஆளும் அதிகாரத்தைத் தமக்கு அவனிடமிருந்து பெற்றுக் கொண்டார். கொல்லப்பட்டவர்கள் போக எஞ்சியிருந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் ஸ்ரீரங்கத்திற்கு வந்து வாழத் தொடங்கினார்கள். அவர்களையும் ஸ்ரீரங்கத்தையும் ந்ருஸிம்ஹதேவர் ரக்ஷித்து வந்தார்."

*இவ்வாறாக அழகியமணவாளன் ஊரைவிட்டு அகன்ற நிகழ்ச்சி ப்ரபந்நாம்ருதத்தில் விவரிக்கப்பட்டுள்ளது.*

57. சந்தனமண்டபத்தில் முகம்மதியர்கள் கூட்டமாகக் கூடியிருந்தது, கோயிலுக்குள் யாரையும் அனுமதியாமல் இடையூறுகள் பல செய்து கொண்டிருந்தனர். இவர்களுடைய இந்தச் செயலை பொறுக்க இயலாத தேவதாஸியொருத்தி எந்த உபாயத்தைப் பின்பற்றியேனும் இந்த முகம்மதியப் படை வீரர்களை அந்த இடத்திலிருந்தும் அகற்றிட வேண்டுமென்ற

துரத்தவேணுமென்கிற எண்ணங்கொண்டு ஒருதிநம் தான் அலங்காரத்துடன் கோயிலுக்குள் வந்தாள். துலுக்கர்களிற் பெரியவன் இவளைப் பார்த்து ஆசைப்பட்டு அருகில் வந்தான். அவளும் இச்சை கொண்டவள்போல் இருந்தனள். துலுக்கனும் அவளைப் பார்த்து 'உங்கள் சுவாமி எங்கே' என்று கேட்டான். நான் காண்பிக்கிறேன் வாருமென்று கிழண்டை கோபுரத்தின் மேலே அழைத்துக்கொண்டுபோய், பரவாசு தேவரைக் காண்பித்தனள். அவன் அந்தப் பரவாசுதேவரை எட்டிப் பார்க்கும்போது அவனை அவ்விடத்திலிருந்து கீழே தள்ளிவிட அவனும் விழ்ந்து இறந்துபோனான். அவளும் பிரமஹத்தியானது நம்மைப் பிடிக்குமென்று தானும்

---

எண்ணத்தோடு தன்னை நன்றாக அலங்கரித்துக் கொண்டு கோயிலுக்குள் வந்தாள். அந்தப் படைவீரர்களின் தலைவன் அந்த தாஸியிடம் மோஹம் கொண்டு அவளிடம் நெருங்கினான். அந்த தேவதாஸியும் படைத்தலைவனிடம் ஆசைகொண்டவள் போல்நடித்தாள். "உங்களுடைய சுவாமியை எங்கே வைத் திருக்கிறீர்கள்?" என்று அவன் வினவிட அவளும், அந்த விக்ரஹத்தைக் காண்பிப்பதாக ஆசைகாட்டி, கிழக்கே உள்ள வெள்ளைக் கோபுரத்திற்கு மேலே அழைத்துச்சென்றாள். அங்கிருந்து ப்ரணவாகார விமானத்திலிருந்த பரவாசுதேவரைக் காண்பித்தாள். அவன் அந்தப் பரவாசுதேவரைக் காணவேண்டு மென்று எட்டிப் பார்த்தபோது அவ்விடத்திலிருந்து அந்தப் படைத்தலைவனை கீழே தள்ளிவிட, அவனும் கோபுரத் திலிருந்து கீழே வீழ்ந்து இறந்து போனான்.

57.2. இவ்வாறு படைத்தலைவனைக் கொன்றதால் தனக்கும் பாவம் ஸம்பவிக்கும் என்று நினைத்து அந்தக் கோபுரத்திலிருந்து தேவதாஸியும் கீழே வீழ்ந்து உயிரை மாய்த்துக் கொண்டாள். படைத்தலைவன் இறந்துபட்டதால், படைவீரர்கள் அனைவரும் கோயிலை விட்டு அகன்றனர். கீழே வீழ்ந்த

*விழ்ந்தனள். அவளுக்குமாத்திரம் உயிர்போகாமலிருந்தது. மற்றைய படைகளெல்லாம் விட்டு ஓடிப்போனவுடனே கோயிலுள்ள பரிஜநங்கள் யாவும் திருக்காப்பை நீக்கவந்து பார்க்குங்காலத்தில், அடியாளுக்கு மாத்திரம் உயிர்போகா மலிருக்கக்கண்டார்கள். உடனே யாவரும் சென்று பெருமா ளுடன் முறையிட, பெருமாளும் அர்ச்சகமுகே₃ந அடி யாளிடம் வந்து அழைத்து, போர உகந்தருளி "உனக்கு வேண்டிய வரத்தைக் கேட்டுக்கொள்" என்று சொல்ல, அவளும் "எந்தக்காலத் திலும் திருநாடு அளிக்கிற காலத்தில் என்னுடைய வர்க்க₃த்துக் கெல்லாம் திருமடைப்பள்ளி யிலிருந்து நெருப்பும் திருக் கொட்டாரத்திலிருந்து அமுது படியும் தீர்த்த₂ம் திருமாலை திருப்பரிவட்டம் எந்தக் காலத்திலும் ஸாதி₃க்கவேண்டும்" என்று கேட்டுக் கொண்டனள். அதுமுதலாக அந்தப்படி நடந்துவருகிறது.*

---

தாஸிக்கு மட்டும் உயிர் போகாமலிருக்கக் கண்டார்கள். அனைவரும் சென்று பெரியபெருமாளிடம் முறையிட அவரும் அர்ச்சகமுகேந அடியாளைத் தம்மிடம் அழைத்துவரச் செய்து "உமக்கு வேண்டிய வரத்தைக் கேட்டுக்கொள்" என்று சொல்ல, அவளும் "இனி வருங்காலங்களில் தேவதாஸிகளில் யாரேனும் மரணம் அடையும்போது திருமடைப்பள்ளியிலிருந்து நெருப்பும், திருக் கொட்டாரத்திலிருந்து அமுதுபடி, தீர்த்தம், திருமாலை, திருப் பரியட்டம் ஆகியவற்றைக் கொடுத்தனுப்ப வேண்டும்" என்று கேட்டுக் கொண்டாள். அந்த நாள் தொடங்கி இவ்வாறே நடந்து வந்தது. *(கி.பி.1953-ஆம் ஆண்டு தாஸிகள் ஒழிப்புச் சட்டத்திற்குப் பிறகு இந்த வழக்கம் நின்று போயிற்று. இந்த தாஸியின் பெயர் வெள்ளையம்மாள் என்றும், அவள் அந்தக் கோபுரத்திலிருந்து கீழே விழுந்ததன் நினைவாக, கிழக்குக் கோபுரத்திற்கு "வெள்ளைக் கோபுரம்" என்ற பெயரும் வழங்கிவருவதாகச் செவிவழிச் செய்திகள் திருவரங்கத்தில் வழங்கி வருகின்றன. அந்தக் கோபுரமும் வெள்ளைச் சுண்ணத்தால் அலங்கரிக்கப்பட்டு வருகிறது.)*

(பழைய பதிப்பில் இந்தப் பாரா "எம்பெருமானடியானுக்குக் கட்டளை" என்னும் தலைப்போடு "பெருமாளும் நாய்ச்சிமாருடனே சேரபாண்டியனிலே இனிதுடன் வீற்றிருந்து, எம்பெருமானடியானை அழைத்து, போரவுகந்தருளி 'உனக்கு வேண்டியதைக் கேட்டுக் கொள்' என்று திருவுள்ளமாகையில்; அவன், 'என்னுடைய வர்க்க₃த்துக்குத் திருமடைப்பள்ளியில் கொள்ளியும், திருக்கொட்டாரத்திலே வாய்க்கரிசியும் அந்தகாலத்திலே ஸாதி₃க்கவேணும்' என்று கேட்டுக் கொண்டான். அது முதலாக, அந்தப்படி நடந்து வருகிறது" என்று உள்ளது.)

## திருவாழிக்கல் போகட்டது

*58. இந்தப்படி திருநாள் நடக்கையில்; பூர்வப்ரகாரம் எட்டாந்திருநாள் விடிவோறே பெருமாள் எல்லைக்கரைக்கு எழுந்தருளுகிறபோது, ஆனைக்காவல் வடக்குத்தெருவில் ரங்க₃வாசலாலே உள்ளே எழுந்தருளி, அகி₂லாண்டே₃ஶ்வரிக்கு ஸேவைஸாதி₃த்து, இளநீர் அமுதுசெய்து, ஜம்பு₃*

---

58. முகம்மதியர்களுடைய படையெடுப்பு நிகழ்ந்த பின்பு கி.பி.1371–ஆம் ஆண்டு நம்பெருமாள் ஆஸ்தானம் திரும்பிய போதிலும் ப்ரணவாகார விமானம், திருக்கோபுரங்கள், திருமதிள்கள், திருமண்டபங்கள் ஆகியன முழுமையாகப் பாழ்பட்டிருந்தன. அவற்றை மீண்டும் புனர்நிர்மாணம் செய்யும் பெரிய பணியை உத்தமநம்பி வம்சத்தவர்கள் மேற்கொண்டனர்.

58.1. அவ்வாறு நடைபெற்று வந்த உத்ஸவங்களில் ஆதி ப்ரஹ்மோத்ஸவமான பங்குனி ப்ரஹ்மோத்ஸவத்தில் எட்டாம் திருநாளன்று கிழக்கே எல்லைக்கரை மண்டபத்திற்கு எழுந்தருளும்போது திருவானைக்கோயில் வடக்குத் தெருவில் ரங்கவாசல் எனப்படும் கோபுரவாசல் வழியாக எழுந்தருளி, அங்கே அகிலாண்டேஶ்வரிக்கு ஸேவை ஸாதித்து, அவளால் ஸமர்ப்பிக்கப்பட்ட இளநீரை அமுதுசெய்து, திருக்கோயிலினுள்ளே

தீர்த்தத்திலே திருவடிவிளக்கி, கிழக்கே ஆழ்வார் திருமங்கை மன்னன் தோப்புக்கெழுந்தருளுகிறது. மற்றத் திருநாளிலே அந்தப்படி திருவடிவிளக்கி, அந்த வடக்கு வாசலாலே தானே திரும்பி உத்தமர்கோயில் ஆழ்வார் திருமாளிகையான கதம்ப தீர்த்தத்துக்கு எழுந்தருளுமிடத்தில், சைவர் பஹுவாகக் கலஹம் பண்ணின படியினாலே, தள்ளும் நூக்குமாக மூன்று வருஷம் கலஹத்திலும் நடந்தது; அதின்பின்பு, ஶகாப்தம் ஆயிரத்திருநூற்றுத் தொண்ணூற்றேழுக்கு மேல் செல்லாநின்ற

---

அமைந்துள்ள ஐம்புதீர்த்தத்தில் திருவடிவிளக்கி, கிழக்கே உத்தமசீலிக்கு அருகில் அமைந்திருந்த திருமங்கைமன்னன் தோப்புக்கு எழுந்தருளுவது வழக்கமாயிருந்தது. மற்றைய ப்ரஹ்மோத்ஸவங்களிலும் மேற்கண்டவாறே திருவடிவிளக்கி உத்தமர்கோயில் ஆழ்வார் திருமாளிகையான கதம்ப தீர்த்தத்திற்கு எழுந்தருளுவார். இவ்வாறு நம்பெருமாள் எழுந்தருளுவதற்கு திருவானைக்கா கோயில் சைவர்கள் எதிர்ப்பு தெரிவித்தார்கள்.

*(திருமாலை எட்டாம் பாட்டு "**வெறுப்பொடு சமணர் முண்டர் விதியில்சாக்கியர்கள் நின்பால் .......**" வ்யாக்யானத்தில் "திருநாளில் எழுந்தருளாநின்றால் நான்று கொள்வாரும், "கொம்பூதிற்று" என்று முட்டிக்கொள்வாருமாயிலே முண்டரிருப்பது. முண்டர் என்கிறது ஶைவரை. "முண்டன் நீறன்" என்கிறபடியே அவனுடைய வடிவையிறே இவர்களும் தரித்திருப்பது".*

*இதன் பொருளாவது: "திருநாளில் நம்பெருமாள் எழுந்தருளினால் தூக்குப் போட்டுக் கொண்டு சாவாரும், நம்பெருமாள் எழுந்தருளும் போது ஊதப்படும் திருச்சின்ன ஒலிகேட்டால் முட்டிக் கொள்வாருமாயன்றோ ஶைவர்கள் இருப்பது. முண்டர் என்பது ஶைவரை. "முண்டன் நீறன்"(திருச்சந்தவிருத்தம்-71) என்கிற படியே அவனைப்போல மழித்த (மொட்டையடித்த) தலையுடையவர்களாயன்றோ அவனடியார்களான இவர்களும் இருப்பது."*

நளவருஷம் பங்குனி-மீ திருநாளிலே எட்டாந்திருநாள் பூர்வப்படிக்கு ஆனைக்காவலுக்கு ஸமீபத்திலே மேற்கே எழுந்தருளச்செய்தே, அநேகம் பாஷண்டி₃கள் ஆயுத₄பாணி களாய் முன்னே வழிகாட்டிக் கொண்டிருக்குமளவில், திருப்பணிசெய்வார் முன்போலே திருவீதி சோதனை பண்ணிக்கொண்டு போக, அத்தை அவர்கள் பொறுக்க மாட்டாமல் கொடவரான வேலேந்தின பெருமான்த₃ாஸரை மெய்யறப்பார்த்து, க்ஷுத்₃ரக்ருதியையும் ப்ரயோகி₃க்கு மளவில்; பெருமாளுடன் ஜீயர்களும் ஸ்ரீவைஷ்ணவர்களும் அனைத்துக்கொத்துப் பரிகரங்களும் விரக்தரும் ஏகாங்கிகளும் திருவிழாக்காரரும்கூட உபநிஷத்தைப்பாராயணம் பண்ணிக்

---

58.2. நம்பெருமாள் இவ்வாறாகத் தொடர்ந்து மூன்று ஆண்டுகள் திருவானைக்காகோயில் சென்று எல்லைக்கரை மண்டபம் செல்லுகையில் சைவர்கள் பெரிய கலஹத்தில் ஈடுபட்டார்கள். சக ஆண்டு 1297-க்கு மேல் *(கி.பி.1375)* நள வருஷம் பங்குனி ப்ரஹ்மோத்ஸவத்தின் போது எட்டாம் திருநாளன்று திருவானைக்கா கோயிலுக்கு மேற்கே நம்பெருமாள் எழுந்தருளியபோது சைவர்கள் பலர், கையிலே ஆயுதங்களுடன் திருவானைக்கா கோயிலுக்குள் புகவிடாமல் தடுத்து நின்றார்கள்.

நம்பெருமாள் எழுந்தருளும்போது திருப்பணி செய்வார் திருவீதிகளில் தடைகள் ஏதேனும் உள்ளனவா என்று ஆராய்ந்து கொண்டு போவார்கள். அவ்வாறு அவர்கள் செய்து கொண்டு போகையில் அத்தை பொறுக்கமாட்டாமல் அவர்களில் ஒருவரான வேலேந்தினபெருமான்தாஸரை கொல்வதற்காக திருவானைக்கா சைவர்கள் க்ஷுத்ர மந்த்ரப்ரயோகம் செய்தனர். அப்போது அந்த வேலேந்தினபெருமான்தாஸரைக் காப்பாற்றும் பொருட்டு நம்பெருமாளுடன் எழுந்தருளிய ஜீயர்களும், ஸ்ரீவைஷ்ணவர் களும், அனைத்துக் கொத்துப் பரிகரங்களும், விரக்தரும், ஏகாங்கிகளும் உபநிஷத்தை பாராயணம் பண்ணிக்கொண்டு,

*கொண்டு, வீரவாத்யங்களுடனே ஆனையேற்றமும் ஸாதித்து, உபநிஷந் மந்த்ரஜபத்துடன் அந்த மெய்யறுந்த திருப்பணி செய்வாரிருக்க, தடஸ்த்தரான மடாதிபதிகள் ஸமாதானம் பண்ணி நல்ல வார்த்தையாலே பொறுப்பித்தார்கள். அதுக்குப் பின்பு, அவர் போகிற வழியிலே திருவாழிக் கல்லைப் போட்டுக்கொண்டு வந்தது. ஆனைக்காவல் ஸ்தலத்தார், தங்களுக்கு மாடுகள் போகிறதுக்கு மாத்திரம் வழி கொடுக்க வேணும் என்று, பரிவர்த்தனையாக நிலமும் கொடுத்து அநுவர்த்தித்தபடியினாலே, அவர்கள் மதிளுக்கு மேற்கே பத்துபாதம் அகலம் வழிவிட்டுத் திருவாழிக்கல்லைப் பொகட்டு, அதுமுதலாக எட்டாந் திருநாளுக்குக் கிழக்கே எழுந்தருளாமல் எல்லைக் கரையிலே எழுந்தருளுகிறது.*

---

வீரவாத்யங்கள் முழங்க வேலேந்திய தாஸரை யானைமேல் ஏற்றி திருவானைக்கா கோயிலுக்குள் சென்றனர். அங்குள்ள ஜம்புதீர்த்தத்தில் நம்பெருமாள் திருவடிவிளக்கி தீர்த்தம் ப்ரஸாதித்தார்.

அதன் பிறகு திருவானைக்கா சைவர்களோடும் அவர்களுக்குக் கடவரான மடாதிபதிகளுடனும் பேச்சு வார்த்தை நடத்தி அதன் பயனாக நம்பெருமாள் எழுந்தருளும் பாதையைக் குறிப்பதற்காகத் திருவாழிக்கற்கள் *(ஸ்ரீஸுதர்சனம் பொறித்த எல்லைக் கற்கள்)* போடப்பட்டன.

திருவானைக்கா ஊர்மக்கள் தங்களுடைய ஆநிரை போவதற்கு மாத்திரம் வழிகொடுக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டபடியால் ஆனைக்காகோயிலின் மதிளுக்கு மேற்கே பத்து பாதம் அகலம் வழிவிட்டு எல்லைக்கற்கள் போடப்பட்டன. அதுமுதலாக பங்குனி ப்ரஹ்மோத்ஸவத்தின் எட்டாம் திருநாளுக்கு ஜம்புகேஶ்வரத்திற்கு எழுந்தருளாமல் நம்பெருமாள் எல்லைக் கரை மண்டபத்திற்கு எழுந்தருளினார்.

*(இந்த நிகழ்ச்சிகளை உத்தமநம்பி வைபவம், ஸ்ரீரங்க*

நாராயணஜீயர் குருபரம்பரை ஆகிய நூல்கள் மிக விரிவாக எடுத்துரைக்கின்றன.

க்ருஷ்ணராய உத்தமநம்பியால் விஜயநகரப் பேரரசின் இரண்டாம் அரசரான புக்கராயர், அவருடைய குமாரரான இரண்டாம் ஹரிஹரராயர், செஞ்சி ராஜாவான கோபண உடையார் ஆகியோரிட மிருந்து தாராதத்தமாக 17,000 பொன் தானம் பெற்று அதைக்கொண்டு கோயிலுக்கு 106 க்ராமங்கள் வாங்கப்பட்டன. இது தவிர, சகாப்தம் 1304 (கி.பி.1382)க்கு மேல் ருத்ரோத்காரி வருஷம் முதல் ஈசுவர வருஷம் வரையில் ஹரிஹரராய மஹாராயர், விருப்பண்ண உடையார், கோபண உடையார், முத்தய்ய நெய்னாயகர், தம்மண்ண உடையார், ப்ரதாநீ லேமப்பர், காரியத்துக்குக் கடவ அண்ணர் முதலானார்களிடம் 5000 பொன் வாங்கி அதைக்கொண்டு கோயிலுக்கு 13 கிராமங்கள் வாங்கப்பட்டன.

சகாப்தம் 1207 (கி.பி.1375)-இல் திருவானைக்கா ஊர் மக்களுக்கும் ஸ்ரீரங்கவாஸிகளுக்கும் இடையே எல்லைச் சண்டை உண்டாகி, அதனால் பல சச்சரவுகள் ஏற்பட்டன. இவ்விஷயம் விஜயநகர மன்னர்களுக்குத் தெரிந்ததும், அவர்கள் தங்கள் குருவான வ்யாஸ உடையார் முதலானவர்களை மத்யஸ்தம்பண்ண அனுப்பினர். பெருமாளுக்கு ஸ்தாநாதிபதியான உத்தமநம்பி ஈரப்பாவாடை உடுத்திக் கையில் மழுவேந்தி கண்ணைக் கட்டிக் கொண்டு எந்தவழி போகிறாரோ அந்த வழியே நம்பெருமாளும் எழுந்தருள வேண்டிய தென்று வ்யாஸ உடையார் முதலான மத்யஸ்தர்கள் நிச்சயித்தார்கள். திருவானைக்காவலாரும் இதை அங்கீகரித்தனர். க்ருஷ்ணராய உத்தமநம்பி, மத்யஸ்தர்களின் நிபந்தனைப்படி திருமந்த்ரத்தை ஜபித்துக்கொண்டு எல்லையை வகுத்துக் கொண்டு ஓடினார். அதனால் இவருக்கு எல்லைநிலையிட்ட பெருமாள் உத்தமநம்பி என்று பட்டப்பேராயிற்று. தான் எல்லையோடிநின்ற இடத்தில் பிரதாநமாக பதினாறுகால் மண்டபமும் இரண்டொரு சிறு மண்டபங்களும் இந்த உத்தமநம்பியே கட்டி வைத்தார்.

(நம்பெருமாள், ஸ்ரீரங்கநாச்சியார் ஆகிய இருவருக்கும்

ஏற்பட்ட ஒவ்வொரு உத்ஸவத்தின் இறுதிநாளன்று, படிப்பு என்றதொரு நிகழ்ச்சி நடைபெற்று வந்தது. சென்ற நாற்பது ஆண்டுகளாக இது நடைபெறவில்லை. பெரியபெருமாள் திருப்பாற் கடலில் இருந்து தோன்றிய வைபவம் தொடங்கி, காவிரிக்கரையில் விபீஷணாழ்வானால் எழுந்தருளப்பண்ணப்பட்டது, தர்மவர்மா ப்ரதிஷ்டை செய்தது போன்ற நிகழ்ச்சிகளை விவரிப்பதோடு மட்டுமல்லாமல் எந்தெந்த மன்னர்கள், ஆசார்ய புருஷர்கள் காலத்தில் மண்டபங்கள் கட்டப்பட்டன, திருப்பணிகள் செய்யப்பட்டன போன்றவற்றை திருத்தாழ்வரைதாஸர் வம்சத்தவர்கள் படித்து வந்தனர். இதற்கு படிப்பு என்று பெயர். நம்பெருமாளைத் தன் இன்னுயிரை ஈந்து காப்பாற்றிய திருத்தாழ்வரை தாஸர் வம்சத்தவர் களுக்கு ஏற்பட்ட மரியாதை இது. அந்த வம்சத்தவர்கள் தற்போது கைங்கர்யத்தில் ஈடுபடாததால், இந்தப் படிப்பு நிகழ்ச்சி நடை பெறுவதில்லை. ஆயினும் பல கைங்கர்யங்களுக்கு தேவஸ்தான ஊழியர்கள் நியமிக்கப்பட்டுள்ளது போல், இந்தப் படிப்பு ஸேவிக்கும் கைங்கர்யத்திற்கும் ஒரு ஊழியரை நியமனம் செய்திடலாம். எவ்வளவோ மாற்றங்களை ஏற்படுத்தி வைத்த நாம், திருத்தாழ்வரை தாஸருக்குப் பெருமை சேர்த்திடும் இந்த நிகழ்ச்சியை ஏன் மீண்டும் புதுப்பிக்கக் கூடாது. இதற்கான சமாதானம் "**பெரியவர்கள் காலத்திலிருந்து இப்படித்தான் நடந்து வருகிறது. அந்த வம்சத்தவர்கள் தவிர வேறு யாரும் படிப்பு ஸேவிக்கக் கூடாது" என்பதே. இவர்களுடைய எண்ணமெல்லாம் நம்பெருமாள் வைபவத்திற்கு எந்தக் குறைபாடு நேர்ந்தால் நமக்கென்ன? அந்த வம்சத்தவர்கள் இல்லை, அதனால் படிப்பு படிக்கக் கூடாது.** ஆனால் படிப்பு ஸேவித்த பிறகு அதன் முடிவில் தீர்த்தம் ஸாதிக்கப்படும். அதை மட்டும் இப்பொழுதும், பலர் தவறாது பெற்றுக் கொள்கிறார்கள். அதாவது செய்யாத ஒரு வேலைக்கு ஸந்மானம் பெற்றுக் கொள்கிறார்கள்.) அவ்வாறு படிப்பு படிக்கப் பட்டு வந்த காலத்தில் விண்ணப்பிக்கப்பட்ட பாடல்கள் ஒன்றில்.

**"மல்லை நிலையிட்ட தோளரங்கேசர் மதிளாள் பட்ட எல்லை நிலையிட்ட வார்த்தையும் போலல்ல-நீதிதன்னால்**

சொல்லை நிலையிட்ட உத்தமநம்பி குலம் தழைக்க
எல்லை நிலையிட்ட வார்த்தை எல்லோருக்கு எட்டெழுத்தே"

என்ற பாடலில் எல்லைநிலையிடுகைக்கு ஆதாரமாயிருந்த அஷ்டாக்ஷரத்தின் சிறப்பும் 59-வது உத்தமநம்பி ஸ்ரீரங்கநாய்ச்சியார் அநுக்ரஹத்தால் தம்முடைய சொல்லை நிலையிட்ட விவரமும் தெரிகிறது. காவிரி வடகரை பூசமண்டபத்துக்கு மேற்கிலிருந்து ஸ்ரீரங்கத்து எல்லையைத் தொடங்கி வடக்காக ஓடும்போது, இப்போது புதிதாக உண்டான ஸ்ரீநிவாஸநகர் கடைசித் தெருவை உள்படுத்தி எல்லை உண்டாயிற்று. அங்குள்ள சிறு பள்ளிக்கூடமே முன்பு பதினாறுகால் மண்டபம் இருந்த இடம். கோயிலைச்சேர்ந்த மண்டபம் காலக்ரமத்தில் நிலக்காரர்களுடையதாகி, நிலம் ஊர்ப்பொதுவாகி, சில அதிகாரிகளின் அசிரத்தையாலும், சில அதிகாரிகளின் அதிக்ரமத்தாலும் மண்டபம் இடிந்து விழுந்தது. பங்குனித் திருநாள் எட்டாம் திருநாளன்று நம்பெருமாள் எல்லைக்கரை எழுந்தருளும்போது பூர்வம் பதினாறுகால் மண்டபத்தில் நடந்த மரியாதைகளை இப்போதும் அங்கே வெறுந்தரையில் உத்தமநம்பி அய்யங்கார், வ்யாஸராய மடத்தார் முதலானார் பெற்றுக் கொள்கிறார்கள்.

இந்த க்ருஷ்ணராய உத்தமநம்பி விஜயநகரத்துக்குப்போய் ராயரைக் (ராஜாவைக்) கண்டு அவர் குமாரரான புக்கஉடையார் உத்தரவுப்படி அணியரங்கன் திருமுற்றத்தில் (*திறந்த வெளியாயிருந்த த்வஜஸ்தம்ப பகுதியில்*) கீழ்ப் புறத்தில் துலாபுருஷ மண்டபம் கட்டி வைத்தார். பிறகு ஹரிஹரராயரும் விருப்பண்ண உடையாரும் வந்து துலாபுருஷமேறிக் கொடுத்த பொன்னைக் கொண்டு கிருஷ்ணராய உத்தமநம்பி ரங்கவிமாநந்தைப் பொன் மேய்ந்தார். நானா தேசங்களிலிருந்தும் வந்த தேசாந்தரி ஜனங்கள் நன்றாக ஸேவிக்கும்படி சித்திரை ரேவதியில் திருத்தேராகி அவபிருதம் நடக்கும்படியாக விருப்பண்ண உடையார் பேரில் சித்திரைத் திருநாள் நடத்தி வைத்ததும் கிருஷ்ணராய உத்தமநம்பிகளே. சித்திரை ப்ரஹ்மோத்ஸவத்தினை இப்போதும் பஞ்சாங்கத்திலும், கோயில் கணக்குகளிலும் "விருப்பன் திருநாள்" என்றே குறிப்பிட்டு வருகிறார்கள். துலுக்கர் கலகத்தில்

யானையேற்றுமண்டபம் ஜீர்ணமாயிற்று. அதைக் கிருஷ்ணராய உத்தமநம்பிகள் ஜீர்ணோத்தாரணம் பண்ணிவைத்தார். யானை வாஹனத்தின்மேல் வைக்கப்படும் பூமாங்குத்தி என்ற புஷ்பாங்கசம் யானையேற்று மண்டபம் கட்டிவைத்ததற்கு உபகார ஸ்ம்ருதியாக வாஹனம் திருவீதி வலம்வந்து இறங்கினதும் உத்தமநம்பிக்கு ப்ரஸாதிக்கும்படி நம்பெருமாள் அநுக்ரஹித்தார். இது உத்தமநம்பி பரம்பரையிலுள்ளவர்களுக்கு ஏற்பட்ட பல மரியாதைகளில் ஒன்றாக இன்றைக்கும் அளிக்கப்பட்டுவருகிறது.

கிருஷ்ணராய உத்தமநம்பிகள் விஜயநகர ராஜாவான ஹரிஹரராயர் பேரால் நம்பெருமாளுக்குத் திருப்பள்ளிக் கட்டி லென்னுமோர் திவ்ய ஸிம்ஹாசனம் பண்ணி ஸமர்ப்பித்தார். ஐநூறு வருஷத்துக்கு முன் உண்டான கட்டில் இப்போது இல்லையாகிலும் பின்புண்டாகும் கட்டிலுக்கெல்லாம் ஹரிஹரராயன் திருப்பள்ளிக் கட்டிலென்றே பேராம்படி அத்தனை பிரஸித்தமாயிருந்தது. இப் போதும் திருக்கார்த்திகையன்று திருமுகப்பட்டயம் வாசிக்கப்படுகையில் "நாம் .... ஹரிஹரராயன் திருப்பள்ளிக் கட்டிலின் மேல் வீற்றிருந்து" என்றே நம்பெருமாளும் அருளிச்செய்கிறார்.

எல்லை, நிலையிட்ட பெரிய கிருஷ்ணராய உத்தமநம்பி ஸ்ரீரங்க ஸ்தலத்துக்கு பல கைங்கரியங்களையும் உபகாரங்களையும் பண்ணிக்கொண்டு, ராஜவல்லபராயிருந்து, ராஜாவாயிருந்த ராயர் நிருபத்தாலே நூற்றெட்டுத் திருப்பதி கைங்கரியங்களையும் ஆராய்ந்துகொண்டு 99 வருஷம் எழுந்தருளியிருந்தார்.

*கோயிலொழுகு ஆனந்தா அச்சுக்கூடாத்தாருடைய பதிப்பில் பின்வரும் செய்திகள் தரப்பட்டுள்ளன:* திருவேளைக் காரர்களுக்கு ஏற்படுத்தி வைத்த மரியாதைபோல் வேலேந்திய தாஸருக்கும் (*சைவர்களுடைய வேலை மார்பிலே ஏந்திய பெருமாள் தாஸர்*) மரியாதைகள் அன்று முதலாக ஏற்படுத்தி வைக்கப்பட்டன. இவ்வாறு திருவாழிக்கற்கள் எல்லைக் கற்களாக போடப்பட்ட பிறகு சைவர்கள் தங்கள் தரப்பில் காயமுற்றாருடன் விஜயநகர மன்னரிடம்

சென்று நீதிகேட்டு முறையிட்டார்கள். இவர்கள் செல்வதற்கு முன்பு கிருஷ்ணராயஉத்தமநம்பி, விஜயநகரம் சென்று கோயில் தரப்பில் உள்ள நியாயத்தை அரசரிடம் முன்வைத்தார். இருதரப்பு வாதங்களையும் கேட்ட விஜயநகர மன்னன் தம்முடைய குலகுருவான வ்யாஸஉடையார் மற்றும் ரகுஉடையார், கோபாலஉடையார் ஆகியோருடைய முன்னிலையில் ஸ்ரீரங்கம் கோயில் ஸ்தலத்தார் களிடமிருந்து எழுத்து மூலமான வாக்குமூலத்தைப் பெற்றான். மாத்வ குருபரம்பரை வ்யாஸராயர் *(கி.பி.1478-1539)* துளுவ மன்னனான கிருஷ்ணதேவராயருடைய *(கி.பி.1509-1530)* மந்திரியாகவும், குலகுருவாகவும் இருந்து வந்தார் என்று குறிப்பிடுகிறது. அவரே திருவானைக்கா சைவர்களுக்கும் ஸ்ரீரங்கம் கோயில் ஸ்ரீவைஷ்ணவர் களுக்கும் இடையே மத்தியஸ்தராய் இருந்து எல்லைத் தகராறை தீர்த்து வைத்தார் என்றும் குறிப்பிடுகிறது. இதன்படி இந்த எல்லைத் தகராறு நடந்த காலத்தை கி.பி.1515-1520-ஆம் ஆண்டுகளுக்கு உட் பட்டதாகக் கொள்ளவேண்டும். கோயிலொழுகு குறிப்பிடும் வ்யாஸ உடையார் இரண்டாம் ஹரிஹரரின் மந்திரியாவார் *(கி.பி.1377-1404)*. கிருஷ்ண தேவராயருடைய மந்திரியாக விளங்கியவர் வ்யாஸராயர் என்பது குறிப்பிடத்தக்கது.

விஜயநகர மன்னனும் தம்முடைய மந்திரிகளான குருவ்யாஸ உடையார், கோபால உடையார், ரகுஉடையார், உத்தமநம்பி, திருவானைக்கா சைவர்கள் ஆகியோரைத் திருவானைக்காவிற்குச் சென்று எல்லைக்கற்களை அதற்குரிய இடங்களில் பதித்திடுமாறு ஆணை யிட்டான். அவ்வாறு மீண்டு வருகையில் திருவானைக்கா சைவர்கள் உத்தமநம்பியிடம் "எங்கள் கோயிலுக்கு ஏற்பட்ட இழப்பை நீர் ஒருவர்தான் சரிசெய்ய முடியும், எங்களுடைய நலனில் அக்கறை உடையவர் அன்றோ நீர்?" என்று கூறியதோடு மட்டுமல்லாமல் அவருக்கு வேண்டிய பொருளை தருவதாகவும் ஆசை வார்த்தை களைக் கூறினர். விஜயநகர மன்னரால் அனுப்பப்பட்ட மடாதிபதிகள் இரண்டு கோயிலுக்கும் பொதுவானதொரு இடத்தைக் காட்டச் சொன்னார்கள். தென்திருக்காவிரிக்கு அருகில் இருந்த மண்டபத்தினை *(அங்கே இரண்டு திருவாழிக்கற்கள் இருந்தன)* அவர்கள் காட்ட,

அங்கிருந்து எல்லைக்கரை மண்டபம் செல்வதற்கான வழியைத் தெரியப்படுத்துவதற்காக உத்தமநம்பியை அந்த மண்டபத்திலிருந்து ஓடிக் காண்பித்திடுமாறு பணித்தார்கள். அவ்வாறு அவர் ஓடுகையில் திருவானைக்கா சைவர்கள் அகிலாண்டேஸ்வரியின் விக்ரஹத்தோடு, திருவானைக்காகோயிலின் வாசலில் நின்றுகொண்டு உத்தமநம்பியிடம் மீண்டும் தங்களுடைய கோயில் பெருமையைக் காப்பாற்றிட வேண்டு மென்று வேண்டிக் கொண்டார்கள். அவர்கள் மீது இரக்கம் கொண்ட உத்தமநம்பியும், வேறொரு மார்க்கத்தில் ஜம்புதீர்த்தத்தை தவிர்ந்து கிழக்கு மதிளுக்கு வெளியேஓடத் தொடங்கினார். அவருடன் வந்த ஸ்ரீரங்கம் ஸ்ரீவைஷ்ணவர்கள் உத்தமநம்பியின் இந்தச் செயலுக்கு எதிர்ப்புத் தெரிவித்தனர்.

விஜயநகர மன்னனின் பிரதிநிதிகளான மடாதிபதிகள் இரு தரப் பினரையும் சமாதானப்படுத்தி எல்லைக் கற்களைப் பதித்தார்கள். திருவானைக்கா ஸ்தலத்தார்கள் தங்களுடைய மாடுகள் மேய்ச்சல் காண்பதற்கு இடம் வேண்டுமென்று பத்து பாகம் நிலம் வேண்டி அதற்குப் பரிவர்த்தனையாக வேறொரு இடத்தில் நிலத்தை தந்தார்கள்.

***ஸ்ரீரங்கநாராயணஜீயர் குரும்பரம்பரையில் தெரி-வித்தபடி:*** இந்த குருபரம்பரையின்படி எல்லைத் தகராறு நடந்த ஆண்டு சக வருஷம் 1304-ஆக *(கி.பி.1382)* குறிப்பிடப் பட்டுள்ளது. இந்த எல்லைத் தகராறின்போது ஒன்பதாவது பட்டத்தில் இருந்த பராங்குச ஜீயர் மற்றும் சில ஏகாங்கிகள் தங்கள் உயிரைத் தியாகம் செய்ததாகவும் குறிப்பிடப்பட்டுள்ளது. பத்தாவது பட்டம் வகித்த அழகியமணவாள ஜீயர் உத்தமநம்பியோடு விஜயநகர மன்னனிடம் சென்று இந்த எல்லைத் தகராறை முடிவுக்கு கொண்டு வந்ததாகக் குறிப்பிடுகிறது.

மேலே குறிப்பிடப்படும் செய்திகளைக் கோயிலொழுகு தெரிவிக்கும்போது சக ஆண்டு 1355 *(கி.பி.1433)* உத்தமநம்பி எல்லை மதிளை ஏற்படுத்தியதாகக் குறிப்பிடுகிறது.

## பெரியகிருஷ்ணராயர் உத்தமநம்பி கைங்கர்யம்

59. இந்தப்படி ஸ்த₂லத்துக்குக் கலகம் தீர்ந்து, விஜய நகரத்துக்கு நாலாறுதரம் போய், ஹரிஹரராயரை அநுவர்த்தித்து, ஶகாப்₃த₃ம் ஆயிரத்து முந்நூற்று நாலுக்குமேல் செல்லாநின்ற ருதி₄ரோத்₃கா₃ரி வருஷம் முதல் ஈஶ்வர-ஹு வரைக்கும் பதினைந்து வருஷம் ஹரிராயர், மஹாரராயர், கோபண உடையார், விருப்பண உடையார், முத்தைய தெண்ணாயக்கர், தம்பணவுடையார், ப்ரத₄ானி சோமப்பர் தெண்ணாயக்கர், காரியத்துக்குக்கடவ அண்ணர், கோபணர் உள்ளிட்டார்கையில், உத₃கத₄ாரா பூர்வகமாக பெரிய கிருஷ்ணராயர் உத்தமநம்பி வாங்கின திருவிடை யாட்டம்; இதுவும் ஆனையேற்ற மண்டபம் கலஹத்திலே ஜீர்ணமாகையில் அதைக் கட்டிவைத்ததும், பெரியக்ருஷ்ணராயர் உத்தம நம்பி கைங்கர்யம்.

---

இவ்வாறாகக் கலகம் தீர்ந்தபின்பு சக ஆண்டு 1304-க்கு மேல் ருதிரோத்காரி வருஷம் முதல் ஈஶ்வர வருஷம் ஈறாகப் பதினைந்து ஆண்டுகளுக்கு *(கி.பி.1382-1397)* பெரிய கிருஷ்ணராயர் உத்தமநம்பி விஜயநகரத்திற்குப் பலதடவை சென்று *(கோயிலொழுகு நாலாறுதரம் சென்றதாகக் குறிப்பிடுகிறது.)* விஜயநகர மன்னனாக விளங்கிய ஹரிஹரராயர் *(இரண்டாம் ஹரிஹரர் - கி.பி.1377-1404)* மற்றும் மஹாராயர், கோபண்ணஉடையார், விருப்பண்ணஉடையார், முத்தைய தென்னாயக்கர், தம்பணவுடையார், ப்ரதானி சோமப்பர் தென்னாயக்கர், காரியத்துக்குக்கடவ அண்ணர், கோபணர் ஆகியோரிடமிருந்து 13 கிராமங்களைத் தானமாகப் பெற்றார். அதன் மூலம் ஈட்டிய பொருளைக் கொண்டு கலாபத்தின் போது சிதைந்த யானையேற்ற மண்டபத்தை பழுது பார்த்து மீண்டும் கட்டினார்.

## நாக மங்க₃லம் அண்ணப்பவுடையவர் கைங்கர்யம்

60. அமுதுமண்டபம் நாலு தூணுக்கும் செம்பின்மேல் பொன் பூசுவித்து, நடுவே திருப்போனகம் படைக்கிற பலகைக்கு வெள்ளித்தகடு போடுவித்தது நாகமங்க₃லம்

---

(கோயிலொழுகில் இந்த உத்தமநம்பியைக் குறிப்பிடும் போது எல்லைத்தகராறின் போது இருந்த உத்தமநம்பியோடு இணைத்துச் செய்திகள் கொடுக்கப்பட்டுள்ளன. அது தவறு. பெரிய கிருஷ்ணராயர் உத்தமநம்பிக்கு ஸ்ரீரங்காசார்ய உத்தமநம்பி என்ற குமாரர் எழுந்தருளியிருந்தார். லக்ஷ்மீகாவ்யம் இந்த உத்தமநம்பிக்கு சக்ரராயர், திம்மராயர் என்ற பெயர் கொண்ட இரண்டு சகோதராகள் இருந்ததாகக் குறிப்பிடுகின்றது.

இதில் திம்மராயர் ஸந்யாஸ ஆஶ்ரமத்தை மேற்கொண்டார். ஸ்ரீரங்காசார்ய உத்தமநம்பிக்கு 1. வழியடிமை நிலையிட்ட உத்தமநம்பி 2. மெய்நிலையிட்ட உத்தமநம்பி (உண்மையை நிலை நாட்டிய உத்தமநம்பி) 3.எல்லைக்கரைநிலையிட்ட உததமநம்பி என்ற மூன்று பட்டப்பெயர்கள் அமைந்துள்ளன. மேலும் பெரிய கிருஷ்ணராயர் உத்தமநம்பி கோயில் நிர்வாஹங்களை கி.பி.1383 தொடங்கி கி.பி.1397 ஈறாக மேற்பார்வையிட்டு வந்ததாகவும், வழியடிமை நிலையிட்ட உத்தமநம்பி கி.பி.1407 முதல் கி.பி.1450 வரை ஸ்ரீரங்கம் கோயில் மேற்பார்வையாளராக செயல்பட்டு வந்ததாகவும் குறிப்பிடுகின்றது. இவருடைய திருப்பேரனாரே லக்ஷ்மீகாவ்யத்தை இயற்றிய திருமலாதீஶர்).

60. காயத்ரி மண்டபத்தில் அமைந்துள்ள அமுது மண்டபத்தில் *(அமுது பாறை)* அமைந்துள்ள நான்கு தூண்களுக்கும் செப்புத்தகடு சேர்த்து, அதன்மேல் பொன்முலாம் பூசியதும், திருப் போனகம் படைக்கின்ற பலகைக்கு வெள்ளித்தகடு போடு வித்ததும், நாகமங்கலம் அண்ணப்பவுடையார் கைங்கர்யம்.

அண்ணப்ப உடையார் கைங்கர்யம். இதை காலவிஶேஷத்திலே பிரித்து வெள்ளிக்கொப்பரை பண்ணிற்று.

## திம்ம ராகுத்தர் கைங்கர்யம்

61. திருவணுக்கன் திருவாசலுக்கு மஹாதோரணமும் செம்பின்மேல் பொன்பூசிப் பண்ணுவித்து, திருக்கதவுக்கும் அப்படியே பூச்சுத்தகடு போடுவித்து, திருவரங்கச்செல்வனார் எழுந்தருளியிருக்கிற பீடத்துக்கும் பூச்சுத்தகடு போடுவித்தது, ஸாளுவகோ்பால ராஜாவின் மநுஷ்யன் **திம்மராகுத்தர்** கைங்கர்யம்.

## ஹரிஹர ராயர் கைங்கர்யம்

௬௨. அழகியமணவாளத் திருமண்டபத்தில் தந்தத் திருப் பள்ளிக்கட்டில் மஞ்சமும் ஹரிஹரராயன் கைங்கர்யமாகப் பண்ணி வைத்ததும், பெரிய க்ருஷ்ணராயர் உத்தமநம்பி.

---

பிற்காலங்களில் இந்த வெள்ளித்தகடு பலகைகளிலிருந்து பிரித்தெடுக்கப்பெற்று வெள்ளி கொப்பரையாக வார்க்கப்பட்டது.

61. திருவணுக்கன் திருவாசலில் *(துவாரபாலகர்களான ஜயவிஜயாள் எழுந்தருளியிருக்கும் வாசலுக்குத் திருவணுக்கன் வாசல் என்று பெயர்)*, மகர தோரணமும் *(தங்கத்தால் வார்க்கப்பட்ட மீன்களைக்கொண்டு அமைக்கப்பட்ட தோரணம்)* செப்பினாலான திருக்கதவுகளுக்குத் தங்கமுலாம் பூச்சிட்டு நம்பெருமாள் எழுந்தருளியிருக்கும் பீடத்திற்கு பூச்சுத்தகடு போடுவித்தது சாளுவ கோபாலராஜாவின் ப்ரதானியான திம்மராகுத்தர் கைங்கர்யம். *(இந்தக் காரணம் கொண்டு ஜயவிஜயாள் எழுந்தருளியிருக்கும் வாசலுக்குத் தங்க வாசல் என்று பெயர். தற்போது இந்தக் கதவுகளில் வெள்ளித் தகடுகள் பொருத்தப்பட்டுள்ளன.)*

62. பெரியகிருஷ்ணராயர் உத்தமநம்பி அழகியமண

## வேத$_3$ார்ய ப$_4$ட்டர் ஸ்ரீகார்யம் நிர்வஹித்தது

*63. ஈஶ்வர வருஷம் முதல் விக்கிரம வருஷம் வரைக்கும் **வேத$_3$ார்யப$_4$ட்டர்** ஸ்ரீகார்யம் நிர்வஹித்தார்.*

## கந்தாடையார் அதீ$_4$நமாயிருந்த உடையவர் ஸந்நிதி$_4$யை வேதா$_3$சார்யப$_4$ட்டர் உடன்படிக்கைகொடுத்துத் தன்வசமாக்கினது

*64. அதற்குப் பூர்வம் உடையவர் திருநாட்டுக்கெழுந் தருளின பின்பு; எதிராஜனைப் பெருமாள் நியமநத்தினாலே சுந்தரபாண்டியன் துலாபுருஷ மண்டபத்திலே அர்ச்சா வதாரமாக ஏறியருளப் பண்ணுவித்து அனைத்தழகும் நடத்தினது கந்தாடையாண்டான். ஆயிஉள்ளிட்டார் பரக்கத்*

---

வாளன் திருமண்டபத்தில் நம்பெருமாள் எழுந்தருளும்போது தந்தத்தினாலான பள்ளிக்கட்டிலும், மஞ்சமும் இரண்டாம் ஹரி ஹரராயர் *(கி.பி.1377-1404)* கைங்கர்யமாகப் பண்ணி வைத்தார். கார்த்திகை மாதத்தில் திருக்கார்த்திகையன்று சந்தன மண்டபத்தில் நம்பெருமாள் எழுந்தருளியிருக்கும்போது, இந்தக் கட்டிலில் எழுந்தருளியிருப்பதாக திருமுகப்பட்டயம் வாசிக்கப்படுகிறது.

63. ஈஶ்வர வருஷம் முதல் விக்கிரம வருஷம் ஈறாக நான்கு ஆண்டுகளுக்கு வேதாசார்யபட்டர் கோயில் ஸ்ரீகார்யம் நிர்வஹித்தருளினார்.

64.1. எம்பெருமானார் திருநாட்டுக்கு எழுந்தருளிய பிறகு அவருடைய சரமத்திருமேனி பெரியபெருமாள் நியமனத் தாலே சுந்தரபாண்டியன் துலாபுருஷ மண்டபத்திலே திருப்பள்ளிப் படுத்தப்பட்டது. அவ்வாறு திருப்பள்ளிப்படுத்தப்பட்ட இடத்தின்

திருமண்டபங்களும் கட்டுவித்து உபலாளித்தபடியினாலே, அந்தக் கோயில் கந்தாடை யாரதீநமாக நடந்துவர; திருவரங்கந் திருப்பதியிலே பெருமாளை ஸேவிக்கவந்த பரிஜநங்களுக்கு, பெரிய திருநாளிலே, அந்த எம்பெருமானார் ஸந்நிதி₄யிலே ஸந்நிதி₄ப்பேர், ஸமயமுத்₃ரையான திருவிலச்சினை ஸாதி₄த்து வந்தார்கள். துலுக்காவணத்திலே கோயில் திருக்காப்பைச் சேர்த்தபடியினாலே, பரிஜநங்களும் வராமல் ஸமயமுத்₃ரை ஸாதி₃க்கிறதற்கில்லாமலிருந்தது. பின்பு, பெருமாளும் எழுந் தருளி, திருக்காப்பு நீக்கி, விருப்பண உடையார் திருத்தேர்த் திருநாளிலே பரிஜநங்களும் வர; தத்காலத்திலே அந்த ஸமய முத்₃ரையை, ஸ்ரீப₄ண்ட₃ாரம் என்று எம்பெருமானார்

---

மேலே இயற்கை மெழுகினாலான இராமானுசருடைய அர்ச்சாத் திருமேனி முதலியாண்டானுடைய திருக்குமாரரான கந்தாடை ஆண்டானால் ப்ரதிஷ்டை செய்யப்பட்டது. வாதூலதேசிக வழித்தோன்றல்களான பெரியாயி சிறியாயி ஆகியோர் அந்த துலாபுருஷ மண்டபத்திலே மண்டபங்கள் கட்டுவித்து உடைய வருடைய அர்ச்சாத்திருமேனியை ரக்ஷித்து வந்ததினாலே உடையவர் ஸந்நிதி கந்தாடை வம்சத்தவர்களாலே பரிபாலிக்கப் பட்டு வந்தது.

64.2. ஸ்ரீரங்கத்தில் பெரிய திருநாளில், பெரிய பெருமாளை ஸேவிக்க வரும் வெளியூர் கைங்கர்யபரர்களுக்கு உடையவர் ஸந்நிதியில் கந்தாடையார் திருவிலச்சினை ஸாதித்து வந்தார்கள். முகம்மதியர்களுடைய படையெடுப்பிற்குப் பிறகு ஸ்ரீரங்கத்தில் கந்தாடையார் வம்சத்தவர்கள் யாரும் இல்லாத தாலும், அதனால் கைங்கர்யபரர்கள் திருவிலச்சினை பெற்றுக் கொள்ளாததாலும் உடையவர் ஸந்நிதியில் திருவிலச்சினை ஸாதிக்கும் பழக்கம் நின்றுபோயிற்று.

64.3. கி.பி.1371-ஆம் ஆண்டு நம்பெருமாள் உபய

ஸந்நிதி4யிலே ஸாதி3க்க வொட்டாமல், வேதா3சார்யப4ட்டர் தம் மநுஷ்யரை ஸாதி3க்கச்சொல்லி, எம்பெருமானார் ஸந்நிதி4ப்பேரைத் தள்ளிவிட்டு ப3லவந்தமாக நடந்த படியாலே, அந்த வேதா3சார்ய ப4ட்டர் ஒருக்கால் இருக்கால் எம்பெருமானாரை ஸேவிக்க வந்தவிடத்திலே, ஒரு பர்யா யமாக அவமதி நடக்க, அதுமூலமாக பூர்வம் திருவிக்கிரம சோழன் ப்ரதிஷ்டி2ப்பித்த சக்ரவர்த்தித் திருமகன் கோயிலில் தெற்கு அறையிலே யதிராஜனை ப்ரதிஷ்டி2ப்பித்து, அவ் விடத்திலே, பெரிய ஸந்நிதி4யிலே தம்முடைய கைங்கர்ய

---

நாய்ச்சிமார்களோடு ஆஸ்தானம் எழுந்தருளிய பிறகு விஜயநகர மன்னர்களுடைய உதவிகொண்டு கோமில் புனர்நிர்மாணம் செய்யப்பெற்றது. கி.பி.1383-ஆம் ஆண்டு விருப்பண்ண உடையார் பெயரிலே ப்ரஹ்மோத்ஸவமும் நடைபெறத் தொடங் கியது. சித்திரை ரேவதி திருநக்ஷத்திரத்திலே நம்பெருமாள் திருத்தேரிலே திருவீதி எழுந்தருளினார். அந்தத் திருநாளைக் காண வெளியூர் கைங்கர்யபரர்கள் பலர், உடையவர் ஸந்நிதிக்கு வந்து திருவிலச்சினை பெற வேண்டினார்கள். அப்போது வேதாசார்யபட்டர் தமக்கு அந்தரங்கமானவர்களைக் கொண்டு எம்பெருமானார் ஸந்நிதியில் கைங்கர்யம் பார்த்து வந்த கந்தாடையாருடைய கைங்கர்யபரர்களை திருவிலச்சினை ஸாதிக்கவொட்டாமல் இடையூறு செய்து பலவந்தமாக அந்த ஸந்நிதியை ஆக்கிரமித்துக் கொண்டார். வேதாசார்யபட்டர் உடையவர் ஸந்நிதிக்கு எழுந்தருளும்போது அவருக்குரிய மரியாதைகள் கொடுக்கப்படவில்லை.

64.3.1. எம்பெருமானார் திருவடிகளில் எழுந்தருளப் பண்ணப்பட்ட சங்குசக்ராதிகளைக் கொண்டே திருவிலச்சினை ஸமர்ப்பிப்பது வழக்கத்தில் இருந்து வந்ததால், உள்ளாண்டான் ஸந்நிதியில், அதாவது சக்கரவர்த்தி திருமகன் ஸந்நிதியில் தெற்கு அறையிலே வடக்கு நோக்கிப் புதிதாக ஒரு உடையவர்

*மாகச் சில உபகரணங்களையும் பண்ணுவித்து, திருப்புகைக் காலுக்குத் தம்முடைய திருநாமம் சாற்றி, ஸந்நிதி₄யிலே அந்தப்பேர் நடத்திவைத்தார். ஸந்நிதி₄யிலே கூரநாராயண ஜீயர் பட்டப்பேருக்கு வரிசைகள் ஸாதி₃த்தவுடனே ஸ்ரீஸேநாபதி து₄ரந்த₄ரவரிசைகளையும் தாமே பெற்றுக் கொண்டு வந்தார். இந்தப்படி நாலு வருஷம் நடந்தபின்பு*

---

அர்ச்சா விக்ரஹத்தை வேதாசார்யபட்டர் ப்ரதிஷ்டிப்பித்தார். அந்த இடத்தில் உள்ளூர் வெளியூர் கைங்கர்யபரர்களுக்குத் திருவிலச்சினை ஸாதிக்கப்பட்டது. பெரியபெருமாள் ஸந்நிதியிலே தம்முடைய கைங்கர்யமாய் சில உபகரணங்களையும் பண்ணுவித்தார். தூபமிடும் திருப்புகைக்காலுக்கு தம்முடைய திருநாமம் சாற்றி அதற்கான அருளப்பாட்டினையும் ஸ்தானீகர் வாயிலாக அழைத்திட வழிவகுத்தார். *(இன்றைக்கும் தூபக்கால் ஸமர்ப்பிக்கப் படும்போது சில சமயங்களில் "வேதாசார்யம் பிடித்தான்" என்ற அருளப்பாடு வழக்கத்தில் உள்ளது. மற்றைய சமயங்களில் "ஏல்யம் பிடித்தான்" என்ற அருளப்பாடு சாதிக்கப்படுகிறது.)*

64.3.2. பெரிய ஸந்நிதியிலே ஸ்ரீரங்கநாராயணஜீயருக்குப் பிறகு தம்முடைய மரியாதையாகத் தீர்த்தம், ப்ரஸாதம், ஸ்ரீசடாரி மரியாதை ஆகியவற்றைப் பெற்று வந்தார். இவ்வாறு நான்கு வருஷங்கள் வேதாசார்யபட்டர் ஸ்ரீகார்யம் நிர்வஹித்து வந்தார். அதன் பின்பு அதிகார மாற்றம் ஏற்பட்டு மெய்நிலையிட்ட உத்தமநம்பி ஸ்ரீகார்ய நிர்வாஹம் வகித்து வந்தார். அவருடைய திருத்தகப்பனார் அழகியமணவாள நம்பி திருமடைப்பள்ளி கைங்கர்யபரர்களுக்குத் தலைவராய் விளங்கி வந்தார்.

*(உடையவர் காலந்தொட்டு கருடவாஹனபண்டிதர் வம்சத்தவர் அதாவது உத்தமநம்பிகள் திருமடைப்பள்ளி மேற்பார்வை யாளராகவும், அங்கு தயாரிக்கப்படும் நெய் கொண்டு பதார்த்தங்கள் அழகியமணவாளன் திருமேனிக்கு ஊறுசெய்யாவண்ணம், திருப்பவள வாய்க்குச் சுவையுடையதாய், தயாரிக்கப்படுகின்றனவா? என்பதைக்*

அந்த அதி$_4$காரம் மாறாடி, மெய்நிலையிட்ட உத்தமநம்பி விஜயநக$_3$ரத்திலும் வந்து ராயர் நிருபப்படியே ஸ்ரீகார்யம் நிர்வஹித்துத் துடங்கினவுடனே, அந்த உத்தமநம்பி தமப்பன் **அழகிய மணவாளநம்பி** முற்காலத்தில் ஸ்வாமி திருமடைப் பள்ளி கைங்கர்யத்தில் தலைவராய் ஸ்ரீரங்க$_3$ராஜநாத$_2$ன் வாதூ$_4$லதே$_3$ஶிகர் திருவடிகளில் ஆஶ்ரயித்தவனான படியினாலே, அந்த அபி$_4$மாநத்தாலே அந்தக் கொத்துப் பரிகரங் களும் "உடையவர் ஆஜ்ஞையை அதிக்ரமிக்கலாகாது" என்று யோசித்து, ப$_4$ட்டரை நிராகரித்து, கந்தாடையாரதீ$_4$நத்தையும் அதுக்குள்ள வரிசைகளையும் அவர்கள் தே$_3$ஶாந்தரஸ்த்த$_2$ரான படியினாலே ஸ்ரீப$_4$ண்ட$_3$ாரம் சேர்க்க;

4. ஸ்ரீமச்ச$_2$காப்$_3$தே$_3$ நவலோகப$_4$ாஜி
 விகாரிணி ஹ்யுத்தமநம்பி$_3$நாம்ந: |
வேத$_3$ார்யப$_4$ட்டோ து$_4$ரி திம்மராஜோ
 விதீர்ய பத்ரம் ஸமயம் தத$_3$ாக்$_3$ரஹீத் ||

---

*கண்காணிக்கவும், திருப்பதியார் கொத்துடன் இணைந்து இரவு தந்வந்த்ரி ஸந்நிதியிலிருந்து குடிநீரும் (கஷாயம்), பாலமுதும் கொண்டு வருவதுமான பணிகளில் ஈடுபட்டிருந்தனர்.)*

64.3.3.அழகியமணவாளநம்பி ஸ்ரீரங்கராஜநாதன் என்ற திருநாமம்கொண்ட வாதூலதேசிகர் திருவடிகளை ஆஶ்ரயித்து இருந்தபுடியாலே "உடையவருடைய ஆணையை மீறலாகாது" என்று கருதி வேதாசார்யபட்டர் திருவிலச்சினை ஸாதிக்க ஒண்ணாதபடி செய்து கந்தாடையார் ஆதீனத்தை ஸ்ரீபண்டாரத் திலே சேர்ப்பித்தார்.

64.3.4. ஸ்ரீமச்ச$_2$காப்$_3$தே$_3$ நவலோகப$_4$ாஜி
 விகாரிணி ஹ்யுத்தமநம்பி$_3$நாம்ந: |
வேத$_3$ார்யப$_4$ட்டோ து$_4$ரி திம்மராஜோ
 விதீர்ய பத்ரம் ஸமயம் தத$_3$ாக்$_3$ரஹீத் ||

வேதார்ய பட்டோபரி ஸமயம் விதீர்ய திம்மராஜ: பத்ரம் ததா அக்ரஹீத் என்று அந்வயம்.

*என்று நாளளவிலே அந்த ப₄ட்டரும் எல்லாரையும் அநு ஸரித்து, அர்த்த₂ப₃லத்தாலேயும் ஸமயம் முதலானது களைத் தம்முடைய வசம் பண்ணுகைக்கு ராயர் மநுஷ்யன் கோபண திம்மராஜா, ஸ்த்த₂லத்தார் முன்னிலைக்கும் உத்தமநம்பி பேருக்கு "அவர்கள் வருகிறவரைக்கும் நாமநுப₄விக்கிறோம்" என்று உடன்படிக்கை எழுதிக்கொடுத்தது, ஶகாப்₃த₃ம் ஆயிரத்துமுந்நூற்று நாற்பதுக்கு மேல் விகாரி வருஷத்திலே.*

---

என்ற ஶ்லோகத்தின்படி வேதாசார்ய பட்டரும் ஊரில் உள்ள அனைவருடன் அனுசரித்துக் கொண்டு ஸ்தலத்தார் முன்னிலையில் உத்தமநம்பி வம்சத்தவருடன் ஒரு உடன் படிக்கை செய்து கொண்டார். அதன்படி சக ஆண்டு 1340-க்கு மேல் *(கி.பி. 1418)* விகாரி வருஷத்தில் கந்தாடை வம்சத்தவர்கள் வரும்வரையில் தாம் திருவிலச்சினை ஸமர்ப்பித்து வருவதாக உடன்படிக்கை செய்து கொண்டார். இந்த வேதாசார்ய பட்டருக்கு உத்தண்ட பட்டர் என்ற திருநாமம் விளங்கி வந்தது.

*(சோழதேசத்தில் திருக்கோயில் கைங்கர்யங்களில் ஈடுபட்டுள்ளோர், குறிப்பாக ஸ்ரீபாஞ்சராத்ர அர்ச்சக சமூகத்தினர் வாதூலதேசிக வம்சத்தவரான கோயில்கந்தாடையண்ணன் சிஷ்யர் களாகவே விளங்கிவருவதை இன்றும் காணலாம்.*

*ஆனால் ஸ்ரீரங்கம் கோயிலில் அர்ச்சகர்கள் தவிர மற்றைய கைங்கர்யபரர்கள் குறிப்பாகப் பண்டாரிகள், வேதவியாஸபட்டர், வாதூலரங்காசார்யர், கோயில்கந்தாடையண்ணன் சிஷ்யர்களாக விளங்குவதை இன்றும் காணலாம். மேலும் திருவெள்ளறை, திருமோகூர் போன்ற திவ்யதேசங்களில் அர்ச்சக கைங்கர்யம் புரியும் பூர்வசிகையார் (சோழியர்கள்) பலர் வேதவ்யாஸபட்டருடைய சிஷ்யர்களாக விளங்குகின்றனர். மேற்சொன்ன நிகழ்ச்சிகளே இத்தகைய நிலைமைக்கு காரணங்களாக அமைந்துள்ளன. அவரவர் குடும்பங்களிலே மேற்கொள்ளப்பட்டு வரும் பழக்கத்தின்படி மேலே*

*சொல்லப்பட்ட ஆசார்ய புருஷர்களை ஆஶ்ரயித்துத் தற்போதும் திருவிலச்சினை பெற்று வருகிறார்கள்.*

*எம்பெருமானார் ஸந்நிதியிலே எழுந்தருளியிருக்கும் உடையவர் போலவே உள்ளாண்டாள் ஸந்நிதியிலே உடைய வருடைய அர்ச்சாதிருமேனியைக் காணலாம். இந்தத் திருமேனிக்கு சந்தனப்பூச்சு அளிக்கப்படுகிறது. எம்பெருமானார் ஸந்நிதியில் உள்ள உடையவருக்கு பச்சைக் கற்பூரம், குங்குமப்பூ சேர்த்து அரைக்கப்பட்ட குழம்பு ஆண்டிற்கு இருமுறை சாற்றப்படுகிறது.)*

**இந்த நிகழ்ச்சிகள் "உத்தமநம்பி வைபவம்" என்ற நூலில் கீழ்க்கண்டவாறு தெரிவிக்கப்பட்டுள்ளன:**

சகாப்தம் 1340 (கி.பி.1418)-க்கு மேல் விகாரி வருஷத்தில் கந்தாடையார் ஆதீநத்துக்குச் சொந்தமான ஸமயம் மரியாதை வியவஸ்தை முதலானவைகளை, அவர்கள் தேசாந்தரஸ்தர்களாயிருந்த படியால் (*ஸ்ரீரங்கத்தை விட்டகன்று தொலைதூரங்களில் வசித்து வருபவர்களாய் இருப்பதால்*) அவர்கள் திரும்பி வருமளவும் பட்டர் தானே அநுபவித்து வருவதாய் ராயர் மநுஷ்யரான கொப்பண்ண திம்மராஜான் முன்னிலைக்கும் இந்த வழியடிமை நிலையிட்ட பெருமாள் உத்தமநம்பி முன்னிலைக்கும் உடன்படிக்கை எழுதிக்கொடுத்தார்.


உள்ஆண்டாள்

## பெரிய கிருஷ்ணராயருத்தமநம்பி, பெரியநம்பி வம்ஸஸ்த₂ர் திருவடிகளில் ஆஶ்ரயித்தது

65. பின்பு அந்த எல்லைநிலையிட்ட பெரியக்ருஷ்ண ராயர் உத்தமநம்பி, ஸ்த்த₂லத்துக்கு அநேக உபகாரங்களைப் பண்ணி, ராஜவல்லப₄ராய், முத்₃ரையும் ஸ்த்த₂லத்திலே சேர்த்துக்கொண்டு, நூற்றெட்டுத்திருப்பதி தி₃வ்யதே₃ஶ கைங்கர்யங்களும் ஆராய்ந்துகொண்டு, ப₃ஹு₋காலமா யிருக்கிற காலத்திலே; தான் 'அசக்ராங்கிதபரனானோம்' என்று கலுஷிதஹ்ருத₃யனாய், வார்த்த₄கம் மிகுந்த படியாலேயும், ஆசார்யர்கள் தே₃ஶாந்தரஸ்த்த₂ர்களான படியினாலேயும், ப₄ட்டர் கந்தாடையாருக்கு விரோதி₄யான படியினாலேயும், அங்கே ஆஶ்ரயிக்க மநஸ்ஸில்லாமல் சிந்தித்துக் கொண்டிருக்க;

---

65. எல்லைநிலையிட்ட பெரியகிருஷ்ணராயர் உத்தம நம்பி ஸ்ரீரங்கம் கோயிலுக்கு அநேக கைங்கர்யங்களைச் செய்த தோடு மட்டுமல்லாமல் 108 திவ்யதேச கைங்கர்யங்களை குறை யின்றி நடத்திக் கொண்டுவந்தார். விஜயநகர மன்னனுடைய பிரதிநிதியாய் விளங்கிய அவர் ராயருக்கு ஏற்பட்ட முத்திரையுடன் கோயில் நிர்வாஹத்தையும் மேற்பார்வையிட்டுவந்தார்.

65.1. அவ்வாறு பல ஆண்டுகள் எழுந்தருளியிருந்த உத்தம நம்பி திருவுள்ளத்தில் 'தாம் ஒரு ஆசார்யரை அணுகி திருவிலச்சினை பெற்று நற்கதியடையப் பெற்றிலோமே' என்ற அனுதாபம் ஏற்பட்டது. அவருடைய ஆசார்யரான கந்தாடையார் ஸ்ரீரங்கத்தைவிட்டகன்று தொண்டைமண்டலம் சென்று விட்டபடியினாலும், அந்தக் கந்தாடையாருக்கு விரோதமாக வேதாசார்யபட்டர் செயல்படுவதாலும் அவரிடம் திருவிலச்சினை பெற அவர் உள்ளம் இடங் கொடுக்கவில்லை. அந்த சமயத்தில் கலாபத்தின் போது திருவரங்கத்தைவிட்டு அகன்ற பெரியநம்பி

*தே₃ஶாந்தரத்திலிருந்து, பெரிய நம்பி வம்ஶ்யராய் ஜ்ஞாந வ்ருத்₃த₄ராய் வ்யோவ்ருத்₃த₄ ரானவர் ஸ்த்த₂லம் க்ஷேமமான ஸமாசாரம் கேட்டு, தம்முடைய அதி₄நத்துக்கெழுந்தருள; அவர் திருவடிகளிலே ஆஶ்ரயித்தார்.*

*இந்த வேத₃ாசார்ய ப₄ட்டருக்கு "**உத்தண்ட₃ப₄ட்டர்**" என்று திருநாமம் சொல்லுகிறது.*

## கஜவேட்டை ப்ரதாபதே₃வமஹாராயர் காலத்தில், உத்தமநம்பி சக்ரராயருடன் ஸ்ரீகார்யம் நிர்வஹித்தது

*66. ஶகாப்₃த₃ம் ஆயிரத்துமுந்நூற்று நாற்பத்துமூன்றுக்கு மேல் ப்லவ வருஷத்தில், எல்லை நிலையிட்ட உத்தமநம்பி, விஜயநக₃ரத்திலே போய், கஜவேட்டை ப்ரதாபதே₃வ மஹாராயரை ரஞ்ஜிப்பித்து, அவர் கையிலே அநேக*

---

வம்சத்தவர் வயதில் பெரியவராய் ஞான அனுஷ்டானம் நன்றாக உடையவராய் திருவரங்கத்திற்கு ஏற்பட்டிருந்த ஆபத்து நீங்கியது என்ற மகிழ்ச்சி கொண்டவராய் மீண்டும் திருவரங்கத் திற்கு எழுந்தருள, அவர் திருவடிகளிலே ஆஶ்ரயித்திருந்தார்.

66. எல்லைக்கரை நிலையிட்ட *(வழிஅடிமைநிலையிட்ட பெருமாள்)* உத்தமநம்பி, சகஆண்டு 1343-இல் *(கி.பி.1421)* ப்லவ ஆண்டு விஜயநகரம் சென்று அப்போது இருந்த கஜவேட்டை ப்ரதாபதேவமஹாராயரோடு *(இரண்டாம் தேவராயர் - கி.பி.1423-1446)* சதுரங்கம் ஆடி அவரை மகிழ்வித்து, அவரிடமிருந்து பல பரிசுப் பொருள்களையும் பெற்றார். அவரும் அவருடைய சகோதரனான சக்ரராயரும் ராயர் முத்திரையைப் பெற்றுக் கொண்டனர். *(விஜயநகர மன்னருடைய பிரதிநிதியாய் அவருக்குரிய அனைத்து மரியாதைகளைப் பெறுவதும், கோயில்*

வரிசைகளையும் பெற்று; தம்முடைய தம்பிக்கு, ராயமுத்₃ரை யும், "சக்ரராயர்" என்கிற பேரும், ப்ரத்யேகமாக அதீ₄நமும் உண்டாக்கி ஸகலவித₄ ஸ்வதந்த்ரங்களும் உண்டாக்கிக் கொடுத்து, தம்முடைய அதீ₄நத்துக்கும் அவரதீ₄நத்துக்கும் ஸம்ப₃ந்த₄மில்லாதபடி, கஜவேட்டை ப்ரதாப தே₃வமஹாரா யரைத் தண்டுபண்ணுவித்து, ஸகல விருதுகளும் வாங்கிக் கொண்டு, தி₃வ்யதே₃ஶங்களையெல்லாம் ஸேவித்து, ஸ்ரீகார்யங்களெல்லாம் பரிஶோதி₄த்துக்கொண்டு ஸ்த்த₂லத் திலே வந்து, திருவிடையாட்ட க்₃ராமங்கள் பரிஶோ த₄னை பண்ணி, திருவரங்கச்செல்வம் சிதறாமல் வளர்த்து, ஜீயர்கள், ஸ்ரீவைஷ்ணவர்கள், ஏகாங்கிகள், ஆசார்ய

---

*நிர்வாஹத்தை மேற்பார்வை யிடுவதும் ராயர் முத்திரை என அழைக்கப்படும்.)*

66.1. இரண்டு உத்தமநம்பி ஆதீனங்கள் ஏற்படுத்தப் பட்டன. ராஜாவிடமிருந்து அனைத்து விருதுகளையும் பெற்றுக் கொண்டு வரும்வழியில் உள்ள திவ்யதேசங்களையும், ஆங்கு கைங்கர்யங்கள் குறையில்லாமல் நடந்து வருகின்றனவா? என்பதையும் ஆராய்ந்து கொண்டு திருவரங்கம் வந்து சேர்ந்தனர். கோயிலுக்குச் சொந்தமான நிலங்களிலிருந்து உரிய வருவாயை அந்தந்தக் காலங்களிலே பெற்று ஸ்ரீபண்டாரத்திலே சேர்ப்பித் தனர். திருவரங்கச் செல்வம் சிதறாமல் அனைத்து ஜீயர்கள், ஸ்ரீவைஷ்ணவர்கள், ஆசார்யபுருஷர்கள் ஆகியோர்களை ஆதரித்துக் கொண்டு, உடையவர் ஏற்படுத்தி வைத்த கட்டளை மாறாமல் கைங்கர்யங்களைச் செய்து வந்தார் எல்லை நிலையிட்ட உத்தம நம்பி. தம்முடைய ராயர் முத்திரையைக் கொண்டு கோவணவர் கொத்திற்குத் தம்மைத் தலைவராகவும், தம்முடைய தம்பியான சக்ரராயனுக்கு ஸேனாபதி துரந்தர கைங்கர்யமும், அதற்கான வரிசைகளையும் அனுபவித்துக்

*புருஷர்கள் எல்லாரையும் ஆத₃ரித்துக்கொண்டு, பூர்வ வ்யவஸ்தை₂ தப்பாமல் நடப்பித்துக்கொண்டு, ராயர்பேரும் ராயர் விருதும் பெற்று, கோயிலுக்கு வந்து, தாம் ஸ்ரீகார்யம் நிர்வஹித்துக்கொண்டு, தாம் கோவணவரான திருப்பதியார் கொத்துக்குத் தலைவராயிருந்து தகுந்த வரிசையையும், தம்முடைய தம்பிக்கு ஸேநாபதி து₄ரந்த₄ரரான ராயர் வரிசையையும் பெற்று அநுப₄வித்துக் கொண்டு வந்தார். இப்பேறுதானே அவர்களுக்குக் குறைவின்றிக்கே இரண்டு அதீநமாக நடந்துவருகிறது. இந்த சக்ரராயன் சக்கர வர்த்தித் திருமகனை ப்ரதிஷ்டி₂ப்பித்தபின்பு, வேத₃ாசார்யர் ப்ரதிஷ்டை₂ பண்ணின எம்பெருமானார் அவரதீநமாய்த்து.*

---

கொண்டு வந்தார். இவ்வாறு உத்தமநம்பி வம்சத்தவர்கள் இரண்டு ஆதீனங்களையும் நடத்தி வந்தனர்.

66.2. முதலாம் தேவராயர் *(கி.பி.1406-22)*, இரண்டாம் தேவராயர் *(கி.பி.1423-46)* ஆகியோருடைய ஆட்சிக்காலத்தில் வழியடிமை நிலையிட்ட உத்தமநம்பி மற்றும் சக்ரராயர் ஆகியோருடைய கைங்கர்யங்களைப் பற்றிய பல கல்வெட்டுகள் ஸ்ரீரங்கத்தில் காணப்படுகின்றன.

66.3. இரண்டாம் திருச்சுற்றான ராஜமகேந்திரன் திருச்சுற்றின் தெற்குப்பகுதியில் அமைந்துள்ள கல்வெட்டு [ஸ்ரீரங்கம் கல்வெட்டு எண்.*307*, A.R.No.60 of 1938-39,] மன்மத வருஷம் [கி.பி.1415ஆம் ஆண்டு] பொறிக்கப்பட்டுள்ளது.

66.3.1 கி.பி.1405-ஆம் ஆண்டு தொடங்கி முதலாம் தேவராயர் பெற்ற வெற்றிகளைப் பற்றி இந்தக் கல்வெட்டு கூறுகிறது. உத்தமநம்பி முதலாம் தேவராயரிடமிருந்து குடை உட்பட பல வெகுமதிகளைப் பெற்றுக்கொண்டார் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும் மன்மத ஆண்டு ரேவதி

நக்ஷத்திரத்தின் போது அதாவது 2-6-1415 ஞாயிற்றுக்கிழமை அன்று ஸந்நிதியில் *(சந்தன மண்டபத்தில்)* வெண்கலத்தால் ஆன கருடனை ப்ரதிஷ்டை செய்தார் என்றும் காணப்படுகிறது.

66.3.2. ஸ்ரீரங்கம் கல்வெட்டு எண்.309 , A.R.No.119 of 1937-38, நான்முகன் கோபுர வாசல் உள்சுவற்றின் வலதுபக்கத்தில் க்ரந்த எழுத்தில் பொறிக்கப்பட்டுள்ளது. *(தேதி குறிப்பிடாத கல்வெட்டு)*

66.3.3. ஸ்ரீரங்கம் கல்வெட்டு எண்.310, A.R.No.121 of 1937-38, நான்முகன் கோபுர வாசல் உள்சுவற்றின் வலது பக்கத்தில் க்ரந்த எழுத்தில் பொறிக்கப்பட்டுள்ளது. *(தேதி குறிப்பிடாத கல்வெட்டு)*

66.3.4. ஸ்ரீரங்கம் கல்வெட்டு எண்.311, A.R.No.84 of 1937-38, ஆர்யபட்டாள் வாசல் உட்புறச் சுவரின் வலதுபுறம். *(தேதி குறிப்பிடாத கல்வெட்டு)*

66.3.5. ஸ்ரீரங்கம் கல்வெட்டு எண்.312, A.R.No.85 of 1937-38, ஆர்யபட்டாள் வாசல் உட்புறச் சுவரின் வலதுபுறம். *(தேதி குறிப்பிடாத கல்வெட்டு)*

66.3.6. ஸ்ரீரங்கம் கல்வெட்டு எண்.313, A.R.No.82 of 1937-38, ஆர்யபட்டாள் வாசல் உட்புறச் சுவரின் வலதுபுறம். *(தேதி குறிப்பிடாத கல்வெட்டு)*

66.3.7. ஸ்ரீரங்கம் கல்வெட்டு எண்.314 , A.R.No.80 of 1937-38, மூன்றாம் திருச்சுற்றான குலசேகரன் திருச்சுற்றின் மேற்குப் பக்கம் தூண்களில் பொறிக்கப்பட்டுள்ளது. *(தேதி குறிப்பிடாத கல்வெட்டு)*

66.3.8. ஸ்ரீரங்கம் கல்வெட்டு எண்.315 , A.R.No.89 of 1937-38, ஆர்யபட்டாள் வாசல் உட்புறச் சுவரின் இடதுபுறம். *(தேதி குறிப்பிடாத கல்வெட்டு)*

66.3.9. ஸ்ரீரங்கம் கல்வெட்டு எண்.319, A.R.No.53 of

1938-39, இரண்டாம் திருச்சுற்றான ராஜமகேந்திரன் திருச்சுற்றின் தெற்குப் பகுதியில் அமைந்துள்ளது. 13-1-1423. தேதியிட்ட கல்வெட்டு.

66.3.10. ஸ்ரீரங்கம் கல்வெட்டு எண்.324, A.R.No.50 of 1937-38, இரண்டாம் திருச்சுற்றான ராஜமகேந்திரன் திருச்சுற்றின் தெற்குப் பகுதியில் அமைந்துள்ளது. இரண்டாம் தேவராயர் காலத்தில் 17.4.1424 திங்கள்கிழமை, 30.12.1425 ஞாயிற்றுக் கிழமை, 19.7.1427 சனிக்கிழமை, 15.10.1427 புதன்கிழமை, 3.11.1428 புதன்கிழமை, 24.1.1430 செவ்வாய்கிழமை, 24.2.1430 வெள்ளிக்கிழமை ஆகிய நாட்களில் சக்ரராயர் ஸமர்ப்பித்த கைங்கர்யங்களைப் பற்றி விரிவாக இந்தக் கல்வெட்டில் கூறப்பட்டுள்ளது.

66.3.11. ஸ்ரீரங்கம் கல்வெட்டு எண்.325, A.R.No.337 of 1950-51, இரண்டாம் திருச்சுற்றான ராஜமகேந்திரன் திருச்சுற்றில் தெற்குப்பகுதியில் மேற்புற சுவர்களில் பொறிக்கப் பட்டுள்ளது. *(தேதி குறிப்பிடாத கல்வெட்டு)*

66.3.12. ஸ்ரீரங்கம் கல்வெட்டு எண்.327, A.R.No.342 of 1950-51, இரண்டாம் திருச்சுற்றின் மேற்குப்பகுதியில் வடக்கு மூலையில் அடுக்குகளில் பொறிக்கப்பட்டுள்ளன. 5.11.1430 தேதியிட்ட கல்வெட்டு.

66.3.13. ஸ்ரீரங்கம் கல்வெட்டு எண்.328, A.R.No.46 of 1938-39, இரண்டாம் திருச்சுற்றின் மேற்குப்பகுதி சுவர்கள். 20.4.1432 தேதியிட்ட கல்வெட்டு.

66.3.14. ஸ்ரீரங்கம் கல்வெட்டு எண்.331, A.R.No.14 of 1938-39, இரண்டாம் திருச்சுற்றின் கிழக்குப் பகுதியில் அமைந் துள்ளது. 31.12.1435 தேதியிட்ட கல்வெட்டு.

66.3.15. ஸ்ரீரங்கம் கல்வெட்டு எண்.333, A.R.No.83 of 1937-38, ஆர்யபட்டாள் வாசலின் உள்சுவற்றில் பொறிக்கப்

பட்டுள்ளது. 1.3.1439 தேதியிட்ட இந்தக் கல்வெட்டின்படி சக்ரராயர் வடதிருக்காவிரியின் தெற்குக் கரையில் தசாவதார ஸந்நிதியில் தசாவதாரங்களை விக்ரஹ ரூபமாக ப்ரதிஷ்டிப்பித்தார் என்று அறியப்படுகிறது.

**இந்த நிகழ்ச்சிகள் உத்தமநம்பி வைபவம் என்ற நூலில் கீழ்க்கண்டவாறு தெரிவிக்கப்பட்டுள்ளன:**

சகாப்தம் 1343 (கி.பி.1421)க்கு மேல் இந்த உத்தமநம்பி விஜயநகரத்துக்குப்போய் கஜவேட்டை ப்ரதாப மஹாதேவரை சதுரங்கமாடி (Chess விளையாடி ) ஜயித்து ரஞ்சிப்பித்து *(உத்தமநம்பி தம்முடைய புத்திக் கூர்மையால், தம்மை வென்றதைப் பாராட்டி அதன் விளைவாக தான் தோற்றாலும் உயர்ந்த பரிசுப் பொருள் களை விஜயநகரமன்னன் அவருக்குக் கொடுத்தான் என்பது இதனால் பெறப்படுகிறது).*

அவரிடமிருந்து அநேகம் வரிசைகளைப் பெற்று, தம்முடைய தம்பிக்கு ராயர் முத்ரையும் சக்ரராயர் என்கிற பட்டப்பெயரும், ப்ரத்யேகமாக ஆதீனமும், ஸகல ஸ்வதந்த்ரங்களும் உண்டாக்கிக் கொடுத்து, தம்முடைய ஆதீனத்துக்கும் சக்ரராயர் ஆதீனத்துக்கும் ஸம்பந்தமில்லாதபடி பண்ணிவைத்து, தமக்கு ஸகலமான விருதுகளும் பெற்றுக்கொண்டு திரும்பினார். திரும்புகையில் திவ்யதேசங்களை யெல்லாம் ஸேவித்து அங்குள்ள ஸ்ரீகார்யங்களையும் பரிசோதனை பண்ணி ஸ்தலத்துக்கு வந்து சேர்ந்தார். ஸ்தலத்தில் திருவிடையாட்ட கிராமங்களை பரிசோதித்துக் கொண்டு திருவரங்கர் செல்வத்தை சதசாகமாக *(நூறு மடங்காகப் பெருக்கி)* வளர்த்துவைத்து, ஜீயர்கள், ஸ்ரீவைஷ்ணவர்கள், ஏகாங்கிகள், ஆசார்ய புருஷர்கள் எல்லாரையும் ஆதரித்துக்கொண்டு ராயர் விருதும் பெற்று, கோயில் ஸ்ரீகார்யம் நிர்வஹித்துக் கொண்டு 68 ஆண்டுகள் எழுந்தருளியிருந்தார் இந்த உத்தமநம்பி. இவர் விஜயநகரத்துக்குப் போகும் போதுகூட தாரகைகள் சூழ்ந்த தண்மதிபோல் அநேகம் அந்தணர்களால்

சூழப்பட்டு எல்லாருக்கும் அன்னதானம் பண்ணிக்கொண்டு 'ம்ருஷ்டாந்நதாதா' என்ற பட்டத்தோடும் ராஜசின்னங்களோடும் கருடனுக்கொப்பாக விளங்கினாரென்று லக்ஷ்மீகாவ்யம் முதல் ஸர்க்கத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

*(சக்ரராயருடைய கைங்கர்யம் தற்போது நடை பெறுவதில்லை. உத்தமநம்பியினுடைய கைங்கர்யங்களிலும் பிற்காலத்தில் பல மாற்றங்கள் ஏற்பட்டன.)*

**சக்ர ராயர் (பூ சக்ர ராயர்):**

**இவருடைய வைபவம் "உத்தமநம்பி வைபவம்" என்ற நூலில் கீழ்க்கண்டவாறு தெரிவிக்கப்பட்டுள்ளது:**

வழியடிமை நிலையிட்ட பெருமாள் உத்தமநம்பியினுடைய தம்பி சக்ரராயர் மஹாவித்வானாயிருந்தார். அவர் தமையனாருடன் விஜயநகரம் போனபோது அவருக்குத் தனி ஆதீனம் மரியாதை முதலியவை ஏற்பட்ட விவரம் கீழே சொல்லப்பட்டது. விஜயநகர ஸமஸ்தான அதிபதியாயிருந்த முதல் தேவராய மஹாராயரும் மஹா வித்வானாயிருந்ததால் சக்ரராயர் தேவராயரோடு தர்க்க வாக்யார்த் தங்களைப் பண்ணி அவரைத் தன்னுடைய பாண்டித்யத்தினால் மகிழ்ச்சியுறச் செய்தார். வித்வானுடைய கௌரவத்தை உணர்ந்த மன்னனும், சக்ரராயருடைய பாண்டித்யத்துக் கேற்ப அவரை எப்படி கௌரவிக்கலாமென்று மந்திரிகளுடன் ஆலோசித்தார்.

"ஸ்வாமி! நீங்கள் குடிப்பிறப்பினால் ஒரு ராஜ்யத்துக்கு ராயராயிருக்க, சக்ரராயர் தம்முடைய வித்யையினால் பூ சக்ரத்துக்கே (பூமண்டலத்துக்கே) ராயராயிருக்கிறார். இவருக்கு பூசக்ரராயர் என்று முடிசூட்டி அதற்குத் தக்கபடி கௌரவிக்க வேணும்" என்றனர். ராயரும் அதே பிரகாரம் செய்து, அநேகம் திரவியங்களைக் கொடுத்து, அவருக்கு ஸ்ரீரங்கத்தில் தனியாக ஒரு ஆதீனமும் உண்டாக்கி அனுப்பினார். மன்னனிடம் இருந்து கிடைத்த செல்வத்தைக் கொண்டு இவரும் பல கைங்கரியங்களைப் பண்ணினார். இவருக்குத் தனி

ஆதீனம் உண்டாகுமுன் "பிள்ளை ஐயன்" என்று பேராயிருந்த உத்தமநம்பி ஆதீனம் இவர் காலத்தில் இரண்டாகப் பிரிந்து "பிள்ளை ஐயன்", "சக்ரராயர்" என்று தேவஸ்தாநக் கணக்குகளில் முறை விதம் இரண்டாக இன்றைக்கும் எழுதப்படுகிறது.

***ஸ்ரீமதண்ணன் ஸ்வாமி திருமாளிகை ப்ரபாவம் எனப்படும் அண்ணன் திருமாளிகையொழுகில் கீழ்க் கண்டசெய்திகள் கொடுக்கப்பட்டுள்ளன.***

இந்த உத்தமநம்பியே தமது ஆசார்யரான ஸ்வாமி அண்ணனுக்கு வெளிஆண்டாள் ஸந்நிதி எனப்படும் சூடிக்கொடுத்த நாச்சியார் ஸந்நிதியை ஸம்பாவனையாக ஸமர்ப்பித்தும், தழையிடுவார் கொத்திலே ஒருவரான அந்த உத்தமநம்பி தமக்குப் பரம்பராப்ராப்தமாக *(நெடுநாளாக உத்தமநம்பி பரம்பரையார் அனுபவித்து வந்த)* திருக்கார்த்திகைத் திருநாளிலே ஏற்பட்டதான 'ஸ்ரீமுகப்பட்டய ப்ரஹ்மரதம்' என்ற விசேஷ மரியாதையையும் ஸ்வாமி அண்ணனுக்கு ஆசார்யஸம்பாவனையாக ஸமர்ப்பித்தருளினார். ஸ்ரீமுகப்பட்டய ப்ரஹ்மரதமாவது திருக்கார்த்திகைத் திருநாளிலே திருச்சிவிகையிலே நம்பெருமாள் எழுந்தருளி தீபம் கண்டருளினபிறகு பெரியபிராட்டியார் ஸந்நிதி வழியாக வலமாக எழுந்தருளி ஸந்நிதியிலேபுக்கு பெரிய திருமண்டபத்திலிருந்து *(சந்தன மண்டபத்திலே)* கைத் தலத்திலே எழுந்தருளி பூபாலராயனை அடைந்து நம்பெருமாள் நியமனமடியாக கோயில் பரிகரங்கள் வாதூல தேசிகரான அண்ணன் ஸந்நிதிக்கு *(ஒவ்வொரு ஆண்டும் இந்த முறை மாறும். முதல் ஆண்டில் கோயி லண்ணன் வம்சத்தவர்கள் இந்த மரியாதையை பெற்று வந்தால் அடுத்த ஆண்டு அப்பன் ரங்காசார்யர் வம்சத்தவர்கள் இந்த மரியாதையைப் பெற்றுக் கொள்வார்கள்)* வந்து ஸமயம் சொன்ன பிறகு *(ஸமயம் சொல்லுதலாவது தேவஸ்தான ஊழியர் நம்பெருமாள் சந்தன மண்டபத்திலே எழுந்தருளித் திருப்பட்டயம் ஸாதித்தருளியாயிற்று என்று விண்ணப்பித்து, கோயிலண்ணனை நம்பெருமாள் திருமுன்பு அழைத்துச் செல்லும் வைபவம்).*

ஸ்வாமி அண்ணனும் பெரிய ஜீயர் (ஸ்ரீமணவாள மாமுனிகள்) ஸந்நிதியிலே தண்டன் ஸமர்ப்பித்து ஜீயர் நியமனமடியாக நம்பெருமாள் ஸந்நிதிக்குச் சென்று கருவூலநாச்சியார் ஸந்நிதியிலே எழுந்தருளியிருக்க, கோயில் பரிகரமான மணியகாரர் பெரியபெருமாள் ஸந்நிதியிலே புக்கு பெரியபெருமாளிடம் விண்ணப்பிக்க, பெரிய பெருமாள் நியமனமடியாக அண்ணனிடம் வந்து தண்டனிட்டு அழைத்துச்சென்று த்வாரபாலகர்களின் தங்கத்திருவாசலிலே அண்ணனும் தண்டனிட்டு பயபக்திகளோடே கூட இருந்த வளவிலே பெரியபெருமாளும் நியமனமாகி 'அருளப்பாடு வாதூலதேசிகர்' என்று அருளப்பாட்டிட்டு ஸகல வரிசைகளையும் ஸாதித்து, சேனைமுதலியார் மூலமாக திருஅத்யயன உத்ஸவத்திற்கு ஸ்வாமி நம்மாழ்வாரை எழுந் தருளும்படியும்,

த்ராவிட வேதமான திவ்யப்பிரபந்தங்களை இயல் இசை யோடு அபிநயத்தோடே கூட தமக்குக் கரணபூதர்களானவர்களைக் (அரையர்களைக்) கொண்டு நடத்தி வைக்கும்படியும் நியமனமான ஸ்ரீமுகப் பட்டயத்தையும் திருமிடற்றுக்குத் தைலக்காப்பும் தந்தருளி யும், அப்பிரஸாதங்களை ஸ்வாமி அண்ணன் சிரஸாவஹித்துக் கோயில் பரிகரங்களுடனும், திருமு(க)த்துக் குடை, தாஸநம்பிபந்தம், காப்பந்தம் முதலான வரிசைகளுடனே ஆழ்வார் திருநகரிக்குச் செல்வதாக நம்மாழ்வார் ஸந்நிதிக்கு எழுந்தருளின அளவிலே, ஸ்வாமி நம்மாழ்வாரும் கைத்தலத்திலே தமது ஸந்நிதிக்கு வெளியே எழுந்தருளிப் பெரியபெருமாள் ப்ரஸாதத்தோடே கூட எழுந்தருளுகிற வாதூல தேசிகரான அண்ணனை எதிர்கொண்டு அழைத்துப் பெரியபெருமாள் ஸ்ரீமுகப்பட்டயத்தை சிரஸிலே தரித்தும் தைலக் காப்பைப் பெற்றும் ஸ்வாமி அண்ணனைப்போர உகந்து கடாக்ஷித்துத் திருமாலை தொடக்கமான வரிசைகளைத் தந்து ஸ்வாமி அண்ணனுக்கு நியமனம் ஆகி ஸந்நிதிக்கு உள்ளே சென்று தைலக்காப்பைத் தமது மிடற்றுக்குத் தடவியும் தமது பரிகரங்களுக்கும் ஸ்ரீவைஷ்ணவ கோஷ்டிக்கும் ப்ரஸாதமாக விநியோகமும் செய்யப்படும்.

அதன்பிறகு ஸ்வாமி அண்ணனை திருச்சிவிகையிலே எழுந்தருள வேணுமென்று உத்தமநம்பி முதலான கோயில் பரிகரங்கள் ப்ரார்த்தித்தவளவிலே ஸ்வாமி அண்ணனும், ஆசார்யரான பெரிய ஜீயர் எழுந்தருளியிருக்க, அடியேன் இத்திருச்சிவிகையிலே போவது ஸ்வரூபஹாநி (ஆசார்யனுக்கு அடிமைப்பட்டிருக்கும் நிலையான சேஷத்வம்) என்று நியமித்து அங்கிருந்து மற்ற விருதுகளுடனும் கோயில் பரிகரங்களுடனும் முதலிகள் முதலான ஸ்ரீவைஷ்ணவ குழாங்களுடனே பெரியஜீயர் ஸந்நிதியை சென்றடைவர்.

அங்கு ஜீயரைத் திருவடிதொழுது அவர் நியமனமடியாகத் திருமாளிகைக்கு எழுந்தருளி கைங்கர்யபரர்களுக்கு அவரவர்களுடைய கைங்கர்யத்திற்கு ஏற்ற ஸம்பாவனை தந்து பெரியபெருமாளும் தம்மை விஷயீகரித்த படியையும் இதற்குப் பெரியஜீயரின் திருவடி ஸம்பந்தமே ஹேது என்று நினைத்து நைந்து இருப்பர். இன்றளவும் இத்திருவம்சத்தவர்களுக்கு இந்த மரியாதை நடந்து வருவதைக் காணலாம். இதற்கு தேவஸ்தானத்திலிருந்து சிறப்பு வரிசைகளுக்காக (நெல், அரிசி, ப்ரஸாதம் வகையறா) ரொக்கப்பணம் தரப்பட்டுவருவதும் குறிப்பிடத்தக்கது.



ஒன்றான கோயிலண்ணன்

## வழியடிமைநிலையிட்ட பெருமாளுத்தமநம்பி பிள்ளை கைங்கர்யம்

**67. கோயிலாழ்வாரையும் திருமஞ்சநம் பண்ணுவித்து, அமுதுமண்டபமும் அழகியமணவாளன் திருமண்டபமும் சாந்துமிடுவித்தது ராயர் திருவிக்களகதீரநாயக்கர் கைங்கர்யமாகப் பண்ணிவைத்தது, வழியடிமை நிலையிட்ட பெருமாளுத்தமநம்பி பிள்ளை.**

---

67. வழியடிமைநிலையிட்ட பெருமாளுத்தமநம்பி பிள்ளை கர்பக்ருஹத்தையும், அமுதுபாறையையும் மற்றும் அழகியமணவாளன் திருமண்டபத்தின் பழுதுபோன பகுதிகளையும் நீக்கிப் புதிதாகச் சாந்து பூசினார் *(சாந்து என்னும் குழவிச்சுண்ணம் பூசுதல்)*. இந்தக் கைங்கர்யத்தை ராயர் திருவிக்களக தீரநாயக்கர் சார்பில் இவர் மேற்கொண்டார்.

*(இந்த நிகழ்ச்சிகள் உத்தமநம்பி வைபவம் என்ற நூலில் மிக விரிவாக எடுத்துரைக்கப்பட்டுள்ளது: "வழியடிமைநிலையிட்ட பெருமாள் உத்தமநம்பி, எல்லைநிலையிட்ட பெருமாள் உத்தம நம்பியின் குமாரர். இவர் ஸ்ரீரங்கஸ்ரீகார்யம் நிர்வஹித்தார். சகாப்தம் 1329 (கி.பி.1406)க்கு மேல் ஸர்வஜித் வருஷம் முதல் ப்ரமோதூத வருஷம் வரையில், 44 வருஷங்களில் இவர் நாலுதரம் விஜய நகரம்போய் பெருமாளுக்குத் திருவிடையாட்ட கிராமங்கள் வாங்கவேண்டுமென்று பலபேர்களிடத்திலும் வாங்கின பொன் 18,000க்கு சேர்த்த கிராமங்கள் 101.*

***திருவிடையாட்ட கிராமத்துக்காக பொன்கொடுத்து உதவின விஜயநகர மன்னர்கள், சிற்றரசர்களின் விவரம்:***

*1. பெரியதேவ மஹாராயர்*

*2. விஜய பூபதி ராயர் (ஸ்ரீரங்கம் கல்வெட்டு எண்.319.*

A.R.No.53 of 1938-39. இரண்டாம் திருச்சுற்றான ராஜமகேந்திரன் திருச்சுற்றின் தெற்குப் பகுதியில் அமைந்துள்ளது கி.பி.1423. ஆம் ஆண்டுக் கல்வெட்டு. இந்தக் கல்வெட்டின்படி விஜயபூபதி உடையார் குமாரக்குடி என்னும் ஊரை உத்தமநம்பிக்கு தண்டிகை ஜீவிதத் திற்கும் பியாதகை ஜீவிதத்திற்கும், கொடுத்தமைத் தெரிவிக்கப் படுகிறது. தண்டிகை - பல்லக்கு; பியாதகை - பல்லக்கு சுமக்கும் ஆட்கள். உத்தமநம்பி பலஇடங்களுக்குச் சென்று வருவதற்கு பல்லக்கும், அதைச் சுமப்பதற்கு ஆட்களும் வைத்துக்கொள்ளும் செல விற்கு இந்தக் கிராமம் விஜயபூபதிராயரால் கொடுக்கப்பட்டுள்ளது என்று இந்தக் கல்வெட்டு தெரிவிக்கிறது. தற்காலத்தில் உயரதிகாரி களுக்கு ஊர்தி வாங்குவதற்கும், அதைப் பராமரிப்பதற்கும் உதவித் தொகை அளிப்பதைப் போல அமைந்துள்ளது இந்த சாஸனம்.)

3. ராமசந்திர ராயர்

4. பெரிய விஜயராய மஹாராயர்

5. விஜயராய மஹாராயர்

6. பிரதாப ராயர்

7. சிக்கவுடைய ராயர்

8. மல்லிகார்ஜுந ராயர்

9. பூபதி ராயர் (இவரே வீரபூபதி உடையார் என்று அழைக்கப்படுகிறார். பூபதித் திருநாள் எனப்படும் தை ப்ரஹ்மோத்ஸவத்தைத் தொடங்கி வைத்தவர். ஸ்ரீரங்கம் கல்வெட்டு எண்.306, A.R.No.59 of 1938-39ஆண்டு கி.பி.1413)

10. திக்கடப்பே ஹரிராயர்

11. புக்கண உடையார்

12. பார்க்கவதி ராய உடையார்

13. அந்நதேவ நாயகர்

14. கங்கதேவ நாயகன்

15.சிங்கதேவ நாயகன் - (இலக்கம் 1லிருந்து 15 வரை உள்ளவர்கள் விஜயநகர மன்னர்களின் உறவினர்கள்.)

16. அண்ணப்பையன் குமாரர் ஆதித்யராய உடையார் -சிற்றரசர்

17. சிக்க உடையார்

18. கம்பண உடையார் குமாரர் குருராய உடையார்

19. லக்கண உடையார்

20. தக்ஷிண ஸமுத்ராதிபதி லெக்க தென்னாயகன் மகன் தென்னராய நாயகன்

21. தேவராய உடையார்

22. அண்ணப்ப உடையார் (புரட்டாசியில் ப்ரஹ்மோத்ஸ வத்தை ஏற்படுத்தி வைத்தவராக அண்ண ஆண்டப்ப உடையார் என்பவர் கோயிலொழுகில் குறிப்பிடப்படுகிறார். ஸ்ரீரங்கம் கல்வெட்டு எண்.331, A.R.No.14 of 1938-39 ராஜமகேந்திரன் திருச்சுற்றின் கிழக்குப் பகுதியில் அமைந்துள்ளது, கி.பி.1435-ஆம் ஆண்டு கல்வெட்டு. இதன்படி அண்ண சவுண்டப்பகள், கஜ வேட்டை ப்ரதாபதேவராயருடைய சகோதரனான சிக்க உடையா ருடைய அறிவுரையின்படி அண்ணசவுண்டப்பகளின் தந்தையா ரான ஆதித்யதேவ உடையார் பெயரில் திருத்தேர் திருநாளை புரட்டாசி மாதத்தில் உத்தரட்டாதியில் நடத்தி வரும்படி செந்தண்பாலன் என்னும் ஊரை பொலியூட்டாக அளித்தமை அறியப்படுகிறது.)

23. சிறு பகூலிட்ட உடையார் - (இலக்கம் 16லிருந்து 23வரை உள்ளவர்கள் துர்க்காதிபதிகள் - அரசாங்க உயரதிகாரிகள்.)

ஆகிய இவர்கள் கையிலும் வன்னியநாயகன் கையிலும் தாராதத்தமாக வாங்கின 18,000 பொன்னுக்கு "துர்கங்கள் பிரிவுப்படி(அரசாங்கக் கணக்குப்படி)" சேர்ந்த கிராமங்கள் 101.

**வழியடிமைநிலையிட்ட பெருமாள் உத்தமநம்பி காலத்தில் பெரியஜீயரென்னும் மணவாளமாமுனிகள் ஸந்யஸித்துக் கோயிலுக்கு எழுந்தருளினார்.** (ஸ்ரீமணவாளமாமுனிகள் ஸந்யாஸ ஆஶ்ரமம்

ஸ்வீகரித்த ஆண்டு கி.பி.1425. இந்தச் செய்தி கோயிலொழுகில் மட்டுமே காணப்படுகிறது.

**"இந்தப்படி நடந்து வருகிற காலத்திலே, ஶகாப்தம் ஆயிரத்துமுந்நூற்று நாற்பத்தேழுக்கு மேல் பார்த்திவ வருஷம் பெரியஜீயர் ஸந்யஸித்து எழுந்தருளி, பெருமாள் க்ருபை பெற்று, திருவீதி தெற்குமாடத் திருவீதியில் பல்லவராயன் மடத்தை லபித்து, காலக்ஷேபமும் ஸேவா காலமும் ப்ரதி தினமும் தப்பாமல் நடந்துவர .......**" என்று கோயிலொகு குறிப்பிடுகிறது.)

உத்தமநம்பிகள் அவரைப் பெருமாள் நியமன ப்ரகாரம் எதிர்கொண்டழைத்து ஸகல மரியாதைகளையும் ஸாதித்து த்ரிவிக்ரமன் திருவீதியில் பல்லவராயன் மடத்தில் எழுந்தருளப் பண்ணி வைத்தார். ஸ்ரீமணவாளமாமுனிகள் பாலின் நீர்மைபோல் வெளுப்பாயிருந்ததால் வெள்ளை ஜீயரென்றும் பிரஸித்தி உண்டாயிற்று. ஜீயர் திருமேனியை ஸேவித்துத் தேறமாட்டாமல் உத்தமநம்பி ஒருநாள் பெருமாளிடம் போய் ஸேவித்துப் பரவசமா யிருக்க, அரவினணைமிசைமேயமாயோனான பெரியபெருமாள் அனந்தனென்னும் அணிவிளங்குமுயர் வெள்ளையணையான திருவனந்தாழ்வானைத் தொட்டுக் காட்டி "இவர் கிடீர் ஜீயராக அவதரித்தருளினார். அவருடைய நிறம் வெளுப்பென்று வியவஸித் திரும்" (எண்ணியிரும்) என்று அருளிச்செய்தார். உத்தமநம்பிகள் பீதபீதராய் (மிகவும் அச்சம் கொண்டவராய்) அப்போதே வந்து, தமக்கு ஆப்தரும், ஜீயருக்கு முக்ய சிஷ்யருமான அண்ணனை அழைத்துக்கொண்டு ஜீயர் ஸந்நிதியிலே போய் தண்டம் ஸமர்ப்பிக்க, ஜீயரும் ஆயிரம் பணாமுடிகளுடன் திருவனந்தாழ்வானாக ஸேவை ஸாதிக்க, நடுநடுங்கி - ஆதிசேஷன் மேலிருந்து ஸேவை ஸாதிக்க வேணு மென்று ப்ரார்த்தித்தார். ஸ்வாமியும் ப்ரார்த்தநாநுகுணமாக அநுக்ர ஹித்தார். மணவாளமாமுனிகள் ஸந்நிதியில் இப்போதும் உத்தம நம்பிக்கு ஸேவை ஸாதித்தப்ரகாரமே ஒரு கம்பத்தில் மேற்கு முகமாக ஜீயர் சித்ரரூபமாக எழுந்தருளியிருக்கிறார். கம்பத்தின் இருபுறத்திலும் அண்ணனும் உத்தமநம்பியும் எழுந்தருளியிருக்கிறார்கள்.

ராத்ரி அகாலமாயிருந்தபடியினாலே மற்றைநாள் உத்தமநம்பி ஜீயர், ஸந்நிதிக்குச் சென்று அபசாரக்ஷாமணம் பண்ணிக்கொண்டு, தமக்கு ஆஸ்ரயணம் ஸாதிக்கும்படி ப்ரார்த்தித்துப் பெற்றார். ஜீயரின் நியமனப்படி அண்ணனுக்கு ஆசார்ய புருஷ வரிசையாக பெரியநம்பிக்குப் பிறகு தீர்த்தமும், சுந்தாடை அண்ணன் - என்று அருளப்பாடும் உத்தமநம்பியால் ஏற்பட்டது.

திருக்கார்த்திகையன்று ஆழ்வாருக்குத் திருமுகப்பட்டயம் கொண்டுபோகும் தழையிடுவார் கைங்கர்யம் தம்முடையதா யிருந்ததை உத்தமநம்பி அண்ணனுக்குக் கொடுத்தார்.

பூர்வம் வல்லபதேவன் கட்டிவைத்த ஆண்டாள் ஸந்நிதி (வெளியாண்டாள் ஸந்நிதி) தம்முடையதாயிருந்ததை அண்ணனுக்கே கொடுத்துவிட்டார் வழியடிமை நிலையிட்ட பெருமாள் உத்தமநம்பி. அதுமுதல் அந்தக் கோயில், மரியாதை, வருமானம் முதலானவை யாவும் அண்ணன் வசத்திலேயே இருந்து வருகிறது.

ஸ்ரீமணவாளமாமுனிகள் இந்த உத்தமநம்பி காலத்திலேயே திருநாடு அலங்கரித்தார். தம்முடைய திருமாளிகைக்கு ஏற்பட்ட திருநக்ஷத்ரக் கட்டளை உத்தமநம்பியால் மணவாளமாமுனி களுடைய தீர்த்தத்துக்காக ஸமர்ப்பிக்கப்பட்டது. திருநக்ஷத்ரத்துக்கு ஸந்நிதி கட்டளையோடு அன்றைய கைங்கர்யபரர்களுடைய வருமானத்தையும் சேர்த்து அனுப்பி திருநக்ஷத்ரத்தையும் உத்தமநம்பி சாசுவதமாக நடத்த ஏற்பாடு செய்தார்.

இந்த வழியடிமை நிலையிட்ட உத்தமநம்பி கோயிலாழ்வாரை (கர்ப்பகிருஹத்தை) பழுதுபார்த்து ஸுத்திக்காகத் திருமஞ்சனம் பண்ணிவைத்து, அமுது மண்டபமும், அழகியமணவாளன் திருமண்ட பமும் சாந்துமாடி வைத்தார். (அமுதுமண்டபம்-அமுதுபாறை உள்ள முன் மண்டபம், அழகியமணவாளன் திருமண்டபம், சந்தனமண்டபம் உள்ள ப்ரதேசம், சாந்து மாடிவைக்கை-சாந்து என்னும் குழவிச் சுண்ணம் பூசுவிக்கை;)

## உத்தமர்கோயில் ஸ்ரீரங்க₃ராஜர் கைங்கர்யம்

68. ஸ்ரீரங்க₃நாராயணஜீயர் பட்டத்திலே அஞ்சாமவர் **உத்தமர்கோயில் ஸ்ரீரங்க₃ராஜர்** ஸ்ரீரங்க₃நாராயணஜீயராய், கூரநாராயணஜீயர் ப்ரதிஷ்டி₂ப்பித்த வஸந்தகோ₃பாலர் துலுக்காவணத்திலே சேதமாகையில், அவரையும் ப்ரதிஷ்டி₂ப் பித்து, பெரியதிருமண்டபத்துக்குத் தெற்கிலே பாண்டியன் திருப்ரதிஷ்டை₂யான தாம்ர க₃ருட₃னும் சேதமாகையில் அவரையும் பெரியதிருமேனியாக ஏறியருளப்பண்ணி புழுகுக்காப்புச் சாத்துவித்து ப்ரதிஷ்டி₂ப்பித்து, அவருடைய உத்ஸபபே₃ரம் கலஹத்தின் முன்னோடே அந்தக் கோயிலுக்குத் தெற்கிலே நிக்ஷிப்தராயிருந்து, பின்பு காணாமற்போகையில்

---

68. ஸ்ரீரங்கநாராயணஜீயர் பட்டத்தில் ஐந்தாவது பட்டம் வஹித்தருளியவர் உத்தமர்கோயில் ஸ்ரீரங்கராஜர். இவர் பூர்வ காலத்தில் ஒன்றான ஸ்ரீரங்கநாராயண ஜீயரால் ப்ரதிஷ்டை செய்யப்பட்ட வஸந்தகோபாலன், முகம்மதியர் படையெடுப்பின் போது சேதப்படுத்தப்பட்டதால் அவரை ப்ரதிஷ்டை கண்டரு ளினார். *(இந்த ஸந்நிதி ஸ்ரீரங்கம் கோயிலுக்குள் எங்கே இருந்திருக்கக்கூடும் என்பதை அறிய இயலவில்லை.)*

68.1. பாண்டியர்களால் ப்ரதிஷ்டை செய்யப்பட்ட தாமிர கருடன் முகம்மதியர் படையெடுப்பில் சேதப்படுத்தப்பட்டதாலே, ஆர்யபட்டாள் வாசலுக்கு தெற்கே தற்போதைய பெரியகருட மண்டபத்தில் சுதையாலே பெரியகருடனாக ஏறியருளப்பண்ணி புனுகுக்காப்பு சாற்றுவித்தார். முன்பு ப்ரதிஷ்டை செய்யப்பட்டிருந்த உத்ஸவபேரர் முகம்மதியர் படையெடுப்பின் போது காணாமல் போயிற்று. இவருடைய காலத்தில் கோயிலின் கிழக்குப் பகுதியில் உள்ள தோட்டத்தில் அந்த உத்ஸவபேரர் கண்டெடுக்கப்பட்டார். அந்த உத்ஸவரை இந்த ஜீயர்ஸ்வாமி ப்ரதிஷ்டை செய்தருளினார்.

*அவரையும் ப்ரதிஷ்டி₂ப்பித்து, வடதிருக்காவேரி தென் கரையிலே எல்லைக்கரை மண்டபமும் கட்டுவித்து, தமக்குமுன் **அழகியமணவாளப்ரியன்** என்று பேர்கொடுத்து நடந்துவந்த அநந்தரம் ப₄ட்டர் ஸ்ரீகார்யத்திலே அவனுக்கு அவர் **ஸ்ரீவைஷ்ணவப்ரியன்** என்று பேர்கொடுக்க, அவர் காலம்போய், திரும்ப உத்தமநம்பி ஸ்ரீகார்யம் விசாரிக்கத் தொடங்கினவுடனே, அந்தக் கணக்கனுக்கு ப₃லமுண்டாக்கி "**ஸ்ரீரங்க₃நாராயணப்ரியன்**" என்று பேருண்டாக்கினார்.*

---

*(தற்போது பெரியகருடமண்டபத்தில் அந்தராளப் பகுதியில் வண்ணத்தாலான பெரியகருடனை நாம் காண்கிறோம். ஐந்தடி உயரம் கொண்ட பீடத்தில், பன்னிரெண்டடி உயரம் கொண்ட கருடன் ஸேவை ஸாதிக்கிறார். கோயிலொழுகு உத்தமர் கோயில் ஸ்ரீரங்கராஜ ஜீயரால் இந்த கருடனுக்குப் புனுகுக்காப்பு சாற்றப்பட்ட தாக குறிப்பிடுகிறது. பதிப்பாசிரியரின் ஆய்வுக் கட்டுரையின்படி இந்த கருடன் ஸந்நிதியின் கர்ப்பக்ருஹத்தைச் சுற்றி தற்போது நாலு பக்கங்களிலும் சுவர்கள் எழுப்பப்பட்டுள்ளது. கருடமண்டபத்தில் தற்போது நாம் காணும் நெடிதுயர்ந்த வண்ணத்தாலான மூலவர் கி.பி.1756-ஆம் ஆண்டு ஃப்ரெஞ்ச் படையெடுப்பின்போது ஏற்படுத்தப்பட்டிருக்க வேண்டும்.)*

68.2. வடதிருக்காவிரியின் கரையில் எல்லைக்கரை மண்டபத்தை கட்டுவித்தார். இவர் காலம் வரை கோயில் கணக்கனுக்கு ***அழகியமணவாளப்ரியன்*** என்ற பட்டப் பெயர் வழங்கி வந்தது. இவர் காலத்தில் அந்தக் கணக்கனுக்கு ***ஸ்ரீநிவாஸப்ரியன்*** என்ற பெயர் சூட்டப்பட்டது. அதன் பிறகு உத்தமநம்பி வம்ஸத்தவர்கள் கோயில் நிர்வாஹத்தினை மேற்பார்வையிட்டு வந்தபோது இந்தக் கணக்கனுக்கு ***ஸ்ரீரங்க நாராயணப்ரியன்*** என்ற பட்டப் பெயருடன் அவனுடைய அதிகார வரம்பின் பரப்பும் அதிகரிக்கப்பட்டது.

## விருப்பண்ணவுடையார் கைங்கர்யம்

69. ரக்தாக்ஷி வருஷத்திலே, விருப்பண்ண உடையார், ஸுத₃ர்ஶநப்பெருமாள் கோவிலுங்கட்டி, ஹேநீஶநந்ரு ஸிம்ஹரையும் ப்ரதிஷ்டி₂ப்பித்தார் – இந்த உத்தமநம்பி செங்கோல் செலுத்தி ஸ்ரீகார்யம் நிர்வஹிக்கையில், தம்மாசார் யரான பெரியநம்பிக்கு, ப₄ட்டருக்கு ஆனவுடனே தீர்த்த₂ம் ஸாதி₃க்கச் சொல்லி, அதின்பின்பு, ஜீயாள் ஸ்ரீவைஷ்ணவாள் முதலான பேருக்கும் ஆனபின்பு, ராயமுத்₃ரையாலே பாரபத்தியக்காரர் வரிசையைத் தாம் பிடித்துவந்தார்.

---

***ஸ்ரீரங்கநாராயணஜீயர் ஒழுகில் ஸ்ரீரங்கராஜஜீயர் ஸ்வாமியினுடைய கைங்கர்யம் கீழ்க்கண்டவாறு தெரிவிக்கப்பட்டுள்ளது.***

“பின்பு ஸ்ரீரங்கராஜஜீயர் என்பவர் இப்பட்டத்திற் கெழுந் தருளி துலுக்கர் கலாபத்தில் சிதிலமாயிருந்த பெரியகருடனையும், உற்ச வரையும், சக்கரத்தாழ்வான் ஸந்நிதியில் நரஸிம்ஹனையும் ப்ரதிஷ்டிப் பித்து ஜீர்ணமாயிருந்த எல்லைக்கரை மண்டபத்தை ஜீர்ணோத் தாரணமும் பண்ணி 25 வருடம் நிர்வஹித்தார்.”

69. சகம் 1366 *(கி.பி.1444)* ரக்தாக்ஷி வருடம் விருப் பண்ண உடையார் முகம்மதியர் படையெடுப்பில் சிதிலமடைந்த சக்கரத்தாழ்வார் ஸந்நிதியை சீரமைத்து மீண்டும் யந்த்ர நரஸிம்ஹனோடு கூடிய ஸுதர்சனப் பெருமானை ப்ரதிஷ்டை செய்தார். இவருடைய காலத்தில் உத்தமநம்பி கோயில் ஸ்ரீகார்யம் பார்த்து வந்தார். கோயில் நிர்வாஹ அதிகாரிக்குரிய மரியாதை யான “பாரபத்யகாரன் மரியாதையை” இந்த உத்தமநம்பி தம்முடைய ஆசார்யரான பெரியநம்பி, பட்டர், ஸ்ரீரங்கநாராயண ஜீயர் மற்றும் ஸ்ரீவைஷ்ணவர்கள் ஆகியோருக்கு மரியாதைகள் ஆன பிறகு பெற்று வந்தார்.

## பெரியஜீயர், உத்தமநம்பியைக்கொண்டு கந்தாடை அண்ணனுக்கு ஏற்படுத்தின மரியாதைகள்

70. இந்தப்படி நடந்து வருகிற காலத்திலே, ஶகாப்₃த₃ம் ஆயிரத்துமுந்நூற்று நாற்பத்தேழுக்கு மேல் பார்த்தி₂வ வருஷம் **பெரியஜீயர்** ஸந்யஸித்து எழுந்தருளி, பெருமாள் க்ருபை

---

*(கோயிலொழுகில் விருப்பண்ண உடையார் கைங்கர்ய மாகக் குறிப்பிட்டுள்ளது தவறு. கி.பி.1444-ஆம் ஆண்டில் விருப் பண்ணஉடையார் விஜயநகர சாம்ராஜ்யத்தின் மன்னனாகவோ சிற்றரசனாகவோ விளங்கவில்லை. அப்போது விஜயநகரப்பேரரசின் மன்னனாக விளங்கிய வன் இரண்டாம் தேவராயன் (வருடம் 1423-1446). இவன் விருப் பண்ணஉடையாரின் சகோதரரான இரண்டாம் ஹரிஹரராயருடைய ப்ரபௌத்ரன்.* (great grandson)

70. ஸ்ரீமணவாளமாமுனிகள் கலி 4471, சாதாரண வருஷம் ஐப்பசி மாதம் 26ஆம் நாள் வியாழக்கிழமை திருமூல நக்ஷத்திரத்தில் திருவவதாரம் செய்தருளினார் – *(24.10.1370.)* திருத்தந்தையார் திருநாமம் திகழக்கிடந்தான் திருநாவீறுடையபிரான். திருத்தாயார் திருநாமம் ஸ்ரீரங்கநாய்ச்சியார். திருவவதாரம் செய்தருளியது ஆழ்வார்திருநகரியில் என்றும், சிக்கில் கிடாரத்தில் என்றும் இருவகையான கருத்துக்கள் உள்ளன.

70.1. கி.பி.1323இல் நடைபெற்ற உலுக்கானுடைய படையெடுப்பினால் திருவரங்கத்தைவிட்டு அகன்ற நம்பெரு மாளும் உபயநாய்ச்சிமார்களும் திருவரங்கத்திற்கு மீண்டும் எழுந்தருளியது பரீதாபி ஆண்டு வைகாசி 17ஆம் நாள் *(கி.பி.1371)*. இந்த நல்லடிக்காலத்திற்கு அருணோதயம் போலே அழகியமணவாளப்பெருமாள் நாயனார் கி.பி 1370 ஆம் ஆண்டில் அவதரித்தருளினார். நாயனாருடைய 15ஆவது வயதில் *(குரோதன வருடம் மகரமாதத்தில்)* அவருக்கு விவாஹம் நடைபெற்றது.

70.2. அழகியமணவாளப்பெருமாள் நாயனார், தம்முடைய தகப்பனார் திருநாட்டிற்கு எழுந்தருளிய பிறகு ஆழ்வார் திருநகரியிலே ஸ்ரீவைஷ்வணக் கோட்பாடுகளை பரப்பி வந்த திருவாய்மொழிப்பிள்ளைத் திருவடிகளை ஆச்ரயித்திருந்தார்.

70.3. திருவாய்மொழிப்பிள்ளை தம்முடைய அந்திம தசையில் திருமேனியிலே நோவுசாத்திக்கொண்டு மிகவும் தளர்ந்து எழுந்தருளியிருக்கிற நிலையில் சிஷ்யர்கள் அனைவரும் இதற்கான காரணத்தை வினவிட, திருவாய்மொழிப்பிள்ளையும் "காலம் கலிகாலமாகையாலே ஆழ்வார்கள் திவ்யஸூக்திகளான அருளிச்செயலிலே ருசிவிஸ்வாஸங்களையுடையராய் இத்தை வளர்த்துப் போருவார் ஆர்? என்று மிகவும் க்லேசமாயிரா நின்றது" என்ன, பின்பு நாயனாரும் திருவடியிலே ஸேவித்து "அடியேன் அப்படியே செய்கிறேன்" என்ன, "கேவலம் வார்த்தை போராது" என்ன நாயனாரும் திருவடிகளைத் தொட்டு சபத பூர்வமாக "அப்படியே செய்கிறேன்" என்றருளிச்செய்ய, பின்பு திருவுள்ளம் தேறி நாயனாரை அழைத்தருளி, "ஸம்ஸ்க்ருத சாஸ்த்ரங்களிலே பலகாலும் கண்வையாமல் ஸ்ரீபாஷ்யத்தை ஒருக்கால் கேட்டு நமக்கும் எம்பெருமானாருக்கும் ப்ரியமாகத் திருவாய்மொழி முதலான அருளிச்செயலிலே அநவரதம் பரிசீலனை பண்ணிக் கொண்டு பூர்வர்களைப்போலே பெருமாளுக்கு மங்களாசாஸனம் செய்துகொண்டு ஸ்ரீரங்கத்திலே நித்ய வாஸமாக எழுந்தருளி யிரும்" என்று நியமித்தருளினார்.

70.3.1. வைகாசி விசாக நக்ஷத்திரத்தில் அவதரித்த திருவாய் மொழிப்பிள்ளை வைகாசி அபரபக்ஷ அஷ்டமியில் திருநாட்டிற்கு எழுந்தருளினார் *(கி.பி.1301 - 1406)*. அவர் நிலவுலகில் வாழ்ந்த ஆண்டுகள் 105.

70.4. அழகியமணவாளப்பெருமாள் நாயனாரும் தமது ஆசார்யருடைய ஆணைக்கிணங்க கி.பி.1413 ஆம் ஆண்டு

தம்முடைய 43ஆவது திருநக்ஷத்திரத்தில் திருவரங்கத்திற்கு எழுந்தருளினார். திருவரங்கத்தில் திருவீதிகளையும், திருமதில் களையும், திருக்கோபுரங்களையும் கண்டுகளித்துக் கொண்டு தமக்கு ஆசார்ய துல்யரான கோட்டூரில் அண்ணர் திருமாளிகைக்கு எழுந் தருளினார்.

70.4.1. 'நமக்காவாரை நாமே தேடிக்கொள்வோம்' என்று நம்பெருமாளும் திருவாய்மலர்ந்தருளி, எம்பெருமானாரை விஷயீகரித்தாப்போலே இவரையும் விஷயீகரித்தருளினார்.

70.4.2. கோட்டூரிலண்ணனுடன் புறப்பட்டருளி, அடைய வளைந்தானுக்குக் கிழக்கே ஆதிகேசவப் பெருமாள் ஸந்நிதி மாட வீதிகளில், பூர்வர்கள் எழுந்தருளியிருந்த திருமாளிகைகளைச் சென்று ஸேவித்தபின் ஆதிகேசவப்பெருமாள் வடக்கு மாட வீதியில் அமைந்திருந்த பிள்ளைலோகாசார்யர், அவருடைய திருத்தம்பியார் அழகியமணவாளப்பெருமாள்நாயானார் ஆகியோ ருடைய திருமாளிகைகளைச் சென்று ஸேவித்து,

*வாழியுலகாசிரியன் வாழியவன் மன்னுகுலம்*
*வாழிமுடும்பையென்னும் மாநகரம்-வாழி*
*மனஞ்சூழ்ந்த பேரின்மல்கு மிகு நல்லார்*
*இனஞ்சூழ்ந்திருக்குமிருப்பு* என்றும்

*மணவாளன் மாறன் மனமுரைதான் வாழி*
*மணவாளன்மன்னுகுலம்வாழி - மணவாளன்*
*வாழிமுடும்பை வாழிவடவீதிதான்*
*வாழியவன் உரைசெய்த நூல்* என்றும்

அநுஸந்தித்துக்கொண்டு திருமாளிகை வாசலிலே தண்டன் ஸமர்ப்பித்து நின்றார்.

70.4.3. அங்கே எழுந்தருளியிருந்த பிள்ளைலோகாசார்யர் வைபவங்களையெல்லாம் கோட்டூரிலண்ணர் அருளிச்செய்யக்

*பெற்று, திருவீதி தெற்குமாடத் திருவீதியில் பல்லவராயன் மடத்தை லபித்து, காலக்ஷேபமும் ஸேவாகாலமும்*

கேட்டு 'இந்த இடம் ரஹஸ்யம் விளைந்த மண்ணன்றோ' என்று கொண்டாடிக்கொண்டு திருவரங்கத்திலே எழுந்தருளியிருந்தார்.

70.4.5. பின்னையும் ஒருநாள் நம்பெருமாளை, நாயனார் திருவடிதொழச் சென்றவாறே தீர்த்தம், திருமாலை, பரியட்டத் துடனே தம்முடைய தேனேமலரும் திருப்பாதத்தை இவர் திருமுடிசூடுவித்து திருப்பவளச் செவ்வாய் முறுவல் கொண்டு நம் உடையவரைப் போலே நீரும் நம்வீட்டில் கார்யத்தையும் தர்சனரஹஸ்யங்களையும் ஆராய்ந்து கொண்டு உம்முடைய சரீராவாஸனத்தளவும் *(உம்முடைய வாழ்நாள் வரை)* இங்கேயே இரும் என்று அருளிச்செய்திட, நாயனாரும் மஹாப்ரஸாதம் என்று அங்கீகரித்துத் திருவரங்கத்திலே கோட்டூரிலண்ணன் திரு மாளிகையில் எழுந்தருளியிருந்தார்.

70.4.6. அழகியமணவாளப்பெருமாள் நாயனார் ரஹஸ்ய ப்ரபந்தங்களையெல்லாம் திருக்கண்சாற்றி அவற்றை ஏடுகளில் மீண்டும் எழுதி பாதுகாத்துக்கொண்டும், அவற்றின் பெருமையை வெளிப்படுத்திக்கொண்டும் எழுந்தருளியிருந்தார்.

*('பண்டு பலவாரியரும் பாருலகோருய்யப் பரிவுடனே செய்தருளும் பல்கலைகள் தம்மை, கண்டதெல்லாம் எழுதி அவை கற்றிருந்தும் பிறர்க்கு காதலுடன் கற்பித்தும் காலத்தைக் கழித்தேன்' (ஆர்த்திப்ரபந்தம்-28) என்று மாமுனிகள் அருளிச்செய்துள்ளதைக் காண்க.)* கோயிலொழுகு தரும் குறிப்புப்படி அழகியமணவாளப் பெருமாள் நாயனார் கி.பி.1425ஆம் ஆண்டு துறவறம் மேற்கொண்டார் என்று அறியப்படுகிறது.

70.5. நம்பெருமாளும் போரவுகந்தருளி, "அழகிய மணவாளமாமுனிகளை பல்லவராயன் மடத்தில் விட்டுவாருங் கோள்" என்று திருவாய்மலர்ந்தருளினார்.

ப்ரதிதி₃னமும் தப்பாமல் நடந்துவர; பெரிய உத்தமநம்பி காலத்துக்குப்பின்பு, அவர் புத்ரரான **உத்தமநம்பியும்** பெரிய ஜீயர் திருவடிகளிலே அபசாரப்பட; அழகியமணவாளப்

---

*[திருவிக்கிரமசோழன் திருவீதியின் தெற்குப் பகுதியில் (தெற்கு உத்தரவீதியில்) அமைந்துள்ள ஸ்ரீமணவாளமாமுனிகள் ஸந்நிதிக்கு முன்புறம் கி.பி. 1251ஆம் ஆண்டு ஏற்படுத்தப்பட்ட திருவாழிக்கல் பொறித்த கல்வெட்டு ஒன்று உள்ளது. அந்தக் கல்வெட்டில் உள்ள வாசகங்களின் படி, இந்த மடமானது திரிதண்டி ஸந்யாசிகள் எழுந்தருளியிருப்பதற்காக சடையவர்மன் முதலாம் சுந்தரபாண்டியன் (பொன்வேய்ந்த பெருமாள்) காலத்தில் துஞ்சலூர் உடையான் வரந்தருவான் எடுத்தகை அழகியானாகிய பல்லவராயர் செய்வித்த சுந்தரபாண்டியன் மடம் என்று குறிப்பிடப்பட்டுள்ளது* (A.R.No.99 of 1936-37) *ஸ்ரீரங்கம் கல்வெட்டு எண் 196* ]

70.5.1. அந்த மடத்தினை வானமாமலை ஜீயர் முதலான முதலிகளைக் கொண்டு செப்பனிட்டு திருமலையாழ்வார் கூடம் என்று திருவாய்மொழிப்பிள்ளைப் பெயராலே ஒரு மண்டபத்தை யும் *(காலக்ஷேப கூடம்)* உண்டாக்கி பிள்ளைலோகாசார்யர் திருமாளிகையிலிருந்து 'ரஹஸ்யம் விளைந்தமண்' கொண்டு தாம் எழுந்தருளியிருக்கிற இடத்திற்கு திருமண்காப்பு சாற்றுவித்து அவ்விடத்தை குருகுலவாசமாகவே எண்ணி, பிள்ளைலோகாசார் யருடைய திருவடிகளையும், திருவாய்மொழிப்பிள்ளையினுடைய திருவடிகளையும் தியானித்துக் கொண்டு எழுந்தருளியிருந்தார்.

70.6. ஒருநாள் பெரியஜீயர் பெரியபெருமாளை மங்களா சாஸனம் பண்ண எழுந்தருளினார். அப்போது திரைசேர்த்துத் திருவாராதனம் நடைபெற்றுக் கொண்டிருந்தது. உள்ளே எழுந்தருளியிருந்து திருவாலவட்ட கைங்கர்யம் செய்து கொண்டிருந்த ஸ்ரீமணவாளமாமுனிகளைப் பார்த்து உத்தமநம்பி 'தேவரீர் இங்கே நீண்டபொழுது எழுந்தருளியிருக்க வேண்டாம்'

*பெருமாள், அவன் ஸ்வப்நத்திலே, பெரியஜீயர் அவதார ரஹஸ்யத்தைத் தெரியப்பண்ணி; அபசாரக்ஷாமணம் பண்ணிக் கொள்ளச் சொல்லி நியமிக்க, அப்பொழுதே, அந்த உத்தம நம்பியும் மடத்தேற வந்து, ஸ்வாமி நியமநப்ரகாரம் பெரிய*

---

என்று விண்ணப்பித்துக் கொண்டார். அந்த வார்த்தைகளைக் கேட்ட ஸ்ரீமணவாள மாமுனிகளும் பெரிய ஸந்நிதியை விட்டு வெளியேறினார்.

*(ஆதிசேஷனுடைய அம்சமான ஸ்ரீமணவாளமாமுனிகள் பால் போன்ற வெண்மை நிறம்படைத்த திருமேனியை உடையவராய் விளங்கி வந்தார். அத்தகைய பெரியவரான ஸ்ரீமணவாளமாமுனி களிடம் உத்தமநம்பி அபசாரப்பட்டார். இந்த உத்தமநம்பியை வழியடிமைநிலையிட்ட பெருமாள் உத்தமநம்பி என்று கோயிலண்ணன் திருமாளிகையொழுகு குறிப்பிடுகிறது.)*

70.6.1. இவ்வாறு ஸ்ரீமணவாளமாமுனிகளின் திருவடி களில் உத்தமநம்பி அபசாரப்பட்டார் என்ற செய்தி கேட்டு உள்ளம் கலங்கிய கோயிலண்ணன், தம்முடைய சிஷ்யரான உத்தம நம்பியை அழைப்பித்து அவரிடம் பெரியஜீயருடைய அவதார ரகஸ்யத்தை வெளியிட்டார். மேலும் பெரியஜீயரிடம் அபசாரப் படுவது, பெரியபெருமாளிடம் அபசாரப்படுவதற்கு ஒக்கும் என்றும் அறிவுறுத்தினார். இதைக் கேட்ட உத்தமநம்பி தமது திருமாளிகைக்கு மீண்டும் திருவுள்ளத்திலே கலக்கத்தோடு எழுந்தருளினார். அன்றிரவு அவர் கனவிலே பெரியபெருமாள் காட்சியளித்து "வாரீர் நம்பியே, நம் அண்ணன் சொல்ல பெரிய ஜீயர் ஸ்வரூபம் அறிந்தீரோ? இனிமேலாகிலும் அவர் திருவடி களைப் பற்றியிரும்" என்று அருளிச்செய்தார்.

70.6.2. அந்த உத்தமநம்பி அப்போதே எழுந்தருளி அண்ணன் திருமாளிகைக்கு வந்து, அண்ணன் ஸந்நிதியிலே தாம் கண்ட கனவினைத் தெரிவித்திட, அண்ணனும் அப்போதே

*ஜீயரைத் திருவனந்தாழ்வானாக ஸேவித்து, அவேளையான படியாலே ப்ரதாபகாலத்திலே வந்து அபசாரக்ஷாமணம் பண்ணிக் கொண்டு, ஆஶ்ரயத்தை ப்ரார்த்தி₂க்க; ஜீயரும், தமக்கு அந்தரங்க₃ ஶிஷ்யரான வரத₃நாராயணாசார்யர் ஸ்வாமி க்ருபையாலே "**அண்ணன்**" என்று திருநாமம் பெற்றிருக்க, அவர் திருவடிகளிலே ஆஶ்ரயிப்பித்து, அந்த வரத₃நாராயண*

---

அவரை அழைத்துக் கொண்டு மடத்திலே திருப்பள்ளிப்பலகை ஸமீபத்தேற எழுந்தருள பெரிய ஜீயர் திருப்பள்ளிப்பலகையிலே சேஷாவதாரமாக ஸேவை ஸாதித்தார். அத்தைக் கண்டு ஆச்சர்யப்பட்டு அப்போது அது ஸமயமல்ல என்று விட்டு மறுநாள் விடிவோரே அந்த உத்தமநம்பி, அண்ணன் புருஷகாரமாக ஜீயர் ஸந்நிதியிலே அபசாரக்ஷாமணபூர்வகமாக "அடியேனைக்ருபை செய்து அருளவேணும்" என்று சொல்லி, முதல்நாள் அண்ணன் அருளிச்செய்ததையும் ராத்ரி தாம் கண்ட கனவினையும் விண்ணப்பம் செய்ய, பெரியஜீயரும் உகந்தருளி உத்தம நம்பியை கோயிலண்ணன் திருவடிகளில் ஆச்ரயித் திருக்கும்படி நியமித்தருளினார்.

70.6.3 இன்றளவும் கோயில் மணவாளமாமுனி ஸந்நிதி யிலே அண்ணன் புருஷகாரமாக அந்த உத்தமநம்பிக்கு ஆதி சேஷாவதாரமாக ஸேவை ஸாதித்தபடியை ஸந்நிதிமேல் பாகத்தில் உள்ள ஜன்னலின் வழியாக ஸேவிக்கப் பெறலாம். சுவரிலே ஆதிசேஷவாகனத்தோடே பெரிய ஜீயர் எழுந்தருளி யிருக்கும் இருப்பையும், பக்கவாட்டில் ஒருபக்கம் அண்ணனும், ஒரு பக்கம் உத்தமநம்பியும் சித்ர ரூபமாகக் கைகூப்பி எழுந் தருளியிருக்கும் இருப்பையும் இவர்களுக்கு நித்யதிருவாராதனத்தோடே கூடின தளிகையும் கண்டருளப் பண்ணிவருகிறார்கள். இன்றும் லோகத்தார் அண்ணன் உத்தமநம்பி இவர்களுக்கு ஆதிசேஷ ரூபியாக ஸேவை ஸாதித்தப்படியை ஜன்னல் பக்கத்திலேயிருந்து ஸேவிக்கப் பெறலாம்.

அண்ணன் கோயிலிலே எழுந்தருளாமலிருக்க, பூர்வம் ஆண்டானுக்கு உடையவர் ஸாதித்த மரியாதைகளும்,



*மணவாளமாமுனிகள் ஸந்நிதியில் சித்ரரூபமாக ஆதிஷேரூபியாக ஸேவைஸாதிக்கும் ஸ்ரீமணவாளமாமுனிகள், கோயிலண்ணன், உத்தமநம்பி ஆகியோர்.*

## பெரியஜீயர் பெரியபெருமாள் ஸந்நிதியிலே அண்ணனுக்கு முதலியாண்டான் வரிசையைத் *(மரியாதையை)* திரும்பவும் ஏற்படுத்திய சிறப்பு.

வாதூல தேசிகரான முதலியாண்டான் வம்சத்தவர் களுக்கு உடையவரால் ஏற்படுத்தப்பட்டதான பெரிய பெருமாள் சேனாதிபதி துரந்தர ஸ்ரீகார்யத்தையும் வாதூலதேசிகபதம் நிர்வஹித்து வந்த அண்ணனின் திருத்தகப்பனாரான தேவராஜ தோழப்பர் காலத்திலே சில மாற்றங்கள் ஏற்பட்டும் *(துருக்க*

பன்னீராயிரம் திருமுடிதிருத்தின கலாபத்துக்குப்பின் பெருமாள் திரும்ப ஸ்த$_2$லத்துக்குக்கெழுந்தருளின காலத்திலே, அந்த ஸ்ரீரங்க$_3$ராஜ வாதூ$_4$லதே$_3$ஶிகர் வம்ஶஸ்த்த$_2$ர் தே$_3$ஶாந்தர ஸ்த$_2$ர்களாய் ப$_3$ஹுகாலம் வாராமலிருக்க, அந்த மரியாதை யெல்லாம் ஸ்ரீப$_4$ண்டா$_3$ரம் சேர்ந்திருக்கையில்; "அவர்கள் விஜயநக$_3$ரப்ராந்தத்திலே பா$_4$க்$_3$யத்துடனிருக்கிறார்கள்" என்று ஸ்த$_2$லத்திலே எல்லாரும் கேட்டிருக்கிற படியாலே, வேதா$_3$சார்ய ப$_4$ட்டருக்கு உடன் படிக்கைமேலே இரண்டொரு மரியாதையைக் கொடுத்ததுபோக, குறை ஆண்டான் மரியாதைகள் – தீர்த்த$_2$ம் – அருளப்பாடு அண்ணங்காரைப் பிடிக்கச் சொல்லி உத்தமநம்பி சொல்ல; உடனே, பெரியபெருமாள் "தீர்த்த$_2$மும், கந்தாடை அண்ணன் என்கிற அருளப்பாடும், உமக்கு ஶ்ரேயஸ்கரமாய் அநுப$_4$வித்துக் கொள்ளும்" என்று நியமிக்க; கால விஶேஷத்திலே, திருவத்$_4$யயநோத்ஸவத்திலே, ஸ்வாமி நியமநத்தாலே

---

கலாபம்-பன்றியாழ்வான் மேட்டுக்கலகம்) கூட அவரே நம்பெருமாள் ஸ்ரீகார்யத்தையும் முதலியாண்டான் வாதூல தேசிகபத வரிசைகளையும் நடத்தி வந்தார். அண்ணன் பாலராய் இளந்தலையாய் இருந்த சமயத்திலே முதலியாண்டானின் வாதூலதேசிகபத முன்வரிசையைத் தள்ளி அந்த ஸ்ரீரங்க நாராயணஜீயரும் பட்டரும் தாங்களே அந்த முன் வரிசையைப் பெற்று வந்த செய்தியை அறிந்த பெரியஜீயர் அந்த உத்தம நம்பியை அழைத்துவிட அந்த உத்தமநம்பியும் பெரிய ஜீயர் ஸந்நிதிக்கு வந்து திருவடி தொழுது நிற்க அந்த உத்தம நம்பியைப் பார்த்து, "நீங்கள் அனாதிஸ்தலத்தராய் பூர்வோத்தரம் எல்லாம் அறிந்திருக்க உம்முடைய பாட்டன், கொள்ளுபாட்டன் முதலானோர் இவர்களுக்கேற்பட்டதான முதலியாண்டான் முன்வரிசை மரியாதைகளை ரக்ஷித்துப் போந்தபடி அறிந்தீரில்லையோ? இந்த அண்ணன் நம்பெருமாள் திருவோலக்

*தம்முடைய ஸந்நிதி₄யிலே ப்ரப₃ந்த₄ ஸேவையானவுடனே அண்ணன் ஸந்நிதி₄யிலேயும் நித்யம் ஸேவாகாலம் நடக்கும் படி நியமித்து, அண்ணன் ஒருகால விஶேஷத்திலே தே₃ஹ ஸம்ப₃ந்தி₄கள் நடத்தையில் ஜுகு₃ப்ஸிதராய் ஸந்யாஸம் ப்ரார்த்தி₂க்க, பெரியஜீயரும், பூர்வம் உடையவர்–கந்தாடை யாண்டான் ஸந்யாஸம் கேட்கையில் "ஆண்டான் வம்ஶஸ்த₂ர்களுக்கு ஸந்யாஸம் வேண்டாம்" என்று நியமித்து, தம்ப₄ாகி₃நேயரான முதலியாண்டானுடைய கந்யாஷட்கத்தை*

---

கத்தையிழந்து இருக்கலாமோ?" என்று அருளிச்செய்ய, அதற்கு அந்த உத்தமநம்பியும் இந்த ஸ்ரீரங்கநாராயணஜீயரும் பட்டரும் ஒன்று கூடிப் பண்ணின கார்யமிது. அவர்களும் இங்கே தேவரீர் ஸந்நிதியிலே ப்ராவண்யத்துடனே ஈடு *(காலக்ஷேபம்)* அதிகரித்துப் போருகிறார்கள்.

ஆகையினாலே அவர்களையும் தேவரீர் அழைத்து ஸ்வாமி அண்ணனுக்கு முன்போலே நம்பெருமாள் திருவோலக்க வரிசைகளை நடத்தி வைக்க நியமித்து அவ்வாறு அவர்கள் செய்யாவிட்டால், அதற்கு மேலே இந்த கார்யத்தை அடியேனுக்கு நியமிக்கலாம் என்ன; பெரிய ஜீயர் அந்த ஸ்ரீரங்க நாராயண ஜீயரையும், பட்டரையும் அழைப்பித்து, நம்பெருமாள் ஸந்நிதியில் உடையவர் நியமனமடியாக வந்த முதலியாண்டான் முன் வரிசையை யதாபூர்வமாக நடத்தவேணும். முதலியாண்டான் திருவம்சமாய் இருந்து வைத்தே, அண்ணன் இப்படித் திருவோலக்கம் இழந்து இருப்பது ந்யாயமல்ல. அவர் மஹாவம்சப்ரஸூதர். நம்பெருமாளாலே "அண்ணன்" என்று அபிமானிக்கப்பட்டவர், நீங்கள் இருவரும் அடியேனுக்காகவும் பெரியபெருமாள் உகப்பிற்காகவும் இதற்கு அநுகூலிக்கவேணும் என்று அருளிச்செய்ய, அவர்களும் அப்படியே தேவரீர் திருவுள்ளத்திற்குச்சேர நடக்கட்டும் என்று ஸம்மதிக்க, நம்பெருமாள் திருவோலக்கத்திலே இத்தைப் பெருமாளுக்குப்

*கோ3த்ரஷட் கத்திலே ப்ரதா3நம் செய்தருளி, "காலாந்தரத்திலே கந்யாஷட்க வம்ஶரோடே உமக்கு ஸப்தகோ3த்ர ஸங்கேத முண்டாய் ஸம்ப3ந்த4ம் நடக்கும்" என்று நியமித்தபடியாலே, அந்த அர்த்த2த்தை வெளியிட்டருளி; அந்த ஸங்கேதம் பண்ணி வைக்கையில்; ஆசார்ய நியமநப்ரகாரம் எல்லாம் நடந்து வருகிறது. காலவிஶேஷத்திலே,* ***ப்ரதிவாதி3 ப4யங்கரம் அண்ணன்*** *முதலான பேர் ஆசார்ய புருஷவரிசை யிலே வந்து சேர்ந்தார்கள்.*

---

பெரியஜீயர் விண்ணப்பிக்க நம்பெருமாளும் அண்ணனுக்கு அருளப்பாடு ஸாதித்து இனி முதலியாண்டான் வாதூலதேசிகபத முன் வரிசையை *(ஸ்ரீகார்யம்)* உமக்கும் உம் வம்சத்தவர் களுக்கும் நடத்திக் கொண்டு போரும் என்று நியமனமாக, அதுமுதலாக வேதாசார்ய பட்டருடைய *(உத்தண்டபட்டர்)* காலத்தில் இருந்ததுபோலே முதலியாண்டான் வரிசையும், அதன்பிறகு ஸ்ரீரங்கநாராயண ஜீயர் வரிசையும் அப்பால் பட்டர் வரிசையும் அநந்தரம் பெரிய நம்பிராமாநுசமுடையார் வரிசையும் அப்பால் ஸ்ரீகார்ய வரிசையுமாய் நடந்து வந்தது.

திருவத்யயனோத்ஸவகாலத்திலே பெரியஜீயர் நியமனப் படி அவருடைய ஸந்நிதியிலே திவ்யப்பிரபந்த ஸேவை ஆனபின் அண்ணன் ஸந்நிதியிலே நித்யம் நடக்கும்படி நியமித்தருளினார். ஒரு காலவிசேஷத்திலே கோயிலண்ணன் தம்முடைய உறவினர் களுடைய செயல்களாலே அருவெறுப்பு ஏற்பட்டு ஸ்ரீமணவாள மாமுனிகளிடம் தமக்கு ஸந்யாஸ ஆஶ்ரமம் தந்தருளும்படி பிரார்த்தித்தார். அப்போது "முதலியாண்டான் வம்சத்தவர்களுக்கு ஸந்யாஸ ஆஶ்ரமம் வேண்டாம்" என்று உடையவர் அருளிச் செய்திருப்பதால் தாம் அந்த ஆணையை மீற இயலாது என்று ஸ்ரீமணவாளமாமுனிகள் அருளிச்செய்தார். பெண்கொடுத்து வாங்குவதில் ஸப்தகோத்ர உறவு முறையை ஏற்படுத்திவைத்தார். ப்ரதிவாதிபயங்கரம் அண்ணன் போல்வார் பிற்பாடு திருவரங்கத் திற்கு எழுந்தருளி ஸ்ரீமாமுனிகளின் திருவடியைப் பற்றி வாழ்ச்சி

## சக்ரராயர் கைங்கர்யம்

*71. காலவிஶேஷத்திலே, சக்ரராயர் சந்த்₃ர புஷ்கரிணிக் கரை பழுதுபார்த்து, பரமபத₃நாத₂ன் ஸந்நிதி₄க்குத் தெற்குக் கரையும் மண்டபமும் கட்டி, பரமபத₃நாத₂ன் நாய்ச்சிமார் ஆழ்வார்கள் ஆசார்யர்களுக்கும் புழுகாப்பு சாத்துவித்தார். அந்த மண்டபத்திலே, ஒரு காலத்தில் ஶௌரிராஜர் எழுந்தருளியிருந்து, மரியாதைகள் வ்யத்யாஸத்தினாலே ஒண்டாமல் கீழையூரிலே எழுந்தருளினார்.*

---

பெற்றனர். அஷ்டதிக்கஜங்களில் ஒருவராக பிரதிவாதிபயங்கரம் அண்ணன் விளங்கினார். [*இன்றளவும் வாதூல தேசிக வம்சத்தவர்கள், உடையவர், பெரியஜீயர் இவர்களால் ஏற்படுத்தின கைங்கர்ய மரியாதை வரிசைகளையும், பெரியபெருமாள் திருவா பரணம் முதலான திருவரங்கச் செல்வம் உள்ளதான கருவூலம் (தெற்குக் கல்லறை) முதலான ஆராமங்களுக்கு ஹம்ஸமுத்ரையை இலச்சினையாகக் கொண்டு வாதூல தேசிக பதம் நிர்வகித்து வருகிறார்கள்.*]

71. வழியடிமைநிலையிட்ட உத்தமநம்பியின் சகோதரரான சக்ரராயர் சந்த்ரபுஷ்கரிணி திருப்பணிகள் பலவற்றை மேற்கொண்டார். சந்திரபுஷ்கரிணியைச் சுற்றிக் கருங்கல் சுவர்களை எழுப்பியதும் இவரது கைங்கர்யமே. முகம்மதியர் படையெடுப்பின்போது சேதமடைந்த நம்மாழ்வார் ஸந்நிதியின் வடக்குப் பகுதி இவரால் புனர்நிர்மாணம் செய்யப்பெற்றது. பரமபதநாதன் ஸந்நிதிக்குத் தெற்குப் பகுதியில் பெரியதொரு மண்டபத்தை கட்டிவைத்தார். பரமபதநாதன், ஆழ்வார்கள், ஆசார்யர்கள், சூடிக்கொடுத்த நாச்சியார் ஆகியோருடைய சாளக்ராமத் திருமேனிகளை யாது காரணம் பற்றியோ சுதைத் திருமேனிகளாக மாற்றியமைத்து புனுகுக்காப்பையும் சாத்தினார். இந்த மண்டபத்தில் திருக்கண்ணபுரம் சௌரிராஜன் எழுந்தருளியிருந்ததாகவும், அவருக்குரிய மரியாதைகள் அளிக்கப்

படாததனால், திருக்கண்ணபுரம் சௌரிப்பெருமாள் கீழையூர் எனப்படும் திருவானைக்காவிற்கு எடுத்துச் செல்லப்பட்டதாகவும் இந்தக் குறிப்பின் மூலம் அறியப்படுகிறது.

*(மூலத்தில் சௌரிராஜர் என்றுதான் காணப்படுகிறது. திருக்கண்ணபுரம் சௌரிராஜர் இங்கு எழுந்தருளியதற்கான எந்தக் குறிப்புகளும் இல்லை. முனைவர் ஹரிராவ் அவர்கள் தம்முடைய கோயிலொழுகு ஆங்கில விவரணத்தில் திருக்கண்ணபுரம் சௌரி ராஜப்பெருமாளைக் குறிப்பிடுகிறார்.)*

*(கி.பி.2002ஆம் ஆண்டில் பரமபதநாதன் ஸந்நிதி ஜீரணோத் தாரணம் மேற்கொள்ளப்பட்டது. அந்த சமயத்தில் பரமபதநாதன் மற்றும் அனைத்து ஆழ்வார் ஆசார்யர்கள் திருமேனிகளிலிருந்த சுதை நீக்கப்பெற்றபோது, அவர்கள் சாளக்கிராமத் திருமேனியோடு இருப்பது தெரியவந்தது. தற்போது சாளக்கிராமத் திருமேனியோடு கூடிய பரமபதநாதனின் அழகான திருவுருவம் கீழே கொடுக்கப் பட்டுள்ளது.)*



*பரமபதநாதன் - திருவரங்கம்*

## தென்னாயக்கர் கைங்கர்யம்

72. ஶகாப்₃த₃ம் ஆயிரத்து முந்நூற்றெழுபத்துநாலுக்கு மேல் பரீதாபி-ஸூ ஹநுமந்த தே₃வருக்குக் கோயில்கட்டி ப்ரதிஷ்டி₂ப்பித்தது தென்னாயக்கர் கைங்கர்யமாக உத்தம நம்பி கட்டிவைத்தார். அவருக்குக் கிழ்ப்பற்றுப் புத்தூரைத் திருவிடையாட்டமாகத் தென்னாயக்கர் ஸமர்ப்பித்தார்.

## சாத்தாத நரசிங்கத₃ாஸர் கைங்கர்யம்

73. அந்தக் கோயிலை கந்தாடைநாயனுக்கு ஸமர்ப்பிக் கையில், கோயிலுக்குமுன்னே திருமண்டபம் கட்டி, திருப் பாணாழ்வாரை ப்ரதிஷ்டி₂ப்பித்தது, அவர் ஶிஷ்யர் **சாத்தாத நரசிங்கத₃ாஸன்.**

---

72. சகம் 1374 [கி.பி.1452]ஆம் ஆண்டு உடையவர் ஸந்நிதிக்கு மேற்குப் பகுதியில் வீரஆஞ்சனேயர் ஸந்நிதியை தென்னாயக்கருடைய கைங்கர்யமாக உத்தமநம்பி நிர்மாணித்தார். அந்த ஸந்நிதியைப் பராமரிப்பதற்காக, கீழ்பற்றுப் புத்தூரை திருவிடையாட்ட பூமியாக ஸமர்ப்பித்தார் தென்னாயக்கர் எனப்படும் லக்கண்ண தண்டநாயக்கர். [*இவர் இரண்டாம் தேவராயரால் நியமிக்கப்பட்ட ஆளுனர்களில் ஒருவர். இவருக்கு தக்ஷிணசமுத்ராதிபதி (தெற்கு சமுத்திரங்களுக்கு மன்னன்) என்ற பெயரும் வழங்கிவந்தது.* ]

73. இந்த ஸந்நிதி நிர்வாகம் பிற்காலத்தில் கந்தாடையார் வசம் ஒப்படைக்கப்பட்டது. கந்தாடையார் சிஷ்யனான சாத்தாத நரசிங்கதாஸன் அந்த ஸந்நிதிக்கு முன்பு ஒரு மண்டபம் கட்டி அதில் திருப்பாணாழ்வாரைப் பிரதிஷ்டைசெய்தான். (*தற்பொழுது இந்த ஸந்நிதி கோயில் அண்ணனுடைய நிர்வாஹத்தின்கீழ் அமைந்துள்ளது.*)

## நம்பெருமாள் 'ஸ்ரீசைலேசத₃யாபாத்ரம்' என்னும் தனியன் ஸாதி₃த்தது

*அந்த வருஷம் ஆவணிமாஸத்திலே திருப்பவித்ரத் திருநாள் சாற்றுமுறையில், அழகியமணவாளப்பெருமாள், பெரியஜீயரை அர்ச்சக முகே₂ந அழைத்து, 'நாளைமுதலாகப் பெரியதிருமண்டபத்திலே ஈடு தொடங்கிக் காலக்ஷேபம் நடத்தும்' என்று நியமித்தருளி; மற்றாநாள் நாய்ச்சியாருடன்*

*(ஸ்ரீரங்கத்திற்குக் கிழக்கே வெளித்திருமுற்றத்தில் சிங்கர்கோயிலுக்கு அருகில் திருப்பாணாழ்வாருக்குத் தனியானதொரு ஸந்நிதி அமைந்திருந்ததாக அறியப்படுகிறது. இந்த ஸந்நிதி ஆற்றுவெள்ளத்தில் அழிவுற்றிருக்கலாம். ஸ்ரீரங்கம் கல்வெட்டு எண்.369,* ARE.No.93 of 1936-37. *விட்டலகிருஷ்ணன் ஸந்நிதியின் உட்புற சுவற்றில் அமைந்துள்ளது.)*

74. ஸ்ரீமணவாளமாமுனிகள் அடியார்குழாங்களுடனே திருவரங்கத்தில் வாழ்ந்தருளுகிற நாளிலே 'பரீதாபி' வருஷத்தில் திருப்பவித்ரத் திருநாளிலே நம்பெருமாள் தமது பரமக்ருபையாலே ஜீயருடைய பெருமையைப் பெரியோர்களுக்கெல்லாம் அறிவிக்க எண்ணங்கொண்டு பெரிய ஜீயருக்குத்தாம் சிஷ்யனாகும் விருப்பத்தால், அர்ச்சகமுகேந ஜீயரை அழைப்பித்து அருள்பாடிட்டருளி, "நாளை முதலாக நம்முடைய பெரிய திருமண்டபத்தில் 'பெரிய வண் குருகூர்நகர் நம்பியான' ஆழ்வாருடைய திருவாய்மொழிப் பொருளை ஈடுமுப்பத்தாறாயிரத்துடன் நடத்தும்" என்று நியமித்தருளினார்.

ஜீயரும் "நம்பெருமாள் இப்படி அருளுவதே!" என்று மிகவும் மகிழ்ந்து மறுநாளே காலக்ஷேபம் தொடங்கி, ஈடுதொடக்கமான ஐந்து வியாக்யானங்களுடனே திருவாய்மொழியை

*பெருமாள் புறப்பட்டருளி, பெரியதிருமண்டபத்திலே ஏறியருளி; ஜீயர் ஈடு தொடங்கிக் காலக்ஷேபம் நடத்த; அதுமுதலாக ஒருவருஷம் நித்யமாக பெரியவஸரம் அமுது செய்தருளினவுடனே புறப்பட்டருளி, பெரிய திருமண்டபத் திலே ஏறியருளி ப₄க₃வத்₃விஷயம் முற்றவுங்கேட்டருளி, சாற்றுமுறையன்றைக்கு ஆழ்வார்களுடனே பெரிய திருவோலக்கமாக எழுந்தருளி, ஜீயர் ஈடு சாற்றினவுடனே அர்ச்சகமுகமாக 'ஸ்ரீஶைலேஶத₃யாபாத்ரம்' என்கிற தனியனுடன் ஸகலவரிசைகளும் ஸாதி₃த்து, தாம் ஸாதி₃த்த வரிசையைத் தம் ஆராமங்களிலும் நடத்தச்சொல்லி தி₃வ்ய*

---

நடத்தியருள நம்பெருமாளும் பத்துமாத காலம் உத்ஸவாதி களை எல்லாம் நிறுத்தி விட்டு நாச்சியாருடனும் அனந்தகருட விஷ்வக்ஸேனாதிகளான நித்யஸூரிகளோடும், நம்மாழ்வார் தொடக்கமான ஆசாரியர்களோடும் மற்றும் நிலத்தேவர்களான ஸ்தலத்தார்களுடனும் பெரியவோலக்கமாகவிருந்து பெரு மகிழ்ச்சியோடே கேட்டருளினான். இப்படி பத்துமாத காலம் நடந்துமுடிந்த பிறகு, அடுத்த ஆனித்திருமூலத்தன்று திருவாய் மொழி சாற்றுந்தருவாயில் பெருமாள் 'ஸ்ரீரங்கநாயகம்' என்ற ஐந்து வயது அர்ச்சக குமாரனாகத் தோன்றி ஸபைநடுவே நின்று,

**ஸ்ரீசைலேச தயாபாத்ரம் தீபக்த்யாதி குணார்ணவம்।**
**யதீந்த்ரப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முநிம் ॥**

*(திருமலையாழ்வாரான ஸ்ரீசைலேசரின், பரம க்ருபைக்குப் பாத்திரரானவரும் அதனால் ஞானபக்தி வைராக்யங்களான குணக் கடலாகவும் யதீந்த்ரரான எம்பெருமானார்திறத்தில் ப்ரேமையே வடிவெடுத்தவராகவும் விளங்கும் அழகியமணவாள மாமுனியை வணங்குகிறேன்)* என்று அருளிச்செய்து மறைய, அங்கிருந்த பெரியோர்கள்

*தே₃ஶங்களுக்குத் திருமுகப்பட்டையம் ஸாதி₃த்தருளினார். அதுமுதலாக, சுற்றுக்கோவில்களிலும், தி₃வ்யதே₃ஶங் களிலும் ப்ரப₃ந்த₄ாதி₃யிலே அந்தத் தனியன் நடக்கிறது.*

---

அந்த ச்லோகத்தைப் பட்டோலை கொண்டு மஞ்சட் காப்பு சாத்தி பெருமாள்திருவடிகளிலே ஸமர்ப்பித்து மகிழ்ந்தனர். பெரியபெருமாளும் திருமலை பெருமாள்கோயில் தொடக்கமான திருப்பதிகளுக்கெல்லாம் ஸ்ரீஸேனை முதலியாரது ஸ்ரீமுகமாக "அருளிச்செயலநுஸந்தான காலங்கள் தோறும் தொடக்கத்திலும் சாற்றிலும் ஜீயர் விஷயமாகப் பெருமாளருளிச்செய்த இந்தத் தனியன்கள் நித்யாநுஸந்தேயமாகக்கடவது" என்று நியமித்து அனுப்பியருளினார்.

இது ஈட்டுக்கு ஈடாக நம்பெருமாள் மாமுனிகளுக்கு உகந்தளித்த பரிசாம்.

[*ஈடு ஸாதிக்கத் தொடங்கிய நாள்: கலி 4533 பரீதாபி வருஷம், ஆவணிமாதம் 31ஆம் தேதி, வெள்ளிக்கிழமை, சுக்ல சதுர்த்தி, ஸ்வாதி நக்ஷத்ரம் (16-9-1432) ஈடு சாற்றுமுறையாகி ஸ்ரீசைலேச தனியன் அவதரித்த நாள்: கலி 4534 - பிரமாதீச வருஷம் ஆனி மாதம் பௌர்ணமி ஞாயிறு, மூலநக்ஷத்ரம் (9-7-1433) நம்பெருமாள் கலாபத்திற்குப் பிறகு திருவரங்கம் எழுந்தருளியது பரீதாபி ஆண்டில். 60 ஆண்டுகளுக்குப் பிறகு மீண்டும் பரீதாபி ஆண்டில் ஈடுகேட்கத் திருவுள்ளம் பற்றினார்.* ]

தனது விபவாவதாரங்களில் வசிஷ்டருக்கு சீடனா கவும், சாந்தீபினிக்கு சீடனாகவும், ஆதிசேஷாவதாரமான ஸ்ரீபலராமனுக்குத் தம்பியாக எழுந்தருளியிருந்து பணிவிடைகள் செய்தும் தன்னைக் 'கட்டுண்ணப் பண்ணிய

பெருமாயன்', அர்ச்சாவதாரத்தில் 'ஶ்வஶுரம் அமரம் வந்த்யம்' என்னும்படி பெரியாழ்வாரைத் தனது மாமனாராக்கிக் கொண்டான். அதுமட்டுமா! எம்பெருமானார் முன் திருக்குறுங்குடிநம்பி தன்னை ஸ்ரீவைஷ்ணவ நம்பியாக குறுக்கிக்கொண்டு உடையவர் உலகெலாம் வைணவம் பரப்பிய வித்தையைக் கேட்டான்.

[கலாப காலத்தில் 48 ஆண்டுகள் வனவாசம் செய்து பின் கோயில் மீண்டருளிய நம்பெருமாள் தன் தாபம் தீர பத்துமாத காலம் தன் உத்ஸவாதிகளையெல் லாம் ஒதுக்கிவைத்துவிட்டு யதீந்த்ர ப்ரவணரிடத்தில் பகவத் விஷயம் கேட்டு பூரித்து, நீர்மையால் தன்னை சிஷ்யனாகவும், விநயமே வடிவெடுத்த மாமுனிகளை ஆசார்யனாகவும் அபிமானித்து ஸ்ரீஶைலேஶ தயாபாத்ரம் என்ற தனியனையும் பரிசாக அளித்தான்.

செம்பவளத் திரள் வாயால் தன் சரிதை கேட்டு தன் அணிமணியாசனத்திலிருந்து இறங்கி ஸாமாந்ய ஜனங்களுடன் கூட்டத்தில் இணைந்து அவர்களுள் ஒருவனாகக் கேட்ட சக்கரவர்த்தி திருமகனார் லவகுசர்களுக்கு அளித்த பரிசையும் விட, இத்தனியன் விலைமதிப் பில்லாதது. அவனது திருப்பவளத்திலிருந்து உதித்த தனியனாதலால்தான் அருளிச்செயல் நடையாடும் அனைத்திடங்களிலும் அது தலைமை பெற்றது. கடந்த இரண்டு நூற்றாண்டுகளுக்குள் மாற்றம் அடைந்த சில திவ்யதேசங்களில்கூட அதற்கு முன்பு இந்தத் தனியன்தான் ஓதப்பட்டுவந்தது என்பதற்கு அசைக்க முடியாத ஆதாரங்கள் பல உள்ளன.]

## எல்லைக்கரைமதிள் கட்டினது

*75. அந்த வருஷத்திலே கிழையூரிலும் ஒரு ரிஷப₄ம் வெளித் திருமுற்றத்திலே வந்து அழிக்க, அதைப் பொறுக்க மாட்டாதே ஏகாங்கிகள் ஹிம்ஸிக்க, அதுமுதலாக கிழையூரா ருக்கும் இத்தலத்தாருக்கும் ப₃ஹுவிரோத₄ம் வர,* ***எல்லைக் கரை மதிள்*** *கட்டுவித்தார்கள்.*

## அண்ண ஆண்டப்ப உடையார் திருமலைதந்தான் கைங்கர்யம்

*76. இந்த வருஷத்திலே, புரட்டாசிமாஸம் ஆதி₃த்ய*

---

75. திருவானைக்காவிலிருந்து ஒரு ரிஷபமானது திருவரங்கத்தின் கிழக்குப் பகுதியாகிய வெளித்திருமுற்றத்திற்கு வந்து அங்குள்ள பயிர்களை நாசம் செய்ததோடு மட்டுமல்லாமல் பலரையும் அந்த ரிஷபமானது காயப்படுத்திட, வெளித் திருமுற்றத்தில் உள்ளோர் அந்த ரிஷபத்தைத் துன்புறுத்தினர். இதனால் வெளித்திருமுற்றத்தில் வசித்து வந்தோருக்கும் திருவானைக்காவில் வசித்து வந்தோருக்கும் விரோதம் வளர வழியடிமைநிலையிட்ட உத்தமநம்பி இரு தரப்பாரையும் சமாதானப்படுத்தி எல்லைக்கரை மதிளைக் கட்டுவித்தார். இந்த நிகழ்ச்சி நடந்தது சக ஆண்டு 1356 [கி.பி.1434]. *(எல்லைமதிள் திருவானைக்காவல் தெப்பமண்டபத்தின் வடமேற்கு மூலையில் தரை மட்டத்தில் நஞ்சை நிலங்களுக்குக்கிடையே இப்போதும் தென்படுகிறது. சென்னை செல்லும் தேசிய நெடுஞ்சாலைக்கு கிழக்கில் வயல்காடு வழியாக இந்த மதிள் கொள்ளிடத்தின் கரையில் அமைந்துள்ள எல்லைக்கரை மண்டபம்வரை போகிறது.)*

76. சக ஆண்டு 1356 *(கி.பி.1434)*-இல் ஆதித்ததேவ

*தே₃வ உடையார் நக்ஷத்ரமான உத்திரட்டாதியிலே திருத்தேர் திருநாள் நடத்தும்படி* ***அண்ண ஆண்டப்ப உடையார் திருமலை தந்தான்*** *திருவிக்கிரமன் திருவீதியிலே த்₄வஜா*

உடையாருடைய நக்ஷத்திரமான புரட்டாசி உத்தரட்டாதியில் திருத்தேர் திருநாள் நடத்தும்படி அண்ண ஆண்டப்ப உடையார் திருமலைதந்தான் என்பார் திருவிக்கிரமன் திருவீதியிலே *(உத்தர வீதியிலே)* திருநாள் கொண்டாடும்படி கொடியாலம் கிராமத்தை பொலியூட்டாக ஸமர்ப்பித்தான். *(கோயிலொழுகு தெரிவித்திடும் இந்தச் செய்தியை ஸ்ரீரங்கம் கல்வெட்டு எண்.329* A.R.No.7 of 1938-39 *இரண்டாம் திருச்சுற்றின் கிழக்குப் பகுதியில் அமைந்துள்ள 1.1.1434 வெள்ளிக்கிழமை தேதியிட்ட கல்வெட்டு உறுதிப்படுத்து கிறது. இதன் கன்னடமொழியில் அமைந்த சாசனம் ஸ்ரீரங்கம் கல்வெட்டு எண்.330* A.R.No.20 of 1938-39 *காணப்படுகிறது.)*

76.1. ஆதித்ததேவ உடையா ருடைய மகனான அண்ண சவுண்டப்பகள் என்பார் தன்னுடைய தந்தையின் பிறந்த நக்ஷத்திரமாகிய, புரட்டாசி உத்திரட்டாதி அன்று நம்பெருமாள் திருத்தேரிலே எழுந்தருளும்படி ப்ரஹ்மோத்ஸவத்தை நடத்திக் கொடுப்பதற்குக் கோயில் நிர்வாஹ அதிகாரியான உத்தம நம்பிக்கு சாஸனம் எழுதிக்கொடுத்ததைத் தெரிவிக்கிறது. இந்த விழா நடைபெறும் நாட்களில் நம்பெருமாள் வாஹனத்தில் எழுந் தருளும்போது முன்னே செல்வதற்கு ஒரு யானையும், திருவிளக்கு நெய்க்கு முப்பது பசுக்களையும் தானமாகக் கொடுத்ததைத் தெரிவிக்கின்றது 1.4.1434-ஆம் தேதியிட்ட இந்தக் கல்வெட்டு.

76.1.1. இரண்டாம் திருச்சுற்றான ராஜமஹேந்திரன் திருச்சுற்றின் கிழக்குப் பகுதியில் அமைந்துள்ள, (ஸ்ரீரங்கம் கல்வெட்டு எண்.331, A.R.No.14 of 1938-39,) 31.12.1435ஆம் தேதியிட்ட கல்வெட்டின் மூலம் இந்த புரட்டாசி ப்ரஹ்மோத்ஸ வத்திற்கு செந்தன்பாளன், கண்ணன்குடி ஆகிய கிராமங்களில் உள்ள நிலங்களை அளித்தமையும் அறியப்படுகிறது.

ரோஹணத் திருநாள் நடப்பித்து, கொடியாலத்தைப் பலி வெட்டு க்$_3$ராமமாக ஸமர்ப்பித்தான்.

## அண்ணப்ப உடையார் கைங்கர்யம்

77. ருதி$_4$ரோத்$_3$க$_3$ாரி வருஷத்திலே, அண்ணப்ப உடையார் கட்டளை:-

வஸந்தோத்ஸவ கேடாக்குழித்திருநாள் நடப்பித்து, அதுக்குப் பலிவெட்டாக, மல்லிதேவன் புத்தூர் என்கிற க்$_3$ராமத்தை ஸமர்ப்பித்தான். அகளங்கன் திருவீதி மேல்பக்கத்திலே கேடாக்குழி மண்டபமும் அவன் திருப் பணியாகச் செய்வித்தது அந்த உத்தமநம்பி.

---

77. இந்த வழியடைமைநிலையிட்ட உத்தமநம்பி காலம் வரையில் வஸந்தோத்ஸவம் ஆண்டுதோறும் திருக்காவிரியில் நடந்து வந்தது. ஒரு வருஷம் வைகாசியிலேயே திருக்காவிரி வெள்ளம் வந்து உத்ஸவம் நடவாமல் போயிற்று. கோயிலுக் குள்ளேயே பெரிதாய் ஒருகுளம் வெட்டி (கெடாக்குழி), அதில் மையமண்டபமும், சுற்று மண்டபமும், அதற்குமுன் பெரிய மண்டபமும் போடுவித்து, தலைக் கோரையிலிருந்து குறம்பு வைத்து அது வழியாகக் கெடாக்குழிக்கு ஜலம்விட்டு, அதிலே உத்ஸவம் நடக்க ஏற்பாடு பண்ணி, அந்த உத்ஸவச் செலவுக்காக அண்ணப்ப உடையாரைக் கொண்டு மல்லியம் புத்தூரை பொலியூட்டாக ஸமர்ப்பித்தார் இந்த உத்தமநம்பி.

77.1. இந்த கிராமத்துக்காக மோஹினிப்பணம் 850 ரூபாய் ஏற்பட்டு அரசாங்கத்திலிருந்து இன்றைக்கும் கொடுக்கப்

## பராசர் கைங்கர்யம்

*78. பார்த்த₂ஸாரதி₂ கோயில் முகப்பத்தி, பராசர் கைங்கர்யம்.*

---

படுகிறது. வஸந்தத்திருநாள் முழுதும் மண்டபஸேவை, விட்டவன் விழுக்காடு முதலானவை உத்தமநம்பிக்கே ஏற்பட்டு இப்போதும் அந்த வம்சத்தாருடைய அனுபவத்தில் இருக்கின்றன.

*(அண்ணப்பஉடையார், அண்ண ஆண்டப்ப உடையார் என்று இரு பெயர்கள் குறிப்பிடப்பட்டிருந்த போதிலும், அந்தப் பெயர்கள் ஒரு நபரையே குறிக்கும். திருவானைக்கா ஜம்புகேஸ்வரர் கோயிலில் சக ஆண்டு 1358 (கி.பி.1436)-ஆம் ஆண்டு கல்வெட்டு எண்.* A.R.No.143 of 1928-29*இல் குறிப்பிடப்பட்டிருக்கும் அண்ண சவுண்டப்ப உடையாரும், திருவரங்கம் கல்வெட்டுகளில் காணப்படும் அண்ண சவுண்டப்ப உடையாரும் ஒருவரே. தேதி குறிப்பிடாத* A.R.No.72 of 1939*இன் படி அண்ணப்பன் சவுண்டப்பா என்பர் நம்பெருமாளுக்கு திருவாசி ஸமர்ப்பித்தும், ஆயிரங்கால் மண்டபத்தை பழுது பார்த்தும் ப்ரணவாகார விமானத்திற்கு பொன் வேய்ந்தும் ஆகிய கைங்கர்யங்களை மேற்கொண்டார் என்று குறிப்பிடுகிறது.)*

78. பார்த்தசாரதி ஸந்நிதி உடையவர் ஸந்நிதிக்கு அருகில் அமைந்துள்ளது. இந்த ஸந்நிதியில் ஸ்ரீபார்த்த சாரதியாகிய கிருஷ்ணன் தேரிலே எழுந்தருளியிருந்து அர்ஜுனனுக்குக் கீதோபதேசம் செய்யும் திருக்கோலத்தில் எழுந்தருளியுள்ளார். இந்த ஸந்நிதி முன் மண்டபம் திப்பராஜர் என்று அழைக்கப்படும் பராசர் கைங்கர்யம்.

## புத்தூர் அழகியமணவாளப்பெருமாள் கைங்கர்யம்

79. திருமடைப்பள்ளி உட்பட்டது **புத்தூர் அழகிய மணவாளப்பெருமாள்** கைங்கர்யம்.

## உத்தமநம்பி, சக்ரராயர் நிர்வஹித்தது

*80. இந்தப்படி மெய்நிலையிட்ட உத்தமநம்பி ப்ரமோதூத வருஷம் வரைக்கும் பலவகையிலும் வாங்கின திருவிடையாட்ட க்ராமங்கள் நூறு. இவர் தம்பி சக்கரராயர், ராஜகர் உபத்ரவத்தினாலே திருக்கொட்டாரத்திலே நெல்லை யெடுத்துக்கொண்டுபோக வந்தவனுக்குக் குடலையளந்தார்.*

---

79. பெரியதிருமடைப்பள்ளியும் அதன் உட்புற அமைப்பு களும் புத்தூர் அழகியமணவாளப் பெருமாள் கைங்கர்யம்.

80. வழியடிமைநிலையிட்ட உத்தமநம்பி சர்வஜித் ஆண்டு தொடங்கி ப்ரமோதூத ஆண்டு ஈறாக 42 வருஷங்களில் விஜயநகர மன்னர்களிடமிருந்தும், சிற்றரசர்களிடமிருந்தும் பெற்ற பொற்காசுகளைக்கொண்டு, நூறு கிராமங்களை வாங்கி ஸ்ரீபண்டாரத்திலே சேர்ப்பித்தார். இவருக்கு சின்ன கிருஷ்ணராய உத்தமநம்பி என்ற பெயரும் வழங்கிவந்தது.

80.1. இவர் ஸ்ரீரங்க ஸ்ரீகார்யம் நிர்வஹிக்கும் போது மதுரையை நாயக்கமன்னர்கள் ஆண்டுவந்தனர். அவர்களுள் ஒருவரான, கிருஷ்ணப்பநாயக்கர் அதிகாரத்தில் சகாப்தம் 1456 [கி.பி.1534] க்கு மேல் ஜய வருஷத்தில், நாட்டில் பஞ்சம் வந்து நெல் கிடைக்காமல் போயிற்று. கோயிலுக்குச் சொந்தமான 282 கிராமங்களிலிருந்து கொண்டுவரப்பட்ட நெல் திருக்கோயில் கொட்டாரத்தில் சேமித்து வைக்கப்பட்டிருந்தது. அவ்வாறு சேமிக்கப் பட்டு வைத்திருந்த நெல்லைக் கொடுக்க வேண்டுமென்று

உத்தமநம்பியைக் கேட்டார் மதுரை நாயக்கர். உத்தமநம்பி அதற்கு ஆக்ஷேபம் தெரிவித்து, "*அரங்கன் சொத்துக்கு ஆசைப்படக் கூடாது*" என்று அறிவுரை சொல்லியும் நாயக்கர் செவிசாய்க்க வில்லை. அதற்கு உத்தம நம்பி "நீர் கூடைப் பிடித்தால் நானே மரக்கால் பிடித்து அளக்கிறேன்" என்று சொல்லி ராஜாவை கூடைபிடிக்கச் செய்தார். முதல் மரக்காலுக்கு "திருவரங்கம்" என்று அளந்து, மறு மரக்காலுக்குப் "பெரியகோயில்" என்று சொல்லி தம்குடலை அளந்து ப்ராணத்யாகம் பண்ணினார். ராஜாவும் வெளியே வந்து இவருக்கு "குடல் சார வாளா நாயனார்" என்று பட்டப் பேர் கொடுத்தார்.

80.1.1. அதுமுதல் கொட்டாரத்துக்கு வந்த நெல் பெருமாள் தளிகைக்கு தவிர வேறு எந்த காரியத்திற்கும் கொடுக்கக் கூடாதென்று முடிவெடுக்கப்பட்டது. மேலே சொன்ன 282 திருவிடையாட்டக் கிராமங்களில் அளவு முதலான கணக்குகளில் ஒன்று இரண்டு மூன்று என்ற சொல்லுக்கு பதிலாக திருவரங்கம், பெரியகோயில், மூன்று என்றே சொல்வது வழக்கம். இன்றைக்கும் இதுவே முறை. இவ்வாறு உத்தமநம்பி வம்ச ப்ராவத்தில் காணப்படுகிறது.

*[குடல் சக்கரவாள நம்பியைப் பற்றிய குறிப்பு தன்வந்த்ரி ஸந்நிதியின் கி.பி.1493-ஆம் ஆண்டு கருடவாஹன பண்டிதர் காலத்திய கல்வெட்டில் காணப்படுகிறது. ஆயினும் கோயிலொழுகு இந்த குடல் சக்ரவாள நம்பியை சக்ரராயராகக் குறிப்பிடுகிறது. சக்ரராயர் வழியடிமைநிலையிட்ட உத்தமநம்பியின் சகோதரர் ஆவார் (கி.பி.1407-50). மதுரை நாயக்க வம்சத்தினர் கி.பி.1529-ஆம் ஆண்டு முதல் ஆட்சிபுரிந்து வந்தனர் என்பதை முன்னரே கண்டோம். முதலாம் கிருஷ்ணப்பநாயக்கனுடைய ஆட்சி ஆண்டுகள் கி.பி. 1564-72. கோயிலொழுகின் குறிப்புப்படி இந்த உத்தமநம்பி காலத்தில் மதுரையை ஆண்டவன் மதுரை நாயக்க வம்சத்தைத் தோற்றுவித்த விஸ்வநாத நாயக்கன் (கி.பி.1529-64).]*

## கருட$_3$வாஹநபண்டி$_3$தர் கைங்கர்யம்

*81. பூர்வம் ஆரோக்$_3$யஶாலையும் திருநடைமாளிகையும் ப்ரதாபசக்ரவர்த்தி காரியப்பேரில் கங்கைதே$_3$வரான சிங்கணதண்டயநாயக்கர் திருப்பணியாயிருந்ததும், உடையவர் கைங்கர்யமாயிருந்ததும், துலுக்காவணத்திலே சேதமாகையில், இந்தக் கோயிலும் திருமண்டபமும் முன்னில் முகப்பு மண்டபமும்* ***க$_3$ருட$_3$வாஹனபண்டி$_3$தர்*** *கைங்கர்யம். உடையவர் நாள் முதலாக, ஆரோக்$_3$யஶாலாதி$_4$பதிகளுக்கு* ***க$_3$ருட$_3$வாஹன பண்டி$_3$தர்*** *என்று பட்டப்பெயர்.*

---

81. வீரராமநாதன் என்று அழைக்கப்படும் ப்ரதாப சக்கரவர்த்தியின் படைத்தலைவனான கங்கைய தேவன் சிங்கண தண்டநாயக்கர் தன்வந்த்ரி ஸந்நிதியையும் அதன் நடை பாதையையும் கட்டி வைத்தான். உடையவர் காலத்தில் அவருடைய மேற்பார்வையில் இந்த ஸந்நிதி இருந்து வந்தது. முகம்மதியருடைய படையெடுப்பின் போது இந்த ஸந்நிதிக்கு பெருத்த சேதம் விளைவிக்கப்பட்டது.

81.1. தன்வந்த்ரி ஸந்நிதி, அதன் முகப்பு மண்டபங்கள், சுற்றுச்சுவர்கள் ஆகியவை கருடவாஹன பண்டிதரால் புனர் நிர்மாணம் செய்யப்பெற்றன. உடையவர் காலத்திலிருந்து தன்வந்திரி ஸந்நிதி நிர்வாஹிகளுக்கு கருடவாஹன பண்டிதர் என்ற சிறப்புத் திருநாமம் அமைந்திருந்தது. *(ஸ்ரீரங்கம் கல்வெட்டு எண்.266,* A.R.No.80 of 1936-37 *பக்கம் 71 மற்றும் 72இல் இந்தக் கல்வெட்டைப் பற்றிய விபரங்கள் கொடுக்கப்பட்டுள்ளன.)*

81.1.1. கோயிலொழுகு தரும் செய்திகளின்படி கங்கை தேவரான சிங்கணன் தண்டநாயக்கர் தந்வந்திரி ஸந்நிதியை நிர்மாணித்ததாகவும், அதன்பிறகு உடையவர் அதைப்பரிபாலித்து

## அண்ணப்பருடைய கைங்கர்யம்

82. ஶகாப்₃த₃ம் ஆயிரத்து முந்நூற்றெண்பத்தஞ்சில் ருதி₄ ரோத்₃க₃ாரி வருஷத்திலே அடையவளைந்தான் திருமதிள் திரு வாசல் திருக்கோபுரத்தடியும் **அண்ணப்பருடையார்** திருப்பணி.

## நாகராஜ உடையார் கைங்கர்யம்

83. நாய்ச்சியார்கோயில் திருநடைமாளிகை **நாக₃ராஜ உடையார்** கைங்கர்யம்.

---

வந்ததாகவும் குறிப்பிடுகிறது. *(இது வரலாற்று உண்மைக்கு முரண்பட்ட செய்தியாகும். ஏனெனில் ஹொய்சாள மன்னனான வீரராமநாதனின் ஆட்சிக்காலம் கி.பி.1254-95. உடையவர் எழுந்தருளியிருந்த காலம் கி.பி.1017-1137. ஆகவே கோயி லொழுகில் உடையவர் வைபவம் விவரிக்கப்பட்ட இடத்தில் "பூர்வம் புராண ஸித்தமாய் ஜீர்ணமாயிருந்த தந்வந்த்ரியை ப்ரதிஷ்டிப்பித்து, அந்தக் கோயிலை கருடவாஹந பண்டி தருக்குக் கட்டளையிட்டு, அவரிடத்திலும் நித்யமாக ராத்ரி திருக்காப்புச் சேர்க்கிறதுக்கு முன்பாக, குடிநீர் பால் அலங்கார மாக வந்து அமுதுசெய்தருளும்படி திட்டம் பண்ணி," என்று காணப்படுகிறது. ஆகவே கங்கைதேவரான சிங்கணன் தண்ட நாயக்கர் தந்வந்திரி ஸந்நிதியை ப்ரதிஷ்டிப்பித்தாக குறிப் பிட்டிருப்பது தவறு. அவர் அந்த ஸந்நிதியின் விரிவாக்கத்தை மேற்கொண்டிருந்திருக்கலாம்.)*

82. சக ஆண்டு 1385 *(கி.பி.1463)* ருதிரோத்காரி வருஷத்தில் அண்ணப்ப உடையார் அடையவளைஞ்சான் திருமதிளைக் கட்டினார். அதன் கோபுரங்களும் நடைபாதையும் அவர் காலத்தில் கட்டப் பெற்றன.

83. நாகராஜ உடையார் ஸ்ரீரங்கநாய்ச்சியார் ஸந்நிதியைச் சுற்றிய திருநடையை *(நடைபாதையை)*க் கட்டுவித்தார்.

## வழியடிமைநிலையிட்ட உத்தமநம்பி கைங்கர்யம்

*84. பெரியதிருமண்டபத்திலே உடையவர் மரக் கோப்பாகக் கட்டி நிர்வஹித்தருளினது கலஹத்திலே அக்$_3$நி த$_3$க்த$_4$மாகையாலே, தே$_3$வாஸநக்கொறடுங்கட்டி, திருமண்ட பமும், இந்தத் திருமண்டபத்துக்குகீழ் திருக்காவணப்பத்தியும் கட்டுவித்தது* ***வழியடிமை நிலையிட்ட உத்தமநம்பி.***

---

84. பெரிய திருமண்டபத்தில் *(சந்தன மண்டபத்தில்)* மரக் கோப்பாக கட்டிவைத்த மண்டபத்திலிருந்து இராமானுசர் கோயில் நிர்வாஹத்தினை மேற்பார்வை பார்த்து வந்தார்.

84.1. இவ்வாறு மரக்கோப்பாயிருந்த மண்டபம் கலா பத்தின்போது தீக்கிரையாக்கப்பட்டன. வழியடிமைநிலையிட்ட உத்தமநம்பி இந்த இடத்தில் மரக்கோப்பான மண்டபம் இருந்த தற்கான அடையாளமாக வெள்ளைக்கல்லைப் பதிப்பித்தார். இந்த இடத்திற்குத்தான் தேவராஜன்கொறடு என்று பெயர். உடையவர் எழுந்தருளியிருந்த இடத்திற்கு வடக்கே தேவப்பெருமாள் கருடவாஹனத்தில் உடையவருக்கு ஸேவை சாதித்ததைக் கல்லிலே அமைக்கப்பட்டிருப்பதைக் காணலாம். இந்த கொறடும் அதற்கு முன் அமைந்துள்ள திருமண்டபமும் திருக்காவணப் பத்தியும் [நடைபாதையும்] இந்த உத்தமநம்பி கைங்கர்யம்.

*(கீழைப்படி வழியாகச் சந்தன மண்டபத்திற்குச் செல்பவர்கள் அந்த இடத்திலே ஒரு வெள்ளைப் பளிங்குக்கல் பதித்திருப்பதைக் காணலாம். இந்த இடத்திலிருந்துதான் இராமானுசர் கோயில் நிர்வாகத்தினை மேற்பார்வையிட்டு வந்தார். திருவிருத்தம்-99ஆம் பாட்டு வியாக்யானத்தில்* ***"பெருமாள் அமுதுசெய்யும் போது இன்னதனை கறியமுதும் நெய்யமுதுமென்று கடக்கிட்டு***

## பெரியசக்ரராயர் கைங்கர்யம்

*85, **பெரிய சக்ரராயர் கைங்கர்யம்:-** முன் ஶகாப்₃த₃ம் ஆயிரத்து முந்நூற்று முப்பத்தேழில் மந்மத₂வருஷத்தில் முன் பெரிய திருமண்டபத்திலே சோழ ப்ரதிஷ்டை₂யான தாம்ர ப்ரதிமை க₃ருட₃ன், கலஹத்திலே பி₄ந்நமாகையாலே, ஆத்தஶகலங்களாலே அழகியமணவாளப்பெருமாள் திரு மண்டபத்தில் ஸந்நிதி₄ க₃ருட₃னை ஏறியருளப்பண்ணி ப்ரதிஷ்டி₂ப்பித்தது.*

5."மந்மத₂வர்ஷே ஜ்யேஷ்ட்டே₂ ரவிவாரே ரேவதீதாரே |
ஸ்ரீசக்ரராயவிபு₄நா ஸ்ரீமாந் க₃ருட₃: ப்ரதிஷ்ட்டி₂தோ பூ₄த்யை ||"

*என்று த₄ர்மவர்மாவின் திருமதிளிலே லிகி₂தமும் பண்ணுவித்து,*

---

*அவைதன்னை அமுது செய்வதற்கு முன்னேயும் எனக்குக் காட்டி அமுது செய்தாலுமெனக்குக்காட்டிக் கொடுபோங் கோள் என்றாராய், அவர்களுந் திருவுள்ளத்திலோடுகிற தறியாதே அப்படி செய்து கொடு போந்தார்களாய்," என்று காணப்படுகிறது. இன்றைக்கும் பெரியபெருமாளுக்கு ஒவ்வொரு சந்தியிலும் கீழைப்படி வழியாகத்தான் அமுதுபடிகள் எடுத்துச் செல்லப்படுகின்றன.)*

85. சக ஆண்டு 1337 *(கி.பி.1415)* மன்மத வருஷத்தில் முன்பு பெரிய திருமண்டபத்தில் *(கருட மண்டபத்தில்)* சோழன் பிரதிஷ்டையான செப்பினாலான கருடன் முகம்மதியர் படையெடுப்பிலே பின்னமானபடியாலே, அதன் சகலங்களாலே அழகியமணவாளன் திருமண்டபத்திலே ஸந்நிதி கருடனை ஏறியருளப்பண்ணினார்.

*மந்மதவர்ஷே ஜ்யேஷ்ட்டே ரவிவாரே ரேவதீதாரே |*
*ஸ்ரீசக்ரராயவிபுநா ஸ்ரீமாந் கருட: ப்திஷ்ட்டிதோ பூத்யை ||*

பூர்வம் சோழ ப்ரதிஷ்டி₂தையான சக்ரவர்த்தித் திருமகனையும் ஜீர்ணோத்₃த₄ாரணம் பண்ணுவித்து, அந்த ஸந்நிதி₄யிலே சூடிக்கொடுத்த நாய்ச்சியாரையும் ப்ரதிஷ்டி₂ப்பித்து, அந்த ஸந்நிதி₄க்குத் திருமடைப்பள்ளியும் கட்டுவித்தார். அந்த மந்மத₂வருஷம் தை மாஸத்தில் புநர்வஸு நக்ஷத்திரத்திலே **பூ₄பதி உடையார்** திருநாள் நடத்தி, பெருமாளுக்குத்

---

என்று தர்மவர்மா திருவீதியில் இந்த விருத்தாந்தம் சிலாலிகிதம் பண்ணப்பட்டது.

85.1. முன்பொரு காலத்தில் சோழ மன்னன் ஒருவனால் பிரதிஷ்டை செய்யப்பெற்ற சக்ரவர்த்தித் திருமகன் ஸந்நிதியை ஜீர்ணோத்தாரணம் பண்ணி வைத்து, அதிலே சூடிக் கொடுத்த நாய்ச்சியாரையும் *(உள்ளாண்டாளான உத்ஸவ விக்ரஹத்தை)* ப்ரதிஷ்டிப்பித்து அந்த ஸந்நிதிக்கு திருமடைப் பள்ளியும் கட்டி வைத்தார் சக்ரராயர்.

*(வெளியாண்டாள் ஸந்நிதியிலிருந்து ஒரு கலஹத்தில் உள்ளே எழுந்தருளப்பண்ணப்பட்ட ஆண்டாள் உத்ஸவ விக்ரஹம் இவர் காலத்தில் பிரதிஷ்டையாகி உள்ளாண்டாள் ஸந்நிதி - என்று அழைக்கப்பட்டுவந்தது. முதலில் ஏற்பட்ட சக்ரவர்த்தித் திருமகன் - மூலவர் - பின்னால் உள்ளபடியே இருக்க, உத்ஸவ விக்ரஹங் களைத் தென்புறம் எழுந்தருளப்பண்ணி ஆண்டாள் சக்ரவர்த்தித் திருமகனுக்கு முன்னால் எழுந்தருளப் பண்ணப்பட்டிருக்கிறாள். திருவரங்கத்தில் ஆண்டாள் மூலவரும், உத்ஸவரும் வீற்றிருந்த திருக்கோலத்தில் எழுந்தருளியுள்ளார்கள். நம்பெருமாளுடைய அஷ்டமஹிஷிகளும் வீற்றிருந்த திருக்கோலத்தில் சேவை ஸாதிப்பது இந்த திவ்யதேசத்தின் சிறப்புகளில் ஒன்றாகும்.)*

85.2. மந்மத வருஷத்திலேயே தை மாதம் புனர்வஸு நக்ஷத்ரத்தில் திருத்தேருடன்கூடிய பூபதி உடையார் திருநாளை

திருத்தேர் நாளும் நடப்பித்து, அந்தத் திருநாளுக்குப் பலி வெட்டாக தொடையூரும் நடப்பித்தான். அந்த சக்ரராயர், சேனைவென்றான் திருமண்டபத்துக்கு மேற்கு துலாபுருஷ மண்டபத்திலே, பூர்வம் கூரநாராயண ஜீயர் ப்ரதிஷ்டி₂ப்பித்த ஸ்ரீவராஹநயினார் துலுக்கர் கலஹத்திலே பி₄ந்நமாகையில், அவரையும் ப்ரதிஷ்டி₂ப்பித்து; அந்தத் திருச்சுற்றில் ஆக்₃நேய ப₄ாகத்₃திலே பெரியதிருமடைப்பள்ளிக்கு வடக்கே **தாடுசம் பின்னை** திருப்பணியான சின்ன திருமடைப்பள்ளிக்கு

---

முன்போல நடத்தி அந்தத் திருநாளுக்கு பொலியூட்டாக தொடையூரைக் கொடுப்பித்தார் சக்ரராயர். *(ஸ்ரீரங்கம் கல்வெட்டு எண்.306,* A.R.E. No.59 of 1938-39 *இரண்டாம் திருச்சுற்றின் தெற்குப் பகுதியில் அமைந்துள்ளது.)*

*(தொடையூர் கொள்ளிடத்தின் வடகரையில் உள்ளது. பங்குனி ப்ரஹ்மோத்ஸவத்தின்போது ஜீயர்புரம் எழுந்தருளும் நம் பெருமாள் கொள்ளிடக்கரை ஏறி தொடையூரில் உபயம் கண்டருளி சிலையாத்தி எழுந்தருளுவது வழக்கமாயிருந்தது. ஆனால், தற்போது தொடையூருக்கு எழுந்தருளுவதில்லை.)*

82.3. சேரனைவென்றான் திருமண்டபத்தின் மேற்குப் பகுதியில் துலாபுருஷ மண்டபத்திலே *(பவித்ரோத்ஸவ மண்டபத்தில்)* பூர்வம் கூரநாராயண ஜீயர் ப்ரதிஷ்டிப்பித்த வராஹ நாயனார் முகம்மதியர் படையெடுப்பின் போது சேதப்படுத்தப் பட்டதால் மீண்டும் அந்த இடத்தில் வராஹநாயனாரை ப்ரதிஷ்டிப் பித்தார் சக்ரராயர்.

82.4. குலசேகரன் திருச்சுற்றில் ஆக்நேய பாகத்திலே *(அக்னி மூலையில்)* பெரிய திருமடைப்பள்ளிக்கு *(இப்போதைய சுக்ரவாரப்போடு (பொட்டு), சக்ரராயரால் நிர்மாணிக்கப்பெற்ற திருமடைப்பள்ளி. இதுதான் ஆதி மடைப்பள்ளி)* வடக்கேயுள்ள

முன்னில் முகப்புங் கட்டுவித்து, என்னை வாழ்விக்கும் நாய்ச்சியாரான அரவிந்தநாயகியாரையும் ஏறியருளப் பண்ணுவித்து, அந்த(ந)ாதியெம்பெருமான் கொறட்டுக்கு மேல்புறமும் கட்டுவித்து, இந்தக் கொறட்டில் வடக்குத் தூணின்மேல் ஹநுமாரையும் ஏறியருளப் பண்ணுவித்து, சேனைவென்றான் திருச்சுற்றுத் திருநடைமாளிகை மேல்புறம் சேதமாகையில் வடக்கடையத் தூணும் நிறுத்திப் பாவுகல் பொகட்டுக் கட்டிவைத்ததும்; ஆலிநாடன் திருக்கோபுரமான

---

சின்ன திருமடைப்பள்ளிக்கு *(இந்தச் சின்ன திருமடைப்பள்ளி தாடுசம்பிள்ளை என்பவரால் புனர்நிர்மாணம் செய்யப்பட்டது)* பெரிய திருமடைப்பள்ளிக்கு முன்னில் முகப்பும் *(ஒற்றைக் கருடன் எழுந்தருளியுள்ள மண்டபம்)* கட்டுவித்து அதில் அரவிந்த நாய்ச்சியாரையும் ஏறியருளப் பண்ணுவித்தார் சக்ரராயர்.

82.5. அந்நாதி எம்பெருமான் *(மூலத்தில் அந்நாதி எம்பெருமான் என்பதற்குப் பதில் அந்தாதி எம்பெருமான் என்று தவறாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. இந்தச் சொல் அந்நமூர்த்தியைக் குறிக்கும்.)* கொறட்டுக்கு மேல்புறம் *(த்வஜாரோஹண மண்டபமுள்ள இடம்)* கட்டுவித்ததும் சக்ரராயரே. *ஸ்ரீரங்கம் கல்வெட்டு எண்.313,* A.R.No.82 of 1937-38 *ஆர்யபட்டாள் வாசல் நுழைவாயிலின் வலதுபுறம் பொறிக்கப்பட்டுள்ள தேதி அறிய இயலாத கல்வெட்டின்படி கீழ்க்கண்ட திருப்பணிகள் சக்ரராயரால் மேற்கொள்ளப்பட்டதாகக் காணப்படுகிறது. இந்தக் கல்வெட்டு, கவிதை நடையில் அமைந்துள்ளது.*

"**உத்தமராயனுலகேழுமதிக்கவே** *(உத்தமராயன் உலகேழும் மதிக்கவே)* **வைத்த பெரிய திருமண்டபத்தில் இத்தலஞ்சூழ் திக்கெலாங்காணத்** *(திக்கு எலாம் காண)* **திருக்காவணப்பத்தி சக்ரராயன் சமைத்தான். பிடியுங் களிறும் பெரும் புலியுனீங்கா வடவி கடிந்து வெளியாக்கிக்** *(பிடியும் களிறும் பெரும் புலியும் நீங்கா அடவி கடிந்து வெளியாக்கி*

ஆரியபட்டாள் வாசலும் துலுக்காவணத்திலே அக்நி பாதை, யால் சேதமாகையாலே, நிலைகால் முகவணை அருகணை கீழ்ப்படி மேல்படி உட்படக் கட்டினதும் பெரிய சகரராயர்.

---

*- அதாவது கிழக்கே காட்டழகிய சிங்கர் ஸந்நிதியைச் சுற்றி பெரும் காடு மண்டியிருந்தது. அந்தக் காட்டிலே ஆண் யானைகளும் பெண் யானைகளும், புலிகளும் தஞ்சமடைந்திருந்தன. அவற்றை வெளியேற்றி காடு திருத்தி நாடாக்கி)* **குடியேற்றிச் சிங்கருறை கோயில் சிறக்கும்படி சமைத்தானங்கைமுகில் சக்ரராயன்** *(காட்டழகியசிங்கர் கோயிலைச் சுற்றிய மாடவீதிகளில் மக்களை குடியேறச் செய்து, காட்டழகியசிங்கர் கோயில் மீண்டும் பொலிவுறும்படி செய்தார் சக்ரராயர்)* **பொன்னாடர் யொற்றும் புகழரங்கர் கோயில் தனி,** *(நாட்டார் போற்றும் புகழோங்கிய திருவரங்கம் பெரியகோயிலில்)* **லன்னாதியெம்பெருமா னம்முகப்பில் முன்னாக, மண்டபமும் வைப்பித்து மாரு தியைத் தாபித்தா, னண்டமுகில் சக்ரராயன்** *(அந்நாதி எம்பெருமானுக்கு முகப்பில் முன்னாக மண்டபத்தை ஸ்தாபித்து, த்வஜாரோஹண மண்டபத்தில் மாருதியை ப்ரதிஷ்டை செய்தும், திருப்பணிகள் பலவற்றையும் செய்தார் சக்ரராயர்.)* **தென்னரங்கர் கோயிற் றிருமடைப்பள்ளிதனில், மன்னு திருவாசலில் முன் மண்டபங் கண்டன, னருளாற் பொன்னார் கமல மலற் பூந்திருவைத் தாபித் தானன்னாதி சக்ரராயன்"** *(பெரிய திருமடைப் பள்ளியில் பொன்னார் கமலமலர் பூந்திருவாகிய அரவிந்த நாய்ச்சியாரை ப்ரதிஷ்டை செய்தான் சக்ரராயன்.)*


அந்நமூர்த்தி

*(முன்பு இருந்த பின்னமான அந்நமூர்த்தி நெய்க் கிணற்றின் பக்கலில் இப்போதும் ஒதுங்கிக் கிடக்கிறார்.)*

82.5.1. இந்த *(துவஜாரோஹண மண்டபமுள்ள)* கொறட்டில் வடக்குத் தூணில் ஹநுமானை சக்ரராயர் ஏறியருளப் பண்ணினார். சேரனைவென்றான் திருச்சுற்று திருநடைமாளிகை மேல்புறம் சேதமானபடியால் வடக்கடையத் தூணும் நிறுத்தி பாவுகல் *(கீழே பரப்பப்படும் கற்களுக்கு பாவுகல் என்று பெயர்)* போட்டு கட்டி வைத்தார். *(த்வஜஸ்தம்பமுள்ள இடத்துக்கே அணியரங்கன் திருமுற்றமென்று என்று பெயர். மண்டபம் போட்டு மறைத்தாலும் முற்றமென்ற பெயர் மறையாது).*

82.5.2. ஆலிநாடான் திருவீதியிலுள்ள திருக்கோபுரமான ஆர்யபட்ட வாசலும் முகம்மதியர்கள் படையெடுப்பின் போது ஏற்பட்ட தீ விபத்தால் சேதமானதால், அதில் நிலைகால் முகவணை அருகணை கீழ்ப்படி மேல்ப்படி உள்பட சக்ரராயர் கட்டி வைத்தார்.

*(ஸ்ரீரங்கம் கல்வெட்டு எண்.324* A.R.No.50 of 1938-39 *ராஜமகேந்திரன் திருச்சுற்றின் தெற்குப் பகுதியில் அமைந்துள்ளது. இந்தக் கல்வெட்டின்படி சக்ரராயருடைய கைங்கர்யங்களாகக் கீழ்க்கண்டவை குறிப்பிடப்பட்டுள்ளன.*

*1. ஆயிரம் கழஞ்சு பொன்னால் செய்யப்பட்ட தட்டு - ஸமர்ப்பிக்கப்பட்ட தேதி 17.4.1424.*

*2. தெய்வப்புள்ளூர்வார் (கருடன்) ப்ரதிஷ்டை - செய்யப்பட்ட தேதி 30.12.1425.*

*3. ஆயிரம் கழஞ்சு தங்கம் கொண்டு ஸ்ரீரங்கநாய்ச்சியாருக்கு சிம்மாசனம் - ஸமர்ப்பிக்கப்பட்ட தேதி 19.7.1427.*

*4. ஆயிரம் கழஞ்சு பொன் கொண்டு தங்கத் திருவிளக்கு - ஸமர்ப்பிக்கப்பட்ட தேதி 15.10.1427.*

## மூவெந்திறையார் தீராவினைதீர்த்தார், திருவேங்கடமுடையான் கைங்கர்யம்

86. பின்பு, இந்தத் திருக்கோபுரம் பழகிச்சரிவாகை யில், சரிவானது எடுத்துக்கட்டி, முறிந்த பாதத்தடியும் போடுவித்து, கோபுர வண்ணமும் பதிசித்ரமும் பண்ணி, தேவர்களையும் ஏறியருளப்பண்ணி, இவ்விடத்தில் திருக் கோபுரத்தில் சேதமான முகவணை அருகணை பாவுகல்லும் நலமாகப் போடுவித்து, கோபுரவண்ணமும் தேவர்களையும் உண்டாக்கி, ப்ரதிஷ்டை பண்ணுவித்து; தர்மவர்மாவின்

---

*5. ஆயிரம் கழஞ்சு பொன்னால் செய்யப்பட்ட தங்கக் கலசம் - ஸமர்ப்பிக்கப்பட்ட தேதி 3.11.1428.*

*6. பெரியபெருமாளுக்கு முத்தங்கி - ஸமர்ப்பிக்கப்பட்ட தேதி 24.1.1430.*

*7. ஆயிரங் கழஞ்சு பொன்கொண்டு வட்டில்களும் திருப்படிக்கமும் - ஸமர்ப்பிக்கப்பட்ட தேதி 24.2.1430.*

*ஸ்ரீரங்கம் கல்வெட்டு எண்.333,* A.R.No.83 of 1937-38 *ஆர்யபட்டாள் வாசல் நுழைவாயிலின் வலதுபுறம் பொறிக்கப் பட்டுள்ளது. இந்தக் கல்வெட்டின்படி, சக ஆண்டு 1360 (கி.பி.1439)ஆம் ஆண்டு சக்ரராயர் வடதிருக்காவிரியின் கரையில் தசாவதார ஸந்நிதி யில், தசாவதார விக்ரஹங்களை ப்ரதிஷ்டிப்பித்தார் என்று அறியப்படுகிறது. முழுதும் க்ரந்தலிபியில் அமைந்துள்ள இந்தக் கல்வெட்டானது 1.3.1439 அன்று பொறிக்கப்பட்டுள்ளது.*

86. ஆர்யபட்டாள் கோபுரம் தீ விபத்தினால் பாதிக்கப் பட்டதாலும், சேதமடைந்ததாலும் அந்தக் கோபுரத்தை மீண்டும் புதுப்பித்து, வண்ணப்பூச்சு கொடுத்து, அதிலிருந்த விமான தேவதைகளின் விக்ரஹங்களை மீண்டும் புதுப்பித்தது

*திருவீதியில் திருநடைமாளிகையும், அழகியமணவாளன் திருமண்டபமும், ராஜமஹேந்த்₃ரன் திருவீதியில் திருநடை மாளிகை, யாக₃சாலை, நலந்திகழ் நாராயணஜீயர் மண்டபம் முதலானதும், சேனைவென்றான் திருமண்டபமும், திரு மடைப்பள்ளியும் முதலானதும்; ஆலிநாடன் திருமதிளுக்கு உட்பட்டதெல்லாம் அரைகுறை தீர்த்துச் சாந்தும் பண்ணு வித்து, யாக₃சாலையருகணி யெடுத்துக் கட்டுவித்ததும்; மூவெந்திறையார் தீராவினை தீர்த்தாரும், இவர் தம்பி திருவேங்கடமுடையானும் பண்ணின கைங்கர்யம்.*

## திருமலைநாதவுத்தமநம்பி கைங்கர்யம்

*87. ஶகாப்₃த₃ம் ஆயிரத்து முந்நூற்றறுபத்தாறில் (சகம்-1366) ரக்தாக்ஷி வருஷம் (கி.பி.1444) முதல்,*

---

மூவேந்திறையார் தீராவினைதீர்த்தார், அவருடைய சகோதரனான திருவேங்கடமுடையான் ஆகிய இருவருடைய கைங்கர்யம். மேலும் இந்த இருவருடைய கைங்கர்யங்களாகக் கீழ்க்கண்டவையும் குறிப்பிடப்பட்டுள்ளன.

86.1. ராஜமகேந்திரன் திருச்சுற்றில் நடைபாதை, யாகசாலை, நலந்திகழ் நாராயணஜீயர் மண்டபம் *(தற்போதைய சுக்ரவாரப் பண்டாரி மண்டபம்)*, தர்மவர்மா திருச்சுற்றில் அழகிய மணவாளன் கர்பக்ருஹத்தைச் சுற்றிய நடைபாதை, சே[ர]னை வென்றான் திருமண்டபம், திருமடைப்பள்ளி மற்றும் ஆலிநாடன் திருச்சுற்றிற்கு உட்பட்ட இடங்களில் பழுதுபார்த்ததும், யாக சாலை மண்டபத்தின் கதவுகளில் பொறுத்தப்பட்டிருந்த திட்டி வாசலைச் சரிசெய்ததாகவும் கோயிலொழுகு குறிப்பிடுகிறது.

87. திருமலைநாத உத்தமநம்பி சக ஆண்டு 1366 [கி.பி.1444] ரக்தாக்ஷி வருஷம் தொடங்கி சக ஆண்டு 1372

*திருமலைநாத உத்தமநம்பி, விஜய நகரத்துக்குப்போய், தண்டுபண்ணி, ப்ரௌட₄தே₃வராயர் மல்லிகார்ஜுநராயர் முதலானபேர்கள் கையிலும் இருபத்திரண்டு க்₃ராமமும் வாங்கிக்கொண்டு, ப்ரஜோத் பத்தி வருஷத்திலே (இடைப்பட்ட ஆண்டுகள் ஆறு) கோயிலுக்கு வந்து, பெருமாள்தேவன் மண்டபத்துக் (ஆயிரங்கால்மண்டபம்) கொடுங்கையும்*

---

[கி.பி.1450] ப்ரஜோத்பத்தி வருஷம் ஈறாக ஆறு வருடங்களில் பலமுறை கஜபதி தேவ மஹாராயரை நேரில் கண்டு விஜயநகர சிற்றரசர்கள் பலரிடம் தானமாக வசூலித்த பொன் *(தண்டு பண்ணின பொன்)* 50,000 வராஹன் கொண்டு திருவரங்கத்தில் ஸ்ரீரங்கஸ்ரீயை வளர்த்துவந்தார். இவர் பெரியபெருமாளுக்கு திருவிடையாட்ட கிராமங்கள் வாங்கவேண்டுமென்று அதற்கு சேர்த்த கிராமங்கள் 106. இவர் காலம் முடிய சேர்ந்த கிராமங்கள் மொத்தம் 282. அதாவது,

| | |
|---|---|
| 79-வது உத்தமநம்பி முதலில் வாங்கினது | 62 |
| பிறகு வாங்கினது | 13 |
| 80-வது உத்தமநம்பி வாங்கினது | 101 |
| 82-வது உத்தமநம்பி வாங்கினது | 106 |
| மொத்தம் | **282** |

இந்த எல்லா கிராமங்களுக்கும் உத்தநம்பிகள், ராயரைக் கொண்டு ஸர்வமாந்யமாக ஆக்கிக்கொண்டார். *(ஸர்வமாந்ய மாவது எவ்வித வரிவாய்தாவும் இல்லாத இறையிலி).*

**<u>இந்த உத்தமநம்பி பண்ணின கைங்கரியத்தின் விபரம்:</u>**

87.1. பெருமாள் தேவன் மண்டபத்துக்குக் கொடுங்கை வைப்பித்தார். *(பெருமாள் தேவன் மண்டபமாவது ஆயிரங்கால்*

வைப்பித்து, திருக்கொட்டாரத்துக்குத் தென்வடக்கான கீழ்த் திருமதில் பழகி விழுந்து போகையில் அஸ்திப₄ாரத்தளவும் பறிப்பித்து, கல்படை செங்கல்படையுங் கட்டிவைத்து, முதல்கட்டுக்குத் தளவரிசையும் கட்டி, பெரிய திருமண்ட பத்துக்குக் கிழக்கே நூற்றுக்கால் மண்டபமும் (தற்போதைய கிளி மண்டபம்) கட்டிவைத்து, அதிலே ஜ்யேஷ்ட₂ாபி₄ஷே கத்தில் ஸஹஸ்ரகலஶாபி₄ஷேகம் பண்ணுவித்து, திருச்சிராப்

---

மண்டபம். அதற்கு இவர் தென்புறத்திலும், மேற்குப் புறத்திலும் கொடுங்கை வைத்தார். (கொடுங்கை - வீடு, மண்டபம் முதலிய வற்றின் வெளிப்புறம் நீண்டு வளைந்துள்ள கட்டமைப்பு.)

87.2. திருக்கொட்டாரத்துக்குத் தென்வடக்கான கீழ்த் திருமதிள் *(கொட்டார ப்ரதக்ஷிணத்தின் மேல்புறம் வடகோடிவரை ஓடுகிற சிறு மதிள்)* பழகி விழுந்து போகையால் அஸ்திவாரம் வரை பறிப்பித்து கருங்கல்படை, செங்கல்படை கொண்டு கட்டுவித்து முதல்கட்டுக்கு *(நெல் உலர்த்தும் திறந்த வெளிக்கு)* தளவரிசையும் கட்டினார்.

87.3. பெரிய திருமண்டபத்துக்குக் கிழக்கே நூற்றுக்கால் மண்டபம் கட்டிவைத்து அதிலே ஜ்யேஷ்டாபிஷேகத்தில் ஸஹஸ்ரகலசாபிஷேகமும் பண்ணி வைத்தார்.

*[பெரியதிருமண்டபத்திற்கு அழகியமணவாளன் திருமண்டபம், சந்தனமண்டபம் என்றும் பெயர்கள் வழங்கிவருகின்றன. ஆலி நாடன் திருச்சுற்றில் உள்ள கருடமண்டபத்துக்குக் கிழக்கில் ஸ்ரீபண்டாரமும், ராஜமஹேந்திரன் திருச்சுற்றில் உள்ள அழகியமணவாளன் திருமண்டபத்துக்குக் (சந்தனமண்டபத்திற்கு) கிழக்கில் கிளி மண்டபமும் நூற்றுக்கால் மண்டபங்களாகும். ஸ்ரீபண்டாரம் 81வது உத்தமநம்பி களாலே கட்டின தாகையால் இவர் அதைப்பூர்த்தி செய்தவராவர்.*

*ஜ்யேஷ்டாபிஷேகத்தன்று ஸஹஸ்ரகலசாபிஷேகமும் சேர்ந்ததால் இன்றைக்கும் "ஆயிரக்குடத் திருமஞ்சனம்" என்று மக்கள் வழக்கத்தில் கொண்டுள்ளார்கள். இப்போது விமாந*

*பள்ளி சாவடிக்கு ராயமுத்₃ரை மநுஷ்யராகக் குழித்தண்டல்* ***கம்பராஜா*** *வருகையில், "இந்த சீமைகளை விடவேணும்" என்று திருமலைராஜா சொல்லுகையில், இவருக்கும் அவருக்கும் விரோத₄மாய், ஶகாப்₃த₃ம் ஆயிரத்து முந்நூற் றெண்பதில் (கி.பி.1458) ப்ரமாதி₂வருஷம் புரட்டாசி மாஸத்திலே தென்கரை வடகரை சபையார் நாட்டார் அனைவரும் குடிகளும் புறப்பட்டு, சீமையைப் பாழ்பண்ணி, பன்னிரண்டு வருஷம் ஆயிரக்கால் மண்டபத்திலும் தே₃ஶாந் தரத்திலும் குடியிருந்து, பின்பு ஶகாப்₃த₃ம் ஆயிரத்து*

---

*ப்ரதக்ஷிணத்தில் பரம ஏகாந்தமாய் நூற்றுக்குக் குறைந்த குடங்களால் நடக்கும் ஜ்யேஷ்டாபிஷேகம் முன்பு கிளிமண்டபத்தில் பஹிரங்கமாய் ஆயிரம் குடம் திருமஞ்சனமாகவே நடந்து வந்தது. பின்பொரு கால கட்டத்தில் திருவுண்ணாழி திருச்சுற்றிற்கு மாற்றப்பட்டுள்ளது.*]

87.4. திருச்சிராப்பள்ளி சாவடிக்கு ராயமுத்ரையுடன் *(வரிப்பணத்தை வசூலிப்பதற்காக அரசனுடைய ஆணைபெற்று வந்த)* குழித்தண்டல் கம்பயராஜா வருகையில் "இந்த சீமையை விடவேணும்" - என்று திருமலைராஜா சொல்ல, இருவருக்கும் விரோதமுண்டாகி, சகாப்தம் 1380 *(கி.பி.1458)*-இல் பிரமாதி வருஷம் புரட்டாசி மாஸத்திலே தென்கரை, வடகரை சபையார் *(பிரதிநிதிகள்)*, நாட்டார் *(ஜனங்கள்)* அனைவரும் புறப்பட்டு *(வெளியேறி)*, சீமையைப் பாழ்பண்ணி, பன்னிரண்டு வருஷம் ஆயிரக்கால் மண்டபத்திலும் தேசாந்தரத்திலும் குடியிருந்து, பின்பு சகாப்தம் 1392 *(கி.பி.1470)*-இல் கர வருஷத்தில் திருச்சிராப்பள்ளி சீமை திருமலை ராஜாவின் சீமையாகையில், தென்கரையார் வடகரையார் அனைவரும் திருமலைராஜாவைக் கண்டு தங்கள் தங்கள் கிராமத்திற்குப் போனபின்பு, இந்த மண்டபத்துக்கு *(ஆயிரக்கால் மண்டபத்துக்கு)* மேல்புறத்து ஒழுங்கு மண்டபக் கொறடு

*முந்நூற்றுத் தொண்ணூற்றிரண்டில் (கி.பி.1470) க₂ரவருஷத் திலே, திருச்சிராப்பள்ளி சீமை தண்டல் சீர்மையும் திருமலை ராஜாவின் சீர்மையாகையில்; தென்கரை வடகரையாரனை வரும் திருமலைராஜாவைக் கண்டு, தங்கள் தங்கள் க்₃ராமத் திலே போனபின்பு, இந்த மண்டபத்துக்கு மேல்புறத்து ஒழுங்கு மண்டபக் கொறடுக்கொக்கத் தூர்ந்து போகையில், அந்த மண்ணுமெடுப்பித்து, கோபுரத்துக்கு வடபுறம் சார முற்றும் மண்ணுமெடுப்பித்துப் புறம் போடுவித்து, ஶாந்திஹோமம் பண்ணி, ஸங்க்ரமத் திருநாளுக்கும்*

---

*(இப்போதுள்ள தோட்டம்)* தூர்ந்து போகையில் அந்த மண்ணை எடுப்பித்து, கோபுரத்துக்கு *(வெள்ளை கோபுரத்துக்கு)* வடபுறம் சாரம் முற்றும் *(சாரம் வரையில் அல்லது சாராமாயிருந்த மண்மேடு)* மண்ணுமெடுப்பித்து புறம்பே போடுவித்து சாந்தி ஹோமம் பண்ணிவைத்தார்.

87.5. ஸங்க்ரமத் திருநாளுக்கும் *(ஸங்க்ராந்திக்கும்)*, சித்திரைத் திருநாளில் எட்டாம் திருநாள் எல்லைக்கரை மண்டபம் போவதற்கு முன்பும், மேல் புறத்தில் ஒழுங்கை மேல்படி வழியாக யானை பூண்ட புறம்பில் கொறட்டிலே மேற்குப்பார்க்க பெருமாளை ஏறியருளப்பண்ணிவைத்தார். *(மூன்று ப்ரஹ்மோத்ஸவங்களிலும் 8-ஆம் திருநாள் அன்று எல்லைக்கரை எழுந்தருள்வது வழக்கம். தற்போது பங்குனி ப்ரஹ்மோத்ஸவத்தின் போது மட்டுமே கொள்ளிடக் கரையில் அமைந்துள்ள எல்லைக்கரை மண்டபத்திற்கு எழுந்தருளுகிறார். மற்றைய ப்ரஹ்மோத்ஸவங்களில் ரங்கவிலாஸ மண்டபமே எல்லைக்கரை மண்டபமாக கொள்ளப்படுகிறது. கனு உத்ஸவத்தின் போது பாரிவேட்டைக்கு நம்பெருமாள் தெற்கு கோபுரம் வழியாக எழுந்தருளி கலியுகராமன் திருவீதி கோபுரம் வரையில் சென்று விட்டு ஆஸ்தானம் எழுந்தருள்கிறார். திருப்பாவை சாற்றுமுறை (சங்கராந்தித் திருநாள்) அன்று ஆயிரங்கால் மண்டபத்தின் வடக்குப் புறத்தில் ஸ்ரீரங்கநாய்ச்சியார் ஸந்நிதிக்கு எதிரில் யானைபூண்ட புறம்பில், அதாவது ஸ்ரீரங்கநாய்ச்சியார் ஸந்நிதியிலிருந்து ப்ரவே*

சித்திரைத் திருநாளிலே எட்டாந்திருநாள் எல்லைக்கு மேல் புறத்திலொழுங்கை மேற்படிவழியாக ஆனைபூண்ட புறம்பில் கொறட்டிலே மேற்குப் பார்க்கப் பெருமாளேறி யருளி, இதுக்கு மேல்புறத்தில் சாமந்தனார் தோப்பிலே *(ஆயிரங்கால் மண்டபத்திற்கு மேற்கே அமைந்திருந்தது சாமந்தனார் தோப்பு. இந்த தோப்பில்தான் தற்போதைய நிகமாந்த மஹாதேசிகன் ஸந்நிதி அமைந்துள்ளது. இந்த இடத்திலே பெரியபெருமாள் அமுது செய்தருளுவதற்கான கீரை பயிரிடுவதற்கான தோட்டம் இருந்ததாக அறியப்படுகிறது.)* திருக்காவணமும் இடுவித்து, சிறப்புக் கட்டளையும் நடத்தினது **திருமலைநாத, உத்தமநம்பி.**

---

*சிக்கையில் ஆயிரங்கால் மண்டபத்தின் மேற்குப்பகுதியில் இரு புறத்திலும் யானைகள் உள்ள உள்மண்டபம். இந்த உத்தமநம்பி காலத்தில் சங்கராந்தித் திருநாளன்று நம்பெருமாள் யானைபூண்ட மண்டபப்புறம்பில் மேற்குப் பார்க்க எழுந்தருளியிருந்தார் என்று பெறப்படுகிறது. தற்போது இது நடைமுறையில் இல்லை. ஆயிரங் கால் மண்டபத்தின் வடகோடியில் சங்கராந்தி மண்டபத்தில் தெற்கு நோக்கி நம்பெருமாள் உபயநாய்ச்சிமார்களோடு எழுந்தருளி திருப் பாவை முப்பது பாட்டுகளையும் அரையர் இசையில் கேட்டருளு கிறார். இத்தகைய மாற்றம் பிற்காலத்தில் ஏற்பட்டிருக்ககூடும்.)*

87.6. இதுக்கு மேல்புறத்தில் சாமந்தனார் தோப்பிலே *(தேசிகன் ஸந்நிதிக்குப் பின்புறமுள்ள கீரைத்தோட்டத்திலே)* திருக் காவணமும் *(தற்போதைய கருத்துரை மண்டபமும்)* இடுவித்து சிறப்புக்கட்டளையும் நடத்தினார்.

87.7. புந்நாக தீர்த்தக்கரை லக்ஷ்மீநாராயணப் பெருமாள் கோயிலையும் ஜீர்ணோத்தாரணம் பண்ணினார். இவர் லக்ஷ்மீ காவ்யம் அருளிச்செய்து 37 வருஷம் எழுந்தருளியிருந்தார். *(புந்நாக தீர்த்தம் - மேலூர் வ்ருக்ஷ மண்டபம்.)*

87.8. நம்பெருமாள் எழுந்தருளுவதற்காக தந்தத்தாலான

*இதுவும், புந்நாக₃ தீர்த்த₂க்கரை லக்ஷ்மீநாராயணப் பெருமாள் கோயிலையும் (ஐந்துகுழி மூன்று வாசலில் மேற்குப் பக்கத்தில் வடக்குநோக்கி அமைந்துள்ளது இந்த ஸந்நிதி. கூரநாராயணஜீயர் இந்த ஸந்நிதியை ப்ரதிஷ்டை செய்தருளினார்) ஜீர்ணோத்₃த₄ாரணம் பண்ணி, பெருமாளுக்கு த₃ந்தசப்பரமும் பண்ணுவித்து, ஒரு பங்குனித் திருநாளில் மூன்றாந்திருநாள் குதிரை நம்பிரான் மேலே ஏறியருளி, ராத்ரி கோயிலுக்கெழுந்தருளும்போது ஆகஸ்மிகமாக மழை வருகையில் இந்த உத்தமநம்பி வாசலிலே எழுந்தருளியிருக்க, உத்தநம்பியும் தம்முடைய ஜநங்களுடனே பெருமாளுக்கு ஸர்வஸ்வத்தையும் ஸமர்ப்பித்து, அதுமுதலாக மூன்றாந்திருநாளுக்குத் திருப்பல்லக்கிலே தானே எழுந்தருளும்படி திட்டம் பண்ணுகையில், இதுவரைக்கும் அந்தப்படியே நடந்து வருகிறது.*

## க்ருஷ்ணராய உத்தமநம்பி கைங்கர்யம்

*88. அவர் தம்பி க்ருஷ்ணராய உத்தமநம்பி – ஶகாப்₃த₃ம்*

---

சப்பரத்தைப் பண்ணுவித்தார் இந்த திருமலைநாத உத்தமநம்பி. ஒரு பங்குனி ப்ரஹ்மோத்ஸவத்தின் மூன்றாம் திருநாளன்று நம்பெருமாள் குதிரைநம்பிரான் மேலே ஏறியருளி ஆஸ்தானம் திரும்புகையில் எதிர்பாராதவிதமாக மழை பொழிந்திட, அதன் நிமித்தமாக நம்பெருமாள் உத்தமநம்பி திருமாளிகையின் முன்பு எழுந்தருளியிருக்க, அவ்வாறு எழுந்தருளிய நம்பெருமாளுக்கு தம்முடைய உற்றார் உறவினருடன் ஒன்றுகூடி, தம்முடைய சொத்துக்கள் அனைத்தையும் ஸமர்ப்பித்தார். அதுமுதலாக மூன்றாம் திருநாளன்று நம்பெருமாள் ஆஸ்தானம் திரும்புகையில் திருபல்லக்கிலேயே எழுந்தருளுகிறார்.

88. சக ஆண்டு 1409–இல் *(கி.பி.1487)* ப்லவங்க வருஷத்தில் ஹமாஞ்சி திம்மப்பநாயக்கர் முதலானாரிடமிருந்து 20 கிராமங்கள்

ஆயிரத்து நானூற்றெண்பதில் *(கி.பி.1487)* பலவங்க₃ வருஷத்திலே, **எறமாஞ்சி திம்மப்பநாயக்கர்** முதலானவர் கையிலே இருபது க்₃ராமம் திருவிடையாட்டமாக த₄ாரைவாங்கி, திருக்கொட்டார முகப்புத் திருமண்டபமும், நலந்திகழ் நாராயணஜீயர் ப்ரதிஷ்டையான செங்கமல நாயகியார் எழுந்தருளியிருக்கிற திருமதிளும் பழகிச் சரிவாகையில் அதுவும் கட்டிவைத்து; இரண்டாம் நெல்லுக்கூடம் பெருச்சாளியறுத்துச் சரிந்து போகையில், உள்ளுத் தளவரிசையும் கட்டி, கல்தூணும் நிறுத்தி, உறுதியாக எடுத்துக் கட்டிவைத்தார்.

---

திருவிடையாட்டதானம் வாங்கி, திருக்கொட்டாரம் முகப்புத் திருமண்டபம் *(இப்போது கணக்கு எழுதுமிடம்)* கட்டினார்.

88.1. நலந்திகழ்நாராயணஜீயர் *(கூரநாராயண ஜீயர்)* பிரதிஷ்டையான செங்கமல நாயகியார் *(தாந்யலக்ஷ்மி)* எழுந்தருளியிருக்கிற திருமதிளும் பழகிச் சரிவாகையில் அதைக் கட்டி வைத்தார். *(பலரும் வரக்கூடிய இடமாகையால் திருவாராதனக்காரர் தவிர இதரர்கள் அணுகவொண்ணாதபடி படிக்கட்டு ஏறிப்போக வேண்டிய உயரத்தில் இவள் பிரதிஷ்டை செய்யப் பட்டிருக்கிறாள்.)*



*பழுதுபட்ட நிலையில் நெற்களஞ்சியம்*

88.2. இரண்டாம் நெற்களஞ்சியம் பெருச்சாளி அறுத்து சரிந்து போனதால் உள்ளுக்கு தளவரிசை போட்டு கல்தூணும் நிறுத்தி உறுதியாகக் கட்டிவைத்தார்.

## குடல்சாரவாளநயினார் கைங்கர்யம்

*89. அவர் தம்பி குடல்சாரவாளநயினார், ஶகாப்₃தம் ஆயிரத்து நானூற்றுப் பதின்மூன்றில் (கி.பி.1491) விரோதி₄ க்ருத் வருஷம், ஸ்ரீப₄ண்டா₃ரத்துக்கு சில க்₃ராமங்கள் விலை கொண்டு; ராஜமஹேந்த்₃ரன் திருவாசல் நிலைகால் முக வணையுட்பட்டதும் துலுக்காவணத்திலே (கி.பி.1323-ஆம் ஆண்டு ஏற்படுத்தப்பட்ட சேதம் 168 ஆண்டுகள் கழித்தும் நிவர்த்தி செய்யப்படவில்லை. அதற்கு இந்த நிகழ்ச்சி உதாரணம். உத்தமநம்பி வம்சத்தவர்களால் பலஆண்டுகள் பல மன்னர்களிடம் பொருளுதவி பெற்று திருவரங்கம் பெரியகோயிலானது இழந்த தன் தன்மையை மீண்டும் பெற்றது. இவ்வாறு இந்தக் கோயில் புனர்நிர்மாணம் பெற்றதற்கு உத்தமநம்பி வம்சத்தவர்களுடைய உழைப்பும் தியாகமும் முக்கியக்காரணங்களாகும்)* இடிவிழுந்து சேதமாகையால், இந்தத் திருவாசலடித்தட்டளவும் பறிப்பித்து, நலமாக நிலைகால்

---

89. சகாப்தம் 1413 *(கி.பி.1491)*-இல் விரோதிக்ருது வருஷத்தில் ஸ்ரீபண்டாரத்துக்கு சில கிராமங்களை விலைக்கு வாங்கினார்.

89.1. ராஜமஹேந்திரன் திருவாசல் *(நாழிகைகேட்டான் வாசல்)* நிலைகால் முகவணையுட்பட துலுக்காவணத்திலே இடிந்து விழுந்து சேதமாகையால், இந்தத் திருவாசலை அடித் தட்டளவும் பிரிப்பித்து, நலமாக நிலைகால் முகவணை உட் பட்டதும் பிராட்டிமலையிலே வெட்டித் தீர்த்து *(புதுக்கோட்டை மாவட்டத்தில் பிரான்மலைப்பகுதியில் வெட்டியெடுக்கப்பட்ட கருங்கற்கள் உறுதிபடைத்தனவாக அமைந்துள்ளனவா? என்பதைப் பரிசோதித்து அந்தக் கற்களைக் கொண்டு கட்டினார்.)* நல்லடிப் பாரமுள்ளதாகவும் உறுதியாகவும் கட்டுவித்துக் கொடுங்கையும் வைப்பித்தார்.

**முகவணை உட்பட்டதும் பிராட்டிமலையிலே வெட்டித் தீர்ந்து, கல் அடிப்பார முள்ளதும் உறுதியாகக் கட்டுவித்து, கொடுங்கையும் வைப்பித்தார்.**

---

*[கோயிலொழுகு தரும் குறிப்புகளின்படி திருமலைநாத உத்தமநம்பியின் தம்பியாக கிருஷ்ணராய உத்தமநம்பியும், அவருடைய தம்பியாக குடல்சாரவாள நாயனாரும் குறிப்பிடப் படுகிறார்கள். ஆயினும் உத்தமநம்பி வம்சப்ரபாவத்தின்படி லக்ஷ்மீ காவ்யம் எழுதிய கவியாகிய திருமலாசார்யர் என்று அழைக்கப்படும் திருமலைநாத உத்தமநம்பி 82-வது உத்தமநம்பியாகக் குறிப்பிடப்படு கிறார். இவர் மணவாளமாமுனிகள் காலத்தில் இருந்த கவி. இவருடைய தகப்பனார் சக்ரராயர். இவர் கஜவேட்டை ப்ரௌட தேவராயரால் ஆதரிக்கப்பட்டுவந்தார். இவருடைய தம்பியாக 83-வது உத்தமநம்பி ஸ்தானத்தில் குடல்சாரவாள நாயனார் என்கிற சின்னகிருஷ்ணராய உத்தமநம்பி குறிப்பிடப்படுகிறார். கோயிலொழு கில் கிருஷ்ணராய உத்தமநம்பி, குடல்சாரவாள நாயனார் ஆகிய இருவருடைய கைங்கர்யங்களும் உத்தமநம்பி வம்ச ப்ரபாவத்தின் படி முழுமையாக குடல்சாரவாள நாயினார் கைங்கர்யமாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.*

*ஸ்ரீரங்கம் கல்வெட்டு எண்.353* A.R.No.81 of 1936-37 *தன்வந்த்ரி ஸந்நிதியின் முன்பு அமைக்கப்பட்டுள்ள உயரமானதொரு கல்லில் பொறிக்கப்பட்டுள்ள 20.5.1493-ஆம் தேதியிட்ட கல்வெட் டில் மிக முக்கியமானதொரு குறிப்பு காணக்கிடைக்கின்றது.*

***உடையவர் காலத்திலிருந்து கருடவாஹன பண்டிதர் மேற்பார்வையிட்டு வந்த தன்வந்திரி ஸந்நிதியானது முகம் மதியர் படையெடுப்பின் போது தீக்கிரையாக்கப்பட்டது. தற்காலத்திய போர் முறையில் போர் மூளும் போது எண்ணெய்க் கிடங்குகளை எதிரிகள் குண்டுவீசித் தகர்ப்பர்கள். அதனால் வாகன போக்குவரத்திற்கு தேவையான ஆதாரம் அழிக்கப்படு கிறது. இதைப் போன்றே முகம்மதியர்கள் படையெடுப்பின்***

## கே₃ரவீந்த₃ராஜா கைங்கர்யம்

*90. மேல் இந்தத் திருக்கோபுரமும் பண்ணி செங்கல் பணிதி, சாந்துப்பணிதி, சித்திரப்பணிதி வண்ணமும்*

---

***போது மருத்துவமனையாக (ஆரோக்கிய சாலை) செயல்பட்டு வந்த தன்வந்த்ரி ஸந்நிதி தீக்கிரையாக்கப்பட்டது. போரில் காயமடைந்தவர்களுக்கு மருத்துவ உதவியினை செய்யமுடியாதபடி மருத்துவமனையும், மருத்துவர்களும் முதலில் அழிக்கப்பட்டனர். அதன் காரணமாக தன்வந்த்ரி ஸந்நிதி அதில் பணிபுரிந்த மருத்துவர்களோடு முழுமையாகத் தீக்கிரையாக்கப் பட்டது.)***

*முகம்மதியர்களால் தீக்கிரையாக்கப்பட்ட ஸந்நிதியை "இறந்த காலம் எடுத்த பெருமாள் குடல் சக்ரவாளநம்பி" என்பாருடைய காலத்தில் இந்த ஸந்நிதி புனர்நிர்மாணம் செய்யப்பெற்று, அதில் தந்வந்த்ரி எம்பெருமான் புனர்பிரதிஷ்டை செய்யப்பெற்றார். மேலும் பெரியபெருமாள் ஸந்நிதிக்கு குடிநீர்பால் எடுத்துச் செல்வதற்காக இரண்டு வேலி நிலம் தானமாக அளிக்கப்பட்டது என்றும் இந்தக் கல்வெட்டால் அறியப்படுகிறது.*

*இவ்வாறு தன்வந்த்ரி ஸந்நிதியை மீண்டும் புனர்நிர்மாணம் செய்து பெரியபெருமாள் குடிநீர்ப்பால் அமுது செய்யும்படி பண்ணிய இந்த உத்தமநம்பிக்கு "இறந்து போன பழக்க வழக்கங்களை மீண்டும் புதுப்பித்தார்" என்னும் பொருள் தோன்ற "இறந்தகாலம் எடுத்த" என்ற அடைமொழி கொடுக்கப்பட்டுள்ளது.]*

90. நாழிகைகேட்டான் கோபுரமும் அதன் நிலைக் கதவுகளும், நிலைக்கதவில் சித்திரங்களும், கோபுரத்திற்கு வண்ணப்

எழுதுவித்து, அஞ்சு பொற்குடமும் வைப்பித்தது கோவிந்த ராஜாவின் கைங்கர்யம்.

## கம்பராஜாமல்லர் கைங்கர்யம்

91. இதுகளுக்குமுன், ஶகாப்₃த₃ம் ஆயிரத்து முந்நூற்றெண்பத்துமூன்றில் (கி.பி.1461) சித்ப₄ாநு வருஷம், அணியரங்கன் திருமுற்றத்திலே முன்னிருந்த வெண்கலத் திருக்கொடிக் கம்பத்தை வாங்கி பெரிய திருமடைப் பள்ளியிலே வைத்து, செம்பினாலே திருக்கொடிக் கம்பத்தில் ஆனைத்தகடு நாசித்தகடு உட்பட பலதகடு நூற்றுப் பன்னிரண்டு தகடும், கம்பத்தின் மேல் பெரிய திருவடி நயினாரும் உட்பட செம்பின்மேல் பூசின தங்கம் ஆயிரத்தறு

---

பூச்சும், அந்த கோபுரத்திற்கு ஐந்து கலசங்கள் ஸமர்ப்பித்ததும் கோவிந்தராஜாவின் கைங்கர்யம்.

91. சக ஆண்டு 1383 (கி.பி.1461) சித்ரபானு வருஷத்தில் கம்பராஜா மல்லிகார்ஜுனராயர் வெண்கலத்தாலான கொடிக் கம்பத்தை அணியரங்கன் திருமுற்றத்திலிருந்து அகற்றிப் பெரியதிருமடைப்பள்ளியில் சேர்ப்பித்தார். அந்த இடத்தில் செம்பாலான மிக உயரமானதொரு கொடிக்கம்பத்தை நாட்டி வைத்தார்.

இந்த செம்பாலான கொடிக்கம்பத்தைச் சுற்றி 112 தங்கமுலாம் பூசிய தகடுகள் பொருத்தப்பட்டன. அந்தத் தகடுகளில் யானை, யாளி போன்ற சின்னங்கள் பொறிக்கப்பட்டன. அந்தக் கொடிக்கம்பத்தில் கருடனுடைய உருவம் பொறிக்கப்பட்டது. இதற்கு உபயோகப்படுத்தப்பட்ட தங்கத்தின் எடை 1600 பலம். இந்தக் கொடிக்கம்பத் திருப்பணியும், ஆபரணங்களும் கம்பராஜா

நூறு பலம்; இதுவும் பல திருவாபரணமும், **கம்பராஜா மல்லர் கைங்கர்யம்.**

---

**மன்னருடைய கைங்கர்யம்** *(இந்த கொடிக்கம்பத்தை ஏற்படுத்திய தால் இவருக்கு கம்பராஜா என்ற சிறப்புப் பெயர் ஏற்பட்டது.).*

*[கோயிலொழுகில் குறிப்பிடப்பட்டுள்ள இந்தச் செய்தி களை மல்லிகார்ஜுனராயர் காலத்து ஸ்ரீரங்கம் செப்பேடு ஒன்று* [C.P.28 of 1905-06, E.I.Vol.XVI, p.345 *1462-ஆம் ஆண்டில் சித்ரபானு வருஷத்தில் பொறிக்கப்பட்ட செப்பேடு ஒன்று உறுதி படுத்துகின்றது.*

*மேலும் இந்த செப்பேட்டின்படி உத்தமசேரி கிளியூர் ஆகிய கிராமங்கள், கோயிலுக்கு நிவந்தமாக அளிக்கப்பட்டதைக் குறிப்பிட்டு, அதனுடைய வருவாயைக் கொண்டு பிரதி தினமும் ஆறுவகைத் திருப்பணியாரங்கள் ஸமர்ப்பிக்கப்பட வேண்டுமென்றும், திருக் கோயிலின் முன்பு தண்ணீர்பந்தல் தர்மம் மேற்கொள்ளப்பட வேண்டுமென்றும், ஐம்பது ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஆண்டின் பால்குண (பங்குனி) மாதத்திலும், தனுர் (மார்கழி) மாதத்திலும் ஆண்டிற்கு இரண்டுமுறை பெரியதொரு ததீயாராதனம் செய்திட வேண்டு மென்றும் குறிப்பிடப்பட்டுள்ளது.*

*(முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தில் தங்கத்தால் ஆன கொடிக்கம்பம் உலுக்கானுடைய கி.பி.1323-ஆம் ஆண்டு படையெடுப்பின் போது சூறையாடப்பட்டது. அதன் பிறகு கி.பி.1377-ஆம் ஆண்டு இரண்டாம் ஹரிஹரர், விருப்பண்ண உடையார், சாளுவ மங்கு ஆகியோருடைய உதவி கொண்டு வெண்கலத்தாலான கொடிக்கம்பம் அந்த இடத்தில் நாட்டப்பட்டு விழாக்கள் கொண்டாடப்பட்டன. அதன் பிறகு யாது காரணத்தாலோ கி.பி.1461-ஆம் ஆண்டு வெண்கலத்தாலான இந்தத் திருக்கொடி கம்பம் அகற்றப்பட்டு, புதிதாக முழுதும் செப்பாலான கொடிக்கம்பம் நாட்டப்பட்டுள்ளது.)]*

## ஐந்நயநாயக்கர் கைங்கர்யம்

92. ஆலிநாடன் திருக்கோபுரம் (ஆர்யபட்டாள் வாசல் கோபுரம்) தென்புறத்தில் த்₃வார பாலகர் துலுக்காவணத்திலே சேதமாகையில், திருவாழியாழ்வானையும் பெரிய திருவடியையும் ஏறியருளப்பண்ணி வைத்தது **ஐந்நயநாயக்கர் கைங்கர்யம்.**

## அப்புள்ளார் ப்ரதிஷ்டை

93. ப₄ட்டர்பிரான்தாஸர், **அப்புள்ளார் ப்ரதிஷ்டை.**

---

92. கி.பி.1323-ஆம் ஆண்டு நிகழ்ந்த உலுக்கானுடைய படையெடுப்பின் போது ஆலிநாடன் திருவீதியில் அமைந்துள்ள ஆர்யபட்டாள் கோபுரத்தின் துவாரபாலகர்கள் சேதப்படுத்தப் பட்டனர். அந்த இடத்தில் சக்கரத்தாழ்வாரையும், பெரியதிருவடியாகிய கருடாழ்வாரையும் எழுந்தருளப் பண்ணியது ஐந்நய நாயக்கர் கைங்கர்யம். *(இன்றைக்கும் ஆர்யபட்டாள் வாசலில் அமைந்துள்ள இந்த சுதையாலான விக்ரஹங்களை நாம் ஸேவிக்கலாம். இந்த விக்ரஹங்களுக்கு பின்பு கோபுரச் சுவரோடு ஒட்டிய, முன்பு எழுந்தருளியிருந்த துவார பாலகர்களின் பின்னமான பகுதிகளையும் நாம் காணலாம்.)*

93. பட்டர்பிரான் தாஸருடைய விக்ரஹம் அப்புள்ளார் என்பவரால் ப்ரதிஷ்டை செய்யப்பட்டது. *(இந்தக் குறிப்பின் பொருள் விளங்கவில்லை. மணவாளமாமுனிகளுடைய அஷ்ட திக்கஜங்களில் பட்டர்பிரான் தாஸரும், அப்புள்ளாரும் அடங்குவர். பட்டர்பிரான் தாஸருடைய உருவச் சிலையை அப்புள்ளார் என்ற மணவாள மாமுனிகளுடைய மற்றொரு சிஷ்யர் ஏற்படுத்தி வைத்தாரா என்பதும் சிந்தனைக்குரிய செய்தியாகும்.)*

## கம்பயராஜா கைங்கர்யம்

*94. கோபுரங்கநாயக்கன் த்₁வாரபாலகரான கங்கையும் யமுனையும் துலுக்காவணத்திலே சேதமாகையில், அவர் களை ஏறியருளப்பண்ணி வைத்தது, இதுக்குமுன் ப₃ஹு₃ தா₃ந்ய வருஷத்திலே திருச்சிராப்பள்ளி சாவடிக்கு வந்த* ***கம்பயராஜாவின் கைங்கர்யம்.***

## ஆழ்வார்ஜீயர் கைங்கர்யம்

*95. நம்மாழ்வார்கோயில் மேல்புறமுள்ளும் மரக்கோப் பாகக் கட்டினது* ***ஆழ்வார்ஜீயர் திருப்பணி.*** *(ஆழ்வார் திருநகரி*

---

94. கம்பயராஜா, அதாவது குளித்தண்டல் கம்பராஜா பகுதான்ய வருஷம் [கி.பி.1457] திருச்சிராப்பள்ளி சீமைக்கு வருகை தந்தார். அப்போது அவருடைய வருகையின் நினைவாக முகம்மதியர் படையெடுப்பின்போது தீக்கிரையாக்கப்பட்ட கோபுரங்கநாயகன் துவாரபாலகர்களான கங்கையையும், யமுனையையும் மீண்டும் கார்த்திகை கோபுரவாசலிலேயே ப்ரதிஷ்டிப்பித்தார்.

*(கார்த்திகை கோபுரவாசலின் முன்பு உள்ள வெற்றிடத்தில் ஆண்டுதோறும் திருக்கார்த்திகையன்று சொக்கப்பனை கொளுத்தப் படுகிறது. இவ்வாறு சொக்கப்பனைக் கொளுத்தப்பட்டப்பின்பு அதனால் ஏற்படும் வெப்பத்தினை தணிப்பதற்காக இந்தக் கோபுர வாயிலில் கங்கையும், யமுனையும் பிரதிஷ்டிபிக்கப்பட்டதாகக் கூறுவர்.)*

95. ஆழ்வார் திருநகரியில் எம்பெருமானாரை புனர் ப்ரதிஷ்டை செய்து, அந்தக் கோயிலைச் சுற்றி ராமாநுஜசதுர்வேதி

*எம்பெருமானார் ஜீயர் மடம் வரலாற்றிலிருந்து ஆதாரங்களைக் கொடுக்கவும்)*

---

மங்கலம் என்ற குடியிருப்பை மணவாளமாமுனிகளுடைய ஆசார்யரான திருவாய்மொழிப்பிள்ளை ஏற்படுத்தி வைத்தார். இந்தத் திருக்கோயிலைப் பரிபாலனம் பண்ணுவதற்காக ஜீயர் ஸ்வாமி ஒருவரையும் நியமித்தருளினார் திருவாய்மொழிப் பிள்ளை. அந்த பட்டத்தில் எழுந்தருளியிருப்பவர்களுக்கு ஆழ்வார்திருநகரி எம்பெருமானார் ஜீயர் என்ற பெயர் இன்றும் வழங்கிவருகிறது.

அந்த எம்பெருமானார் ஜீயராக ஏழாவது பட்டத்தில் எழுந்தருளி இருந்தவர் ஆழ்வார் ஜீயர். இவருக்கு சடகோபஜீயர் என்ற திருநாமம் வழங்கி வந்தது. இந்த சடகோப ஜீயர் திருவரங்கத்திற்கு எழுந்தருளி, அழகியமணவாளப் பெருமாள் நாயனாருக்கு ஸந்யாஸ ஆய்ரமம் அளித்தருளினார். இவர் திருவரங்கத்திற்கு எழுந்தருளிய காலத்தில் தம்முடைய திருப்பணியாக, தமக்கும் எம்பெருமானாருக்கும் ப்ரியமானதும், எம்பெருமானாரால் ப்ரதிஷ்டை செய்யப்பட்டதுமான நம்மாழ்வார் ஸந்நிதியின் மேற்புறமும் உள்ளும் திருப்பணி செய்வித்தார். இவருடைய வாழித்திருநாமத்தில் ***திருவரங்கர் திருவடியோன்*** என்ற சொற்றொடர் காணப்படுகிறது.

*“மாசிதனில் விசாகத்தில் மகிழ்ந்துதித் தோன் வாழியே*
*மகிழ் மாறன் மலரடியைப் போற்றுமவன் வாழியே*
*ஆசுகவி சுந்தரமுனி அடியிணை யோன் வாழியே*
*அழகிய மணவாளமுனிக்கு ஆசிரமம் அளித்த பிரான் வாழியே*
*மாசறு சீர் எதிராசன் மலர்ப்பதத்தோன் வாழியே*
*மால் ஆதிநாதனையே தெய்வமென்றான் வாழியே*
*தேசுடைய திருவரங்கர் திருவுடையோன் வாழியே*
*திகழ்சடகோபமுனி திருவடிகள் வாழியே”*

•

## அழகர் கைங்கர்யம்

*96. பரவாஸுதேவர் ஸந்நிதிக்கு முன்னில் திருமண்டபம் ஆரியபட்டாள்* **அழகர் திருப்பணி.**

## ஸாளுவதிருமலைராஜா கைங்கர்யம்

*97. ஆலிநாடன் திருவீதியில் வடக்குத்திருவாசல் சக்களவன் பண்ணின திருப்பணி ஜீர்ணமாகையாலே,*

* இதன் தொடர்ச்சியை 578ஆம் பக்கத்தில் காண்க

---

96. சந்திரபுஷ்கரிணியின் கிழக்குப்பகுதியில் உள்ள பரவாஸுதேவர் ஸந்நிதி முன்மண்டபம், ஆர்யபட்டாள் கொத்தைச் சார்ந்த அழகர் என்பாருடைய திருப்பணி.

97. கோயிலொழுகில் விவரிக்கப்படவுள்ள, இனிவரும் நிகழ்ச்சிகளை மனதில் நன்றாகப் பதித்து கொள்வதற்கு முன் விஜயநகர சாம்ராஜ்யத்தை ஆண்டு வந்த சங்கமகுல மன்னர்களின் வீழ்ச்சியையும், அதே சமயத்தில் அந்தப் பேரரசைக் காப்பாற்ற வேண்டும் என்ற நோக்கத்தில், சாளுவவம்சத்தை தோற்றுவித்த சாளுவ திருமலைதேவன், அவன் மகன் சாளுவநரஸிம்மன் ஆகிய இருவரைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புகளை நாம் அறிந்துகொள்ளவேண்டும். இதன்வழி ஸ்ரீரங்கம் கோயிலுக்கு ஏற்பட்ட ஆபத்துக்களையும், அவை எவ்வாறு நீங்கப் பெற்று ஸ்ரீரங்கஸ்ரீ வளர்ச்சி பெற்றது என்பதையும் முழுமையாக அறிந்துகொள்ளலாம்.

### 15ஆம் நூற்றாண்டில் விஜயநகரப் பேரரசு

97.1. பல்லவர்கள், சோழர்கள், பாண்டியர்களின் மறைவிற்குப் பின்பு தமிழகத்தின் பெரும்பகுதி விஜயநகரப்

பேரரசின் ஆதிக்கத்தின் கீழ் வந்தது. சங்கம குலத்தைச் சேர்ந்த முதலாம் ஹரிஹரன் (கி.பி.1336-1357) இப் பேரரசைத் தோற்றுவித்தான். அதன்பின்பு முதலாம் புக்கர் (கி.பி. 1354 - 1377), இரண்டாம் ஹரிஹரன் (கி.பி. 1377 - 1404), முதலாம் தேவராயர் (கி.பி. 1404 - 1422), இரண்டாம் தேவராயர் (கி.பி.1423-1446) ஆகியோர் ஆட்சிபுரிந்துவந்தனர்.

97.1.1. இரண்டாம் தேவராயனுக்குப் பிறகு கி.பி. 1447இல் பட்டமேற்ற மல்லிகார்ஜுனன் வலிமையற்றுத் திகழ்ந்தான். இவனது ஆட்சியின் போது இரண்டாம் அலாவுதீனும், ஒரிசா நாட்டு மன்னன் கபிலேச்வர கணபதியும் விஜயநகரத்தின்மீது படையெடுத்தனர். பின்பு கபிலேச்வரன் கி.பி. 1454க்குள் ராஜமஹேந்திரபுரத்தையும், ‘கொண்ட வீட்டையும்’ கைப்பற்றிக் கொண்டான். ஸ்ரீசைலம் வரையிலும் உள்ள பகுதிகளை வென்றான். தமிழகப் பகுதிகளான காஞ்சிபுரத்தையும், திருச்சிராப்பள்ளியையும் கி.பி. 1463இல் தனது ஆதிக்கத்தின் கீழ் கொண்டுவந்தான். தென் தமிழகம் வரை கபிலேச்வர கணபதி வென்றானேயொழிய அவனால் நீடித்து அப்பகுதியைத் தன் ஆதிக்கத்துக்குள் வைத்துக் கொள்ள முடியவில்லை. விஜயநகரப் பேரரசின் கீழ் பல மண்டலேச்வரர்கள் அவ்வப் பகுதிகளைத் தன்னாட்சி செய்து வந்ததுதான் இதற்குக் காரணம். அவர்களது வலிமையும், திறமையும் மல்லிகார்ஜுனனை நிலை பெறச்செய்தது. (கி.பி.1447-1465)

97.1.2. அத்தகைய மண்டலேச்வரர்களில் குறிப்பிடத் தக்கவர்கள் சாளுவ திருமலை தேவமகாராஜாவும், சாளுவ நரசிம்மனும் ஆவர். திருச்சி, தஞ்சை, புதுக்கோட்டைப் பகுதி களைத் திருமலை தேவ மகாராஜனும், விஜயநகரப்பேரரசின் மையப் பகுதி மற்றும் கிழக்குப் பகுதிகளைச் சாளுவ நரசிம் மனும் திறம்பட, தம் ஆதிக்கத்தின் கீழ் வைத்திருந்தனர்.

97.1.3. மல்லிகார்ஜுனன் கி.பி. 1465இல் ஜூன் - அக்டோபர் மாதங்களுக்கிடையில் இறந்துபோனான். அவனுடைய மகன் குழந்தையாய் இருந்தமையால், பிரதாப தேவராயனுடைய மகன் இரண்டாம் விருபாக்ஷன், கி.பி. 1465இல் விஜயநகரப் பேரரசனானான். விருபாக்ஷன் விஜயநகர அரியணை ஏறுவதற்கு முன் பல ஆண்டுகள் பெனுகொண்டாவின் ஆட்சியாளனாய்த் திகழ்ந்தவன். அவன் தீயொழுக்கம் உடையவன் என்றும், மது மயக்கத்திலும், மாதர் மையலிலும் எப்போதும் ஆழ்ந்துகிடந்தான் என்றும் மேல் நாட்டு யாத்திரிகரான 'நூனிஸ்' தமது பயணக் கட்டுரையில் குறிப்பிட்டுள்ளார்.

97.1.4. இஸ்லாமியர்களின் படையெடுப்பால் விஜயநகரப் பேரரசு பாதிக்கப்பட்டாலும், சந்திரகிரிராஜ்யத்தின் ஆட்சியாளனான சாளுவ நரசிம்மனும், அவனது துணைவன் துளுவ தளபதி ஈச்வர நாயக்கனும் விஜயநகர அரசு எதிர்கொள்ள வேண்டியிருந்த பேரபாயங்களைத் தவிர்த்துக் காத்தனர். காஞ்சிபுரத்தை திடீரென்று தாக்கி அங்கு கிடைத்த ஏராளமான பொருட்களுடன் தன் தலைநகருக்குச் சென்று கொண்டிருந்த பாமினி சுல்தானை வழிமறித்து அந்தப் பொருள்களை மீட்ட பெருஞ்சிறப்பு துளுவ தளபதி ஈச்வரனையேசாரும். இந்தவெற்றி மிகவும் குறிப்பிடத்தக்க நிகழ்ச்சியாகும்.

97.1.5. இரண்டாம் விருபாக்ஷன் கி.பி.1485 வரை ஆட்சிபுரிந்தான். இவ்வாண்டில் அவனது மூத்தமகன், விருபாக்ஷனைக் கொன்றுவிட்டு, தான் அரியணை ஏறாமல், தன்தம்பி 'படியராவ்' எனப்படும் ராஜசேகரனுக்கு (பிரவுட தேவராயன் II) முடிசூட்டி விஜயநகரப் பேரரசனாக்கினான். இந்தப் பிரவுட தேவராயனோ தான் அரியணை ஏறியதும் முதலாவதாகத் தனக்கு முடிசூட்டிய தன் தமையனையே கொலை செய்தான். இவனுக்கு மதுபானங்களிலும், மாதர் மையலிலுமே நாட்டம் மிகுந்திருந்ததால் அரசியலைக் கவனியாமல் இருந்தான்.

இவனது திறமைக் குறைவும், தீய ஒழுக்கங்களும் சங்கம குலத்திற்கு முற்றுப்புள்ளி வைத்தன.

97.1.6.விஜயநகரப் பேரரசைக் காக்க வேண்டுமாயின் சங்கம குலத்தை அழித்துவிட்டுத் தானே அரியணை ஏறுவ தைத்தவிர வேறு வழியில்லை என்பதை நன்குணர்ந்த சாளுவ நரசிம்மன் (மகா மண்டலேசுவரனாகப் பொறுப்பு வகித்தவன்) தன் தளபதியான நரசநாயக்கனிடம் விஜயநகரின் மீது படையெடுத்து அதனைக் கைப்பற்றுமாறு உத்தரவிட்டான்.

97.1.7. இந்தப் படையெடுப்பைப் பற்றி நூனிஸ் பின் வருமாறு குறிப்பிடுகிறார். "சாளுவ நரசிம்மனின் தளபதியான நரச நாயக்கன் விஜயநகரத்தின் வாயிலை அடைந்தபோது அவனை எதிர்ப்பதற்கு அங்கு யாருமே இல்லை. பின்னர் அவன் அரச மாளிகைக்குள் நுழைந்தான். அங்கும் அவனை யாரும் தடுக்க வில்லை. அதன்பின் அவன் அரசனுடைய அந்தப்புரத் திற்குச் சென்று பெண்கள் சிலரையும் கொன்றான். அப்போதும் அவனை ஒருவரும் எதிர்க்கவில்லை. இறுதியில் அரசன் என்ற பெயரில் இருந்த கோழையான இரண்டாம் பிரவுடதேவராயன் ஓடிவிட்டான். அதன்பின் சாளுவ நரசிம்மன் (கி.பி.1486இல்) அரச பதவிக்கு உயர்த்தப் பட்டான்" என்று குறிப்பிடுகிறார். (A Forgotten Empire (VijayaNagar) - Robert Sewell - Page 108)

97.1.8. இவ்வாறு நரசநாயக்கனின் துணையுடன் விஜயநகரப் பேரரசின் சாளுவ குலம் கி.பி.1486இல் உதயமாயிற்று. சாளுவ நரசிம்மன் அரியணை ஏறியது பல குறுநில மன்னர்களுக்கும் (மண்டலேசுவரர்களுக்கும்) பாளையக்காரர்களுக்கும் பிடிக்காமல் போகவே ஆங்காங்கே குழப்பங்கள் நிகழ்ந்தன. இந்த சாளுவ நரசிம்மனுடைய தமையனாராக விளங்குபவர் அயோத்யா ராமாநுஜய்யார் எனப்படும் கந்தாடை இராமானுசமுனி.

97.1.9. கி.பி. 1491இல் சாளுவ நரசிம்மன் இறப்பதற்கு

முன்னர், தன் இரு மகன்களையும் தன்னிடம் மிகுந்த பற்றுடனும், உண்மையுடனும் திகழ்ந்த துளுவ நரச நாயக்கனிடத்தில் ஒப்படைத்தான். சாளுவ நரசிம்மனின் மறைவிற்குப் பின்பு நரச நாயக்கன் அரச குமாரர்களுள் மூத்தவனாகிய திம்மபூபனை அரியணை ஏற்றினான். ஆனால் நரச நாயக்கனுக்குப் போட்டியாய்த் திகழ்ந்த தளபதி திம்மராசன் என்பவன் திம்மபூபனை சூழ்ச்சியால் கொன் றான். அதனால் இளையவன் இம்மடி நரசிம்மன் கி.பி. 1491இல் அரசனானான். இவன் வீரநரசிம்மராயன் என்ற பட்டப்பெயரில் ஆட்சிபுரிந்து வந்தான். ஆனால் அரசியல் அதிகாரம் முழு வதையும் நரசநாயக்கன் தன்னிடமே வைத்துக்கொண்டான்.

97.1.10. இம்மடி நரசிம்மன் பெயரளவில் அரச பீடத்தில் இருந்தாலும், நரசாநாயக்கன் தன்னை விஜயநகரப் பேரரசனாகவே கருதிக்கொண்டு விஜயநகர சாளுவ அரச மரபுக்குரிய பட்டப் பெயர்களையும் சூடிக்கொண்டான். பின்னர் இம்மடி நரசிம்மனுக்கும், நரசநாயக்கனுக்கும் கருத்து வேறுபாடு அதிகரித்தது. இதன் விளைவாக இம்மடி நரசிம்மனை நரசநாயக்கன் பெனு கொண்டாவிற்குக் கொண்டு சென்று கடுமையான கண்காணிப்பில் வைத்தான். இந் நிகழ்ச்சியால் நரசநாயக்கனின் அதிகார பலம் அதிகரித்த தாயினும், அதுவே பேரரசின் கீழ் இருந்த பல குறுநில வேந்தர்களின் எதிர்ப்பைக் கடுமையாக வளரச்செய்தது.

97.1.11. குறிப்பாகத் தமிழகத்தில் நரசநாயக்கனுடைய தலைமைக்கு எதிர்ப்புகள் அதிகமாக இருந்தன. இங்கு மண்டலீச்வரர்களாய்த் திகழ்ந்த கோனேரிராயன், சமர கோலாகலன் எனும் மாவலிவாணாதிராயன் போன்றவர்களின் எதிர்ப்பைச் சமாளிக்க வேண்டியதாயிற்று. *(மாவலி வாணா திராயன் என்ற இந்த மண்டலேச்வரன் மணவாளமாமுனிகளின் திருவடிகளைப் பற்றியவன். ஓர் இரவு முழுதும் ஸ்ரீபாதம் தாங்கி*

*(பக்கம் 573இன் தொடர்ச்சி)*

*ஶகாப்₃த₃ம் ஆயிரத்து முந்நூற்றுத்தொண்ணூற்றிரண்டில் (கி.பி.1470) கர வருஷத்திலே திருமலைராஜா அந்தத் திருக்கோபுரத்தை ஜீர்ணோத்₃த₄ாரணம் பண்ணிவைத்து,*

---

*வேடம் அணிந்து மாமுனிகள் எழுந்தருளியிருந்த பல்லக் கினைச் சுமந்தவன். மேலும் 'முத்தரசன்' என்ற கிராமத்தை மாமுனிகளுக்குக் காணிக்கையாகத் தந்தவன் இவன். ஸ்ரீமணவாளமாமுனிகள் அந்தக் கிராமத்திற்கு 'அழகியமணவாள நல்லூரர்' என்ற பெயரினைச் சூட்டி மகிழ்ந்தார்.)*

97.1.12. கி.பி.1496இல் நரசநாயக்கனின் தென்னாட்டு 'திக் விஜயத்தால்' தமிழகத்தின் ஆட்சியில் சில மாற்றங்கள் ஏற்பட்டன. நரசநாயக்கனின் மறைவிற்குப் பிறகு விஜய நகரப் பேரரசின் மாமன்னனாக அவனுடைய புதல்வன் வீரநரசிம் மன் முடிசூட்டிக் கொண்டான். இதனால் விஜயநகரப் பேரரசில் 'துளுவ குலம்' உதயமாயிற்று. கி.பி. 1505இல் தோற்றுவிக்கப் பெற்ற துளுவகுல அரசு கி.பி. 1509இல் நரசநாயக்கனின் மற்றொரு மகனான கிருஷ்ணதேவராயர் முடிசூடப்பெற்றதும் மேலும் மெருகேறிச் சுடர்விட்டு ஒளிர்ந்தது. நரசநாயக்கனின் மூன்று புதல்வர்களும் ஒருவருக்குப் பின் ஒருவராக நாட்டை ஆண்டு வந்தனர் *(இந்த நூலின் 220ஆம் பக்கத்தைப் பார்க்கவும்.)*. *(நரசநாயக்கன், நராசா நாயக்கன் ஆகிய இரண்டுபெயர்களும் ஒரு நபரையே குறிக்கும்.)*

**இனி கோயிலொழுகில் விவரிக்கப்பட்டுள்ள சாளுவ திருமலைராஜாவினுடைய கைங்கர்யங்களைப்பற்றிப் பார்ப்போம்:**

97.2. ஆலிநாடன் திருச்சுற்றில் வடக்குத் திருவாசலில் *(பரமபதவாசல் கோபுரம்)* சக்களவன் திருப்பணியாகச்செய்வித்தது சரிந்துபோனதாலே, சக ஆண்டு 1392 *(கி.பி.1470)*-இல் சாளுவ திருமலைராஜா அந்தத் திருக்கோபுரத்தைப் பழுதுபார்த்து, திருப் பணிகளை மேற்கொண்டார். *(சக்களவன் என்ற பெயர் சக்ரராயனைக்*

வெளியழகியானிலே கிழக்கே ஆலிநாடன் திருமதிளிலே ஆயிரக்கால் மண்டபத்துக்குச் செவ்வையாகப் போகும்படி திருக்கோபுரவாசலு முண்டாக்கினபடியினாலே, அதுமுதலாக பெருமாள் திருவாய்மொழித் திருநாளுக்கு வெளியழ கியானிலே எழுந்தருளி, அந்த வாசலாலே (தற்போதைய

---

*குறிப்பதாக முனைவர் திரு.ஹரிராவ் அவர்கள் குறிப்பிட்டுள்ளார். சக்ரராயருடைய திருப்பணிகள் ஏறக்குறைய கி.பி.1420-1440 காலகட்டத்தில் நடைபெற்றிருக்கக் கூடும். 30-50 ஆண்டு இடை வெளியில் இந்தத் திருக்கோபுரத்தில் மீண்டும் திருப்பணிகள் செய்ய வேண்டிய கட்டாயம் எவ்வாறு ஏற்பட்டது என்பது சிந்தனைக் குரியது.)*

97.3. சாளுவதிருமலைராஜா காலம் வரையில் இராப்பத்துத் திருநாட்களில் நம்பெருமாள் பரமபத வாசல் வழியாக எழுந் தருளி, ஆழ்வார்கள் பன்னிருவருக்கும் அந்த இடத்திலேயே ஸேவை ஸாதிப்பார். அங்கு அவர்களுக்கு அருளப்பாடு ஸாதிக்கப்பட்டு மரியாதைகள் செய்விக்கப்படும். *(ஆழ்வார்கள் பன்னிருவர் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. ஆனால் நடை முறையில் ஆண்டாள் எழுந்தருளுவதில்லை. ஆசார்யர்களில் திருக்கச்சிநம்பிகள், கூரத்தாழ்வான், பிள்ளைலோகாசார்யர் ஆகியோர் எழுந்தருளுகின்றார்கள். நம்பெருமாள் மேலைப்படி வழியாக ராஜமகேந்திரன் திருச்சுற்றில் எழுந்தருளும்போது அவருக்குப் பின்னால் நம்மாழ்வார், திருமங்கை ஆழ்வார், ராமானுஜர் ஆகியோர் எழுந்தருளுகின்றார்கள். ஸ்ரீவைஷ் ணவ ஸம்ப்ரதாயத்தில் ஸ்ரீபராங்குச, பரகால, யதிவராதிகள் என்று குறிக்கப்படும் மரியாதையையொட்டி இவர்கள் நம்பெருமாளுக்குப் பின்புறம் எழுந்தருளுகிறார்கள். மற்றைய ஆழ்வார்கள், ஆசார்யர்கள் கொட்டகையில் முன்னதாக எழுந்தருளி இருப்பார்கள். நம்பெருமாள் கொட்டகை சென்றடைந்தவாறே அங்கு மலைப்பு என்னும் நாட்டிய முத்திரையுடனும், தாளத்துடனும் அன்றையதினத்திற்கு உரித்தான திருவாய்மொழி பாசுரம் ஸேவிக்கப்படும். பிறகு நம்பெருமாள்*

தவிட்டறை வாசல்) ஆயிரக்கால் மண்டபத்துக்கு எழுந் தருளுகிறது. அதுக்குமுன், ஆழ்வார்கள் பன்னிருவரும் பரமபத₃ வாசலிலே திருவோலக்கமிருக்க, திருக்காப்பு நீக்கினவுடனே பெருமாள் ஆழ்வார்களை ப்ரத₂மகடாக்ஷ மாகக் கடாக்ஷித்துப் புறப்பட்டருளி, ஆழ்வார்களுக்கு அருளப்பாடு முதலான வரிசைகளை ஸாதி₃த்து அரையர்

*நடையழகு காண்பித்த பிறகு ஆழ்வார்களுக்கும், ஆசார்யர்களுக்கும் மரியாதைகள் ஆகி அவர்கள் திருமாமணி மண்டபம் சென்றடைவர். இது தற்போதைய நடைமுறை.)*

97.4. சாளுவதிருமலை ராஜா காலம் வரையில் அரையர் தாளமிசைத்திட ஐந்துகுழி மூன்று வாசல் வழியாக நம்பெருமாள் புறப்பட்டருளி, அகளங்கன் திருவீதி வழியாக ஆயிரங்கால் மண்டபத்திற்கு மேற்குப்புறமாக எழுந்தருளி கொட்டகையை அடைவர். படியேற்றம் கண்டருளி, திருக்காவணத்தில் பத்தி உலாத்தி *(ஆயிரங்கால் மண்டபத்தில் அமைந்துள்ள நடைபாதை)* திருவந்திக் காப்பு கண்டருளி அதன்பின்பு திருமாமணி மண்டபத்தில் எழுந்தருளியிருப்பார்.



*பரமபதவாசல்*
*(ஆலிநாடன்திருவீதி)*

97.4.1. சாளுவ திருமலைராஜா காலத்தில் இந்த நடைமுறை மாற்றம் அடைந்தது. பரமபத வாசல் கோபுரத்திற்கு ஜீர்ணோத்தாரணம் செய்தார் இந்த மன்னன். அதன் பிறகு நம்பெருமாள் வெளி யழகியானிலே எழுந்தருளி (ஆலி

*உகப்புடனே முக்கண் வாசல்வழியாக அகளங்கன் திருவீதி யாலே ஆயிரக்கால் மண்டபத்துக்குத் தெற்காலே எழுந்தருளி, படியேற்றங் கண்டருளி, திருக்காவணப் பத்தியிலும் உலாவி யருளி, திருவந்திக்காப்பு கண்டருளி, திருமண்டபத்திலே ஏறியருளுவர். அதுமுதலாக, வெளியழகியானிலே ஆழ்வார் களுக்குக் காட்சியாய், புதிசான தட்டறைவாசலாலே ஆயிரக் கால் மண்டபத்தில் திருக்காவணப்பத்தியிலே உலாவியருளி, திருவந்திக்காப்பான பின்பு, திருமண்டபத்திலே ஏறி யருளுவர்; அழகியமணவாளன் திருமண்டபத்திலே சந்த₃ன மரத்தாலே மண்டபமேடையும், அதிலே செம்புமேல் பொற்பூச்சான மூன்று குடமும் கட்டுவித்து, அதிலே த₃ந்தசப் பரமும் மஞ்சமும் வைப்பித்தது **ஸாளுவ திருமலைராஜா.***

---

*நாடன் திருச்சுற்றின் கிழக்குப்பகுதியான மணல்வெளிக்கு வெளியழகியான் என்று பெயர்.)* அங்கிருந்து அகளங்கன் திருச்சுற்றில் அமைந்துள்ள கொட்டகைக்குச் செல்வதற்கு வசதியாக ஆலிநாடன் திருச்சுற்றிற்கும், அகளங்கன் திருச் சுற்றிற்கும் இடைப்பட்ட மதிள்சுவரிலே பெரியதொரு கோபுர வாசல் அமைத்தார். இந்த வாசலுக்குத்தான் தவிட்டறை வாசல் என்ற பெயர் வழங்கி வருகிறது. கிழக்கு கோபுரம் வழியாக தாயார் ஸந்நிதிக்குச் செல்வதற்கு வசதியாக இந்தத் தவிட்டறை கோபுர வாசல் திகழ்கிறது. *(முற்காலங்களில் தற்போதைய நூல்நிலையம், போஜராமன் ஸந்நிதி ஆகிய பகுதிகளில் பசுக்களின் தீவனமான தவிடுமூட்டைகள் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. அதனால் இந்த வாசலுக்குத் தவிட்டறை வாசல் என்ற பெயர் அமைந்துள்ளது.)*

97.4.2. சாளுவ திருமலைராஜா அழகியமணவாளன் திருமண்டபம் என்றழைக்கப்படும் சந்தன மண்டபத்திலே, சந்தன மரத்தாலே ஒரு மண்டப மேடையை அமைத்து, அந்த மண்டபத்தில் செப்புமேல் பொற்பூச்சான மூன்று கலசங்களை அமைத்தார். மேலும் தந்தத்தாலே ஆன ஒரு சப்பரமும், மஞ்சமும் ஸமர்ப்பித்தார்.

## கந்தாடை ராமாநுஜத$_4$ாஸர் கைங்கர்யம்

*98. ஶகாப்$_3$த$_3$ம் ஆயிரத்துநானூற்றுப் பதினொன்றில், (கி.பி.1489) கந்தாடை ராமாநுஜன் வந்துபண்ணின கைங்கர்யத்துக்கு விவரம்:- ப்ரபண்டதேவராயரை* ***வீரநரசிங்கராயர்*** *ஜயித்து, கநகி$_3$ரிநகரத்திலேயிருந்து ராஜ்யப$_4$ாரம் வஹிக்கச் செய்தே, அவருடைய தமையனான* ***ராமராஜா*** *ஸ்த$_2$ல ஶாஸ்த்ரமும் படித்து, விரக்தராய், தீர்த்த$_2$யாத்ரைபண்ணி, ஹநுமது$_3$பாஸனைபண்ணி, திருவயோத்திக்குப் போய், ஸ்ரீராமமாடைகளையும் ஸ்பர்ஶவேதி$_3$யையும் லபி$_4$த்து, வைராகி$_3$ வேஷத்துடனே கநகி$_3$ரிக்குவந்து, தம்பியான*

---

98. சக ஆண்டு 1411இல் [கி.பி.1489] கந்தாடை ராமாநுஜன் ஸ்ரீரங்கம் சேர்ந்து ஆங்கு செய்தருளிய கைங்கர் யங்கள் பின்வருமாறு :

98.1. சாளுவகுல மன்னனான வீரநரசிம்மனின் தமையன் ராமராஜா. சங்கமகுல மன்னனான ப்ரவுட தேவராயனை வெற்றிகொண்டு விஜயநகர மன்னனாக முடிசூடிக்கொண்டவன் வீரநரசிம்மன் எனப்படும் சாளுவநரசிம்மன் *(கி.பி.1486)* இவன் வழிவந்த மன்னர்களுக்குச் சாளுவகுல மன்னர்கள் என்று பெயர்.

98.1.2. ராமராஜா எல்லா சாஸ்திரங்களையும் அறிந்தவராய் உலகப் பற்றுகளைத் துறந்து தீர்த்தயாத்திரை பண்ணி அயோத்தி சென்றடைந்தார். ஆங்கு திருவடியான ஆஞ்சநேய உபாஸ னையை மேற்கொண்டார். திருவடியின் திருவருளால் ராம ராஜா வுக்கு ஸ்ரீராமனுடைய உருவம் பொறித்த தங்கக்காசுகளும், இரும்பைப் பொன்னாக்கும் அபூர்வ சக்தியும் அவருக்குக் கிடைத்தது. துறவறம் மேற்கொண்ட அவர் விஜயநகர சாம் ராஜ்யத்தின் தலை நகரான கநகிரிக்கு வந்து தனது தம்பியிடம் ஸ்ரீராமனுடைய உருவம் பொறித்த தங்கக்காசுகளைக் கொடுத்தார்.

*வீரநரசிங்கராயரைக் கண்டு, ஒரு ஸ்ரீராமமாடையும் கொடுத்து, தனக்கு நூற்றெட்டுத் திருப்பதிகளிலேயும் தே$_3$ஶாந்தரி முத்$_3$ரை நடக்கத்தக்கதாக ராயஶாஸநமும் நிருபமும் வாங்கிக் கொண்டு, திருமலைபெருமாள் கோயிலிலேயும் ஸ்ரீராம மாடை ஸமர்ப்பித்து, அவ்விடத்தில் ஸ்த$_2$லங்களையெல் லாம் ராயஶாஸநப்படிக்கு ஸ்வாதீ$_4$நம் பண்ணிக் கொண்டு, ஶகாப்$_3$த$_3$ம் ஆயிரத்துநானூற்றுப் பதினொன்றில் (கி.பி.1489) ஸௌம்ய வருஷத்திலே திருவரங்கந் திருப்பதியிலே வந்து, பெருமாளுக்கு ஒரு ஸ்ரீராமமாடையும் ஸமர்ப்பித்து, கந்தாடையண்ணன் திருவடிகளிலே ஆஶ்ரயித்து, விஶேஷ நிஷ்ட$_2$ராய் ஸகல ஶாஸ்த்ரங்களையும் படித்து, ஏகாங்கி வேஷம் த$_4$ரித்து, அண்ணன் ஸந்நிதி$_4$யிலே*

---

அதன்பிறகு 108 திவ்யதேசங்களிலும் தேசாந்திரி முத்திரை *(திவ்ய தேசங்களுக்கு எழுந்தருளும் வெளியூர் ஜீயர்களுக்கும், ஏகாங்கி களுக்கும் அளிக்கப்பட வேண்டிய சில உரிமைகள்)* துறவறம் மேற்கொண்ட ராமராஜாவுக்கு அளிக்கப்படவேண்டும் என்ற அரசாணையையும் பெற்றார். அதற்குத் தக்க ஆவணமாகிய ராயசாஸனத்தையும், ஓலைகளை யும் மன்னரிடமிருந்து பெற்றுக் கொண்டார். திருமலைக்கும் காஞ்சிபுரத்துக்கும் எழுந்தருளி ஆங்கே ஸ்ரீராமருடைய திருவுருவம் பதித்த பொற்காசுகளை அந்தந்த திவ்யதேசத்து எம்பெருமான்களிடம் ஸமர்ப்பித்தார். திருமலை, காஞ்சிபுரம் கோயில்களுடைய நிர்வாஹத்தினை விஜயநகர மன்னனான சாளுவ வீரநரசிம் மனுடைய நிர்வாகப் பொறுப்பின் கீழ்க் கொண்டுவந்தார்.

98.3. அதன்பிறகு சக வருஷம் 1411 [கி.பி.1489] சௌம்ய ஆண்டு திருவரங்கம் எழுந்தருளினார். கோயில் அண்ணன் திருவடிகளை ஆஶ்ரயித்து தாஸ்ய நாமமாகக் கந்தாடை ராமாநுஜமுனி என்ற பட்டப்பெயரையும் பெற்றார். திருவரங்கம்

“**கந்தாடை ராமாநுஜதா$_3$ஸர்**” என்று தா$_3$ஸ்யநாமமும் பெற்று, ராயஶாஸநப்படியே ஏகாங்கிகளுக்குத் தலைவராய், ஸத்த$_2$லத்திலேயிருந்த இலச்சினைகளுக்கு மேலே தே$_3$ஶாந்தரிமுத்$_3$ரை ஆஞ்ஜநேய முத்$_3$ரையைப் பெருமாள் ஸந்நிதி$_4$யிலும் லபி$_4$த்து, ஆராமங்களிலே (மற்றைய திவ்ய தேசங்களிலே) ஆஞ்ஜநேய முத்$_3$ரையைத் தம் மநுஷ்யர் முகாந்தரத்திலே ப்ரவர்த்திப்பித்து, இவ்விடத்திலே தானே இருந்து கொண்டு, நித்யமாக ஏகாங்கிகளுக்கு உடையவர் கல்பித்த கட்டளைப்படிக்குத் திருவணுக்கன் திருவாசலி லேயும், பரிமளப்பெட்டிகளிலேயும், வ்யஞ்சனை அறைக்கும், ஆரியப$_4$ட்டாள் வாசலுக்கும், திருக்கொட்டார வாசலுக்கும், இது முதலானதுகளுக்கு ஹநுமார் முத்$_3$ரையிட்டு; கொறட்டுப் பாரபத்யக்காரருக்கு, புறப்பாடு முதலானவிடங்களிலே ஸேவையானவுடனே உத்தமநம்பிக்கு முன்னாக ஸேவை தீர்த்த$_2$ப்ரஸாத$_3$ விநியோகா$_3$தி$_3$களும் உண்டு பண்ணிக் கொண்டிருக்கும் காலத்திலே; ஸர்வஜித்து வருஷத்திலே,

---

பெரியகோயிலில் பணிபுரியும் பல்வேறு ஏகாங்கிகளுக்கு அவர் தலைவராகச் செயல்பட்டார். திருவரங்கம் பெரியகோயிலின் உயர்ந்த முத்திரையாகிய ஆஞ்சநேய முத்திரையைப் பெற்றுக் கைங்கர்யங்கள் பல செய்துவந்தார்.

98.3.1. சுற்றுக்கோயில்கள் பலவற்றிலும், உடையவரால் ஏகாங்கிகளின் கைங்கர்யமாக நியமிக்கப்பெற்ற திருவணுக்கன் திருவாசல், பரிமள அறை, வ்யஞ்சன அறை, ஆர்யபட்டாள் வாசல், திருக்கொட்டார வாசல் ஆகிய இடங்களில் ஆஞ்சநேய முத்திரையிட்டுத் தம் கட்டுப்பாட்டின் கீழ்க்கொண்டுவந்தார். கொறட்டு மணியகாரருக்கு அடுத்த ஸ்தானமாக உத்தமநம்பிக்கு முன்பாக ஸேவை தீர்த்தப்பிரஸாத விநியோகங்கள் கந்தாடை ராமாநுஜமுனிக்கு ஏற்பட்டன.

*திருக்காவேரி உடைப்பு எடுத்து நடுத்தோப்புக்கும் சூடிக் கொடுத்த நாய்ச்சியார் கோவிலுக்கும் நடுவே புறப்பட்டு, கிழக்கே ஆனைக்காவல் ஸமீபத்தில் எல்லை மதிளுக்கு மேற்காலே வடதிருக்காவேரியையடைந்து, முற்றிலும் பள்ளம் பறித்திருக்கையில்; அந்தப்பள்ளங்களைத் திரு வெள்ளறை மண்ணினாலே தூர்த்து, அடையவளைந்தானுக்கு மேற்கே தெப்பக்குளத்தையும் ஜீர்ணோத்தாரணம் பண்ணி, மைய மண்டபமும் கட்டிவைத்திருக்கும் காலத்திலே; முன்*

---

98.4. ஸர்வஜித் ஆண்டு [கி.பி.1528இல்] தென்திருக் காவிரியில் பெரிய உடைப்பு ஏற்பட அதனால் காவிரி நீர் ஸ்ரீரங்கத்தின் உட்பகுதியில் வெளியாண்டாள் ஸந்நிதி வழியாகப் புகுந்து புறப்பட்டு கிழக்கே திருவானைக்கா சமீபத்தில் அமைந் திருந்த எல்லைக்கரை மண்டபத்துக்கு அருகில் வடதிருக் காவிரியை சென்றடைந்தது. அவ்வாறு ஏற்பட்ட வெள்ளத்தின் விளைவாக நகரின் மத்தியப் பகுதியில் பல பள்ளங்கள் ஏற்பட்டன. அவ்வாறு ஏற்பட்ட பெரும் பள்ளங்களைத் திருவெள்ளறை யிலிருந்து மண் கொணர்ந்து தூர்ப்பித்தார் கந்தாடை இராமானுசமுனி. *(கி.பி.2003ஆம் ஆண்டு ஸ்ரீரங்கத்தில் குடிநீர் பஞ்சம் ஏற்பட்டபோது தற்போதைய திருவள்ளுவர்வீதியில் ஆழ் துளைக் கிணறுகள்* (Borewells) *ஏற்படுத்தப்பட்டன. இந்தத் திருவள்ளுவர்வீதி வெளியாண்டாள் ஸந்நிதிக்கு ஸமீபத்தில் அமைந்துள்ளது. இயந்திரங் களைக் கொண்டு ஆழ்துளை கிணறு அமைப்பதற்காகத் தோண்டும் போது 80 அடி ஆழத்திற்கு அப்பால் செம்மண் படிவங்கள் வெளிவரத் தொடங்கின. ஸ்ரீரங்கம்போன்ற தீவுப் பகுதிகளில் களிமண் அல்லது மணல் படிவங்கள் மட்டுமே காணப்படும். கந்தாடை இராமானுச முனி காலத்தில் கொண்டுவந்து சேர்க்கப்பட்ட செம்மண் பகுதியே அப்பொழுது வெளிவந்துள்ளன என்பது குறிப்பிடத்தது. தகுந்த போக்குவரத்து சாதனங்கள் இல்லாத அந்தக் காலத்தில் வடதிருக் காவிரியில் நீர் எப்பொழுதும் பெருகிவர எந்தப்பாலங்களும் இல்லாத அந்தப்பகுதியைக் கடந்து பெருமளவில் மண்கொண்டுவந்து தூர்த்தது இன்று எண்ணிப்பார்க்க இயலாத ஒரு மாபெரும் பணி.)*

கரவருஷத்திலே திருச்சிராப்பள்ளி சீர்மை முதலானதுகள் திருமலைராஜாவுக்கு நடந்தபின்பு, இந்த ராஜ்யத்துக்குக் கோனேரிராஜா கர்த்தராய், திருச்சிராப்பள்ளியிலே பாளையம் பண்ணிக்கொண்டிருக்கையில்; ஆனைக்காவலாருக்கு கோனேரிராஜா ஸஹாயம்பண்ணி, மஞ்சள்பொடியிறைத்து விளையாடும்படி பண்ணுவித்தும், திருமலை சோலை எல்லையை அமைத்துக் கொள்ளும்படி பண்ணுவித்தும், கோட்டை சாமந்தனார் சென்றப்பநாயக்கர் உள்ளிட்டாருக்குக் குத்தகையாகத் திருவிடையாட்டச் சீர்மை அமைத்துக் கொண்டும், கோயிலிலேயும், "புரவரி, காணிக்கை, பட்டு,

---

98.5. கந்தாடை இராமானுசமுனி அடையவளைந் தானுக்கு மேற்கே கூரநாராயண ஜீயரால் நிர்மாணிக்கப்பெற்ற தெப்பக்குளத்தினைச் சீரமைத்து, அதன் நடுவே மையமண்ட பத்தையும் கட்டிவைத்தார். மஹாமண்டலேச்வரரான கோனேரி ராஜா திருச்சிராப்பள்ளிப் பகுதியில் விஜயநகர சாம்ராஜ்யத்தின் பிரதிநிதியாக ஆண்டுவந்த காலம் அது. இவர் திருமலை ராஜாவிற்குப்பின் இந்தப்பகுதியை ஆண்டுவந்தார். ***கோனேரி ராஜா*** திருவானைக்காவலில் உள்ள சிலருடன் நட்புக்கொண்டு அவர்களைத் தங்களுடைய விருப்பப்படி வரிவசூலித்திக்கொள்ள வும், திருவானைக்காவினுடைய எல்லையாகத் திருமதில்கள் கட்டிக் கொள்ளவும் உதவிசெய்தார்.



*பரிவட்டம்" என்று அநேகம் பொன்களை எடுத்துக்கொண்டு, ஸ்த்த₂லத்தை நெருக்கி, ப₃ஹு₁ஈதிப₃ாதை₄ பண்ணுகையில்; இரண்டு ஜீயர்களும் ஏகாங்கிகளும் கோபுரத்திலேயேறி ஶரீரத்தையுபேக்ஷித்தாலும் உபத்₃ரவம் பண்ணுகையில், கந்தாடை ராமாநுஜன் இந்த சேதிகளெல்லாம் பலகாலும் நரசாநாயக்கருக்கு அறிக்கை பண்ணினபடியினாலே; தெற்குத்திசையில் ராஜகார்ய வ்யாஜமாக அநேக த₄னத்துடனே நரஸாநாயக்கர் வந்து கோனேரிராஜாவை ஸம்ஹரித்து,*

---

98.5.1. ஸ்ரீரங்கம் கோயிலுக்குச் சொந்தமான நிலங்களை கோனேரிராஜா தனக்கு வேண்டியவர்களான கோட்டை சாமந்தனார், மற்றும் சென்றப்ப நாயக்கர் ஆகியோருக்குக் குத்தகைக்கு விட்டார். 'புரவரி' 'காணிக்கைவரி' 'பட்டுவரி' 'பரிவட்ட வரி' போன்ற வரிகளை விதித்து ஸ்ரீரங்கம்கோயில் ஸ்ரீபண்டாரத்தில் சேர்த்து வைக்கப்பட்டிருந்த உயர்ந்த திருவாபரணங்களையும், பொற்காசுகளையும் கவர்ந்து சென்றான். இவ்வாறான கொடுமைகளை பொறுக்க ஒண்ணாத நிலையில் வெள்ளைக்கோபுரத்தின் மேலே ஏறி இரண்டு ஜீயர்களும், அழகிய மணவாளதாஸர் என்ற ஏகாங்கியும் தம் உயிரை மாய்த்துக் கொண்டனர்.

98.5.2. இதுபோன்ற பல அசம்பாவிதங்கள் தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருந்தன. கோனேரிராஜாவின் அடக்குமுறை குறித்து, கந்தாடை இராமானுசமுனி சாளுவ மன்னரின் தளபதியான நரசாநாயக்கருக்குக் கடிதம் அனுப்பினார். அதில் அவர் உடனே படையெடுத்துவந்து கோனேரி ராஜாவின் கொடுங்கோல் ஆட்சியை முடிவுக்குக் கொண்டு வருமாறு தெரிவித்திருந்தார்.

98.5.3. நள வருஷம் ஐப்பசிமாதம் 14ஆம் நாள் *(கி.பி.1495)* நாகம நாயக்கரும், அவருடைய மைந்தனான

*திருச்சிராப்பள்ளி உட்பட்ட ராஜ்யமும்; நளவருஷம் ஐப்பசிமாஸம் பதிநாலாந்தேதி நாக₃மநாயக்கரும் குமாரர் நரஸாநாயக்கரும் வந்து பெருமாளை ஸேவிக்க, கந்தாடை ராமாநுஜனும் அவர்களை ஸேவிக்கப் பண்ணிவைத்து, திருவிடையாட்டச் சீர்மையையும் பலரும் ஒத்திகையாக அநுப₄வித்த சீர்மையையும் பெருமாள் ஸ்ரீப₄ண்ட₃ாரத்திலே கண்டுகொள்ளும்படி நரஸாநாயக்கர் ராயஸமும் வாங்கி, திருவிடையாட்டங்களும் விடுவித்துக்கொண்டு; திருவிடையாட்டச் சீர்மையிலே, வெட்டிவரியும் நாட்டுத்தலையாரிக்குமுட்படப் புரவரியும் ஸர்வமாந்யமாகக் கழிப்பித்துக் கொண்டு, முத்துக்கல் கண்டமாலை பதக்கம் முதலான பல திருவாப₄ரணங்களும், அறுவாணம் திருவெண்சாமரம்*

---

நரசாநாயக்கரும் திருச்சிராப்பள்ளிக்குப் பெரும்படையுடன் வருகைதந்து கோனேரிராஜாவினை வெற்றிகொண்டார்கள். அப்போது நடந்த போரில் கோனேரிராஜா உயிர் நீத்தான். நராசா நாயக்கர் தான் வரும்போது ராயசாஸனம் *(மன்னனுடைய ஆணை)* ஒன்றினைக் கொண்டு வந்தார். கோயில் சொத்துக்களுடைய உரிமை, அதிலிருந்து வரும் வருமானங்கள் தனிநபர்களைச் சாராது என்றும் அந்த நிலங்களை பெரியபெருமாளின் சார்பில் கோயில் ஸ்ரீபண்டாரத்தாரே சாகுபடி செய்து அவற்றிலிருந்து வரும் வருமானம் ஸ்ரீபண்டாரத்திலே சேர்க்கப்படும் என்பதும் அரசாணையாகப் பிறப்பிக்கப்பட்டது.

98.5.4. கோயிலுக்கு மான்யமாக விடப்பட்ட திருவிடையாட்டச் சீர்மையிலிருந்து *(திருவிடையாட்டச்சீர்மை எனப்படுவது விஷ்ணு கோயில்களுக்கு விடப்படும் நிலம். தேவதானம் என்பது சிவன் கோயில்களுக்கு விடப்படும் நிலம்)* வெட்டிவரியும், புரவரியும் நாட்டுத் தலையாரிக்கு மான்யமாக கொடுத்தபிறகு அந்த நிலங்களிலிருந்து கிடைத்த வருமானத்தைக்கொண்டு முத்துக் கள் பதித்த கண்ட மாலை பதக்கம் (Necklace) வைரபதக்கம்,

*பட்டுவகை பலவும் ஸ்ரீப4ண்டா3ரத்திலே முதலிடுவித்து, கருவுகலத்திலே ஸ்தா2பிதமும் கட்டுவித்து, திருக்கொட்டாரம் நெல்லும் அமுதுபடியும் குத்தக்கொழிக்க நூறு கோயிலடியார் விழுக்காடு நரஸாநாயக்கன் உப4யமாக என்றென்றைக்கும் நடக்கும்படி வாங்கிவிட்டு, பெருமாள் திருவாராத4நக் கட்டளை சாத்தும்படி வர்க்கவகைக் கட்டளைகள் முதலானதுகளுக்கும் மாத4வய்யங்காரைக் கட்டளையிட்டு, ஒன்றாலொன்று குறையில்லாமல் நடப்பித்தார்.*

*அதுமுதலாக, வீரஸுந்த3ர ப்3ரஹ்மராயர் மதிளில் தெற்குவடக்குக் கோபுரங்களும் புதிதாகக் கட்டிவைத்து, ஆயிரக்கால் மண்டபத்திலே தளத்தில் காரைச்சாந்து பழகிப்*

---

திருவெண்சாமரம், வைரங்கள் பதித்த அறுவாணத்தட்டு, பட்டு பீதாம்பரங்கள் ஆகியவற்றை ஸ்ரீபண்டாரத்தில் சேர்ப்பித்தார்.

98.5.5 மேலும் நரசாநாயக்கர் தனது உபயமாக நெல் குத்தவும், அரிசியினை சுத்தம் செய்வதற்கும் 100 பணியாளர்களை *(கோயில் அடியார்களை)* ஸ்ரீபண்டாரத்தில் அமர்த்தினார். இந்த உபயத்திற்கும் பெருமாள் திருவாராதனக் கட்டளை மற்றைய கட்டளைகளுக்கு மாதவய்யங்காரை மேற்பார்வையாளராக நியமித்தார். *(இவர் கந்தாடை இராமானுசமுனி ஆதீனத்தின் 2ஆவது பட்டத்தை அலங்கரித்தவர்.)*

95.6. கந்தாடை இராமானுசமுனி வீரஸுந்தர பிரம்மராயர் மதிள் பகுதிகளில் தெற்கு, வடக்கு கோபுரங்களைப் புதிதாகக் கட்டிவைத்து, *(கட்டைகோபுரம்)* ஆயிரக்கால் மண்டபத்தின் தளத்திலே பூசப் பட்டிருந்த காரைச்சாந்தினை எடுத்துப் புதிதாகச் சாந்துப் பூச்சும் செய்வித்தார். வெள்ளைகோபுரம் என்று பிரசித்தி பெற்ற கிழக்கு கோபுரம் துலுக்கர் படையெடுப்பிற்கு முன்னர்

*போகையில் காரைபோட்டுச் சாந்துபணியும் பண்ணுவித்து, அகளங்கன் திருமதிள் கீழ்க்கோபுரத்திலே துலுக்காவணத் துக்கு முன்னே இடிவிழுந்து பழகிச் சேதமாயிருக்கையில் பழைய அடிப்பாரத்துக்குள்ளே மட்டமாக அடிப்பாரமும் மேலுமெடுத்துக்கட்டி, குடம் வரைக்கும் கோபுரமும் கட்டி, அதுக்குப்படியும் கட்டுவித்து, நிலைகாலிலே கோனேரிராஜா நாளையில் அந்த கோபுரத்தில் ஏறிவிழுந்த ஜீயர்களையும் ஏகாங்கிகளையும் உருக்களடிப்பித்து, எழுத்தும் வெட்டு*

---

இடிவிழுந்து சேதமாகியிருந்தது. அந்த கோபுரத்தை கீழ்த்தளம் வரை சரிசெய்து வெள்ளை கோபுரத்தை மீண்டும் கட்டி, கோபுரத்தின் உள்ளே, கலசங்களைச் சென்றடைவதற்குப் படியும் கட்டி வைத்தார். கோனேரி ராஜாவின் கொடுங்கோல் ஆட்சிக்கு எதிர்ப்பு தெரிவிக்கும் வகையில் கோபுரத்தின் உச்சிக்குச் சென்று தற் கொலை செய்துகொண்ட அழகியமணவாள தாஸர் எனப்படும் பெரியாழ் வார் மற்றும் இரண்டு ஜீயர்களுடைய உருவச்சிலை களையும் கோபுரத்தின் நடைபாதையின் வடக்கு, தெற்கு பகுதியில் அமைத்தார். அவ்வாறே தெற்குராஜகோபுரத்தின் மீதேறி உயிர் துறந்த அப்பாவய்யங்காருடைய உருவச்சிலையும் நிலைக் காலிலே பொறித்து வைத்தார். ஸ்ரீரங்கம் கல்வெட்டு எண்.521, AR.87. 1936-37.



*கந்தாடை இராமானுசமுனி கைங்கர்யமாக வெள்ளைக் கோபுரத்தில் பொறிக்கப்பட்ட பெரியாழ்வார் மற்றும் இரண்டு ஜீயர்களின் உருவச்சிலைகள்*



வித்து, கோபுரங்கள் நாயகன் பழகிச் சரிவாகையில் நன்றாகக் கட்டி, புதிதாகப் பொற்குடமும் கொடுங்கைகளும் வைப்பித்து, திருக்கொட்டாரத்திலே மூன்றாங்கூடும் நாலாங்கூடும் அஞ்சாங்கூடும் துலுக்காவணத்தில் தலையடையும் சரிந்து அடிப்பாரமும் பெருச்சாளி அறுத்துச் சேதமாகையில் இந்த மூன்று கூட்டிலுள்ள தளவரிசையுங் கட்டி, மலையிலும் பத்தடி உத்திரமுள்ள மரங்களுமழைப்பித்து உறுதியாகத் தலையடை ஸ்தூபியளவும் நலமாகக் கட்டுவித்து, அஞ்சு கூட்டிலும் பூர்வம் முதலாகவிருந்த மண்ணும் ஓடுகளும்

---

98.7. திருக்கோபுரத்து நாயனார் எனப்படும் அழகியசிங்கர் உருவச் சிலை பாழ் பட்ட நிலையிலிருந்ததால் (*மேட்டழகிய சிங்கர் ஸந்நிதி*) அந்த உரு வச்சிலையை சரி செய்து மண்டபங்களில் உள்ள கொடுங்கைகளை சரிசெய்து பொன்னாலான கலசங்களை ஸமர்ப்பித்தார்.



*வெள்ளைகோபுரம்*

98.8. திருக்கொட்டாரத்தின் அருகில் உள்ள நெற்களஞ்சியங்களில் மூன்று, நான்கு, ஐந்து கூடுகள் பெருச் சாளி அறுத்து அடிபாகம் சரிந்த நிலையில்

*குப்பைகளும், எடுப்பித்து, திருநடை மாளிகை உமிமண்ணு மெடுத்துப் புறம்பே போடுவித்து, திருநடைமாளிகையும் கட்டுவித்து, ஆயிரக்கால் திருமண்ட பத்திலொழுங்கையில் மேடையும் திருமண்டபத்துமுன்னில் மண்ணுமெடுப்பித்து, வெளியழகியானில் மண்ணும் அகளங்கன் திருவீதித் திருமதிளுக்குட்பட்ட மண்ணுமெடுப்பித்துச் செப்பனிடு வித்தும், ஒட்டியன் கலகத்துக்குப் பின்பு, அகளங்கன் திருமதிள் சரிந்து போகையில் அந்தச் சரிவைக் கட்டுவித்தும்,*

---

புதிதாக மரங்களையும் செங்கற்களையும் கொண்டு அவற்றை மீண்டும் கட்டுவித்தார்.

*(ஸ்ரீரங்கத்திற்கு வருகை தருபவர்கள் கொட்டாரத்தில் தான்ய லக்ஷ்மி ஸந்நிதிக்கு அருகில் அமைந்துள்ள இந்த நெற்களஞ் சியங்களைப் பார்க்கலாம். ஒவ்வொரு நெற்களஞ்சியத்திலும், அதாவது ஒவ்வொரு கூண்டிலும் சுமார் 5,000 கலம் நெல்லினை சேமித்து வைக்கலாம். அந்தக் காலத்தில் ஐந்து நெற்களஞ்சியங் களிலும் சுமார் 25,000 கலம் நெல்லினை சேமித்து வைக்க ஏற்பாடு செய்துவைக்கப் பட்டிருந்து. இன்றைக்கு அந்த நெற்களஞ்சியங்கள் பாழடைந்த மண்டபங்களாகக் காட்சியளிக்கின்றன. அவைகளைச் சுற்றி காட்டுப் புதர்கள் மண்டியுள்ளன. கூடுகளிலும், புதர்களிலும் பலவகை ஸர்ப்பஜாதிகள் நித்யவாஸம் செய்கின்றன. தமிழ்நாட்டில் உள்ள பல திருக்கோயில்களில் ஆயிரங்கால் மண்டபங்களும், ஆழ்வார் ஆசார்யர்கள் ஸந்நிதிகளும் இன்றைக்கு நெல் சேமிப்புக் கிடங்கு களாக விளங்குகின்றன. பாதுகாக்கப்படவேண்டிய நெற்களஞ்சி யங்கள் பாழ்பட்ட நிலையில் உள்ளன. ஒருவேளை அவையெல்லாம் இன்னொரு கந்தாடை இராமானுசமுனியின் வருகைக்கு காத்திருக் கின்றனவோ என்னவோ? யாரே அறிவர்!)*

98.9. ஒட்டியன் கலகத்தினால் *(ஒரிசா நாட்டிலிருந்து வந்த கொள்ளைக்காரர்களால்)* அகளங்கன் திருச்சுற்று திருமதில்கள்

*அணியரங்கன் திருமுற்றத்தில் ஆக்₃நேய ப₄ாக₃த்திலே திரு வூஞ்சல் மண்டபம் நேர்த்தியாகக் கட்டுவித்துத் திருநாள் நடப் பித்தும், தி₃வ்யவிமாநமும் வாஹநங்களும் ஸ்வர்ண மாகப் பூசுவித்தும், ஸந்நிதி₄யிலே அநேக திருவாப₄ரணங் களும் அநேக உபகரணங்களும் பண்ணுவித்தும், விட்டலேஶ்வரன் கோயில் ஜீர்ணோத்₃த₄ாரணம் பண்ணிப் பரக்கக் கட்டுவித்தும், இந்தப்படி திருத்தோப்புகளும் பலவகையில் கைங்கர்யங் களும் பண்ணுகையில்; பெருமாள் உகந்தருளி, "**குலஶேக₂ரப் பெருமாள்**" என்று திருவுள்ளம் பற்றியருளினார்.*

*அதுமுதலாக உடையவர் கல்பித்த தே₃ஶாந்தரி ஏகாங்கிகளிலே **கந்தாடைராமாநுஜன்** அதீ₄நமாகப்பட்டமும்,*

---

சரிந்திருந்தன. அவற்றை கந்தாடை இராமானுசமுனி சரிசெய்தார். சேரனைவென்றான் மண்டபத்திற்கு எதிரில் புதிதாகத் திரு ஊஞ்சல் மண்டபம் கட்டுவித்து, ஊஞ்சல் திருநாளையும் ஏற்படுத்தி வைத்தார். *(இன்றைக்கும் ஊஞ்சல் மண்டபத்தில் சிலை வடிவில் கந்தாடை இராமானுசமுனி தமது தலையில் குல்லாவுடன் கையில் வாளுடனும் எழுந் தருளியுள்ளார். ஸ்ரீரங்கம் செல்பவர்கள் ஊஞ்சல் மண்டபத்தில் அமைந்துள்ள இந்த உருவச்சிலையை ஸேவிக்கலாம்)*

98.9.1. விமானங்களுக்குப் பொற்பூச்சு இடுவதற்கான ஏற்பாடுகளைச் செய்வித்தார். அனேக திருவாபரணங்களையும், மற்றைய உபகரணங்களையும் ஸ்ரீபண்டாரத்திலே சேர்ப்பித்தார். விட்டலேச்வரன் ஸந்நிதியை *(ரங்கவிலாஸ் மண்டபத்தின் கிழக்குப் பகுதியில் அமைந்துள்ளது இந்த ஸந்நிதி)* கட்டுவித்து அதைச்சுற்றி தோப்பு களை ஏற்படுத்திவைத்தார். இத்தகைய செயல்களால் பெரிய பெருமாள் கந்தாடை இராமானுச முனியை '**குலசேகரப் பெருமாள்**' என்று திருவுள்ளம்பற்றியருளினார்.

98.10. உடையவர் காலந்தொட்டு ஏற்படுத்தி வைக்கப் பட்ட தேசாந்திரி ஏகாங்கி பட்டமானது கந்தாடை இராமானுச

ஸ்ரீரங்க₃நாராயண ஜீயரைப்போலே, மட₂மும், ஸ்ரீரங்க₃ராஜர் திருவாராத₄நமும், தே₃ஶாந்தரி வைராகி₃களுக்கு முத்₃ரை போடுகிறதும், கோவிலிலே ப்ரஸாத₃ பணியாராதி₃ மட₂ வரிசையாகப் பெற்றும் நடந்துவருகிறது. இவர் ராயருடைய தமயனாகையாலே குல்லாவும், அதின் மேலே வைராக்₃ய வேஷத்துக்குத் தகுதியாக ஶிரோ வேஷ்டியும் கட்டினபடியாலே அந்த அதீ₄நத்துக்கு வந்தவர்கள் அப்படி கட்டுகிறதாக நடக்கிறது. இவர், கோட்டை சாமந்தனார் சென்றப்பநாயக்கருள்ளிட்டார் குத்தகை கொண்டுநின்றதாய், கோனேரிராஜா அநுப₄வித்ததும் பலரும் ஒத்திப்பிடித்து அநுப₄வித்ததுமான

---

முனியால் வகிக்கப்பட்டது. தேசாந்திரி வைராகிகளுக்கு பஞ்ச ஸம்ஸ்காரம் பண்ணுவதும், ஸ்ரீரங்கராஜர் திருவாராதனமும் கந்தாடை இராமானுசமுனியால் மேற்கொள்ளப்பட்டது. அவருடைய மடத்திற்கு கோயில் பிரஸாதத்தில் ஒருபங்கு அனுப்பிவைக்கும் படியான மரியாதையைப் பெற்றார். இவர், சாளுவகுல மன்னனான ராமராஜாவின் தமையனாரானகையாலே அரசருடைய சின்னமான முடி (குல்லா) தரித்தும், வைராக்கிய வேஷத்திற்கேற்ப காவி வேஷ்டியினை உடுத்தியும் இருந்து வந்ததாலே இவருடைய பட்டத்திற்கு வருபவர்கள் இவ்வாறே குல்லாவினைத் தரித்தும், காவி வேஷ்டியை உடுத்தியும் இருப்பர்கள். இந்த பட்டத்தை அலங்கரிப்பர்கள் மட்டுமே திருக்கோயிலுக்குக்குச் செல்லும் போதெல்லாம் முடிதரித்துச் செல்வதற்கான உரிமை பெற்றவர்கள்.



*கந்தாடை இராமானுசமுனி பட்டத்தில் எழுந்தருளியிருப்போர் தரித்துக்கொள்ளும் முடி*

98.11. கோனேரிராஜாவின் செல்வாக்கைப் பயன்படுத்தி, கோட்டை சாமந்தனார், சென்றப்ப நாயக்கர் ஆகியோரால்

*ஊர்களை ஸ்ரீப₄ண்ட₃ாரத்திலே சேர்த்த க்₃ராமங்கள் அறுபத்தொன்று.*

---

குத்தகைக்கு எடுத்து அனுபவித்து வந்த நிலங்களை *(61 கிராமங் களை)* மீட்டு ஸ்ரீபண்டாரத்திலே சேர்ப்பித்தார்.

98.12. ஸ்ரீரங்கம் கோயிலில் காணப்படும் கி.பி.1489ஆம் ஆண்டு கல்வெட்டின்படி (*ஸ்ரீரங்கம் கல்வெட்டு எண்.346* A.R.No13 of 1938-1939, *இரண்டாம் திருச்சுற்றான ராஜ மஹேந்திரன் திருச்சுற்றின் கிழக்குப் பகுதியில் அமைந்துள்ளது*) இவர் கந்தாடை அயோத்யா ராமாநுஜ ஐயங்கார் என்ற திருநாமத் தோடு அழைக்கப்பட்டு வந்ததைக் காண்கிறோம்.

98.12.1. மேலும் ஸ்ரீரங்கம் கல்வெட்டு எண்.345, A.R.No.22 of 1938-1939 இரண்டாம் திருச்சுற்றான ராஜ மஹேந்திரன் திருச்சுற்றின் கிழக்குப் பகுதியில் அமைந்துள்ளது. இந்தக் கல்வெட்டானது கந்தாடை இராமானுசமுனி திருவரங் கத்திற்கு எழுந்தருளுவதற்கு முன்பே, கி.பி.1483-ஆம் ஆண்டு சாளுவ கம்பரசர் மல்லையர் என்பவரால் ஏற்படுத்தப்பட்டது என்பதும் குறிபிடத்தக்கது. இந்தக் கல்வெட்டின்படி இவர் அயோத்ய ராமாநுஜய்யன் என்று வழங்கப்படுகிறார். பெரும்பாலான கல்வெட்டுகளில் சாத்தாத பரம ஏகாங்கி அதாவது சாத்தாத வகுப்பினரைச் சார்ந்த துறவி என்ற பொருளில் இவர் குறிப்பிடப்படுகிறார்.

98.12.2. விக்ரமசோழன் திருவீதியில் அமைந்துள்ள இராமானுச கூடத்தின் நிர்வாஹ அதிகாரியாகவும் இவர் விளங்கி வந்தார். இவருடைய திருநாமத்திற்கு முன்பு கந்தாடை என்ற சொல் வந்ததற்கான காரணத்தினைக் கோயிலொழுகு விவரிக் கின்றது. ஸ்ரீமணவாளமாமுனிகளின் அஷ்டதிக்கஜங்களில் ஒருவரான கோயில் கந்தாடைஅண்ணன் திருவடிகளை

பற்றியிருந்ததால் இவருக்குக் கந்தாடை இராமானுசதாஸர் என்ற தாஸ்ய நாமம் ஏற்பட்டது.

*(**ஸ்ரீவைஷ்ணவ குருபரம்பரை நூலான யதீந்த்ர ப்ரவண ப்ரபாவத்தின் வழி அறியப்படும் செய்திகள்:** கந்தாடை இராமானுச முனி என்ற அழைக்கப்பட்டு வரும் அயோத்தியா ராமாநுஜய்யங்கார், ஸ்ரீமணவாளமாமுனிகளின் திருவடிகளில் ஆச்ரயிக்க வேண்டு மென்று பெருவிருப்புக் கொண் டிருந்தார். ஸ்ரீமணவாளமாமுனிகள் கி.பி.1443-ஆம் ஆண்டு பரமபதித்து விட்டார். திருமலையில் அயோத் தியா ராமாநுஜ அய்யங்கார் கைங்கர்யங்களில் ஈடுபட்டுக் கொண்டி ருந்த காலத்தில் ஸ்ரீமணவாளமாமுனிகளின் திருவடிகளில் ஆச்ரயிக்க இயலாத குறையைப் போக்கி, திருமலைக்கு எழுந்தருளிய கோயில் கந்தாடையண்ணன் திருவடிகளில் ஆச்ரயித்தார். ஆகவே குருபரம்பரை நூல்கள் தெரிவித்திடும் செய்திகளின்படி திருவரங்கத்திற்கு வருவதற்கு முன்பே கந்தாடை இராமானுசமுனி என்ற பெயரைக் கொண்டார் அயோத்தியா இராமானுச அய்யங்கார் என்று பெறப்படுகிறது.)*

98.13.: கி.பி.15ஆம் நூற்றாண்டின் மத்திய காலத்தி லிருந்து அந்த நூற்றாண்டு இறுதிவரைத் திகழ்ந்தச் சங்கமகுல மன்னர்களான மல்லிகார்ஜுனன், இரண்டாம் விருபாக்ஷன், பிரவுட தேவராயன் போன்றவர்களது வரலாற்றையும், மண்ட லேசுவரனாய்த் திகழ்ந்து பின்பு சாளுவகுலப் பேரரசனான நரசிம்மன், அவனது தளபதி நரசநாயக்கன்; சோழநாட்டு மண்டலேசுவரன் திருமலை தேவமகாராஜ போன்றவர்களின் வரலாற்றையும் *(திருமலைய்யன், திருமலைதேவ மஹாராஜா, திருமலை ராயர் ஆகிய பெயர்கள் ஒரு நபரையே குறிக்கும்.)* இதே கால கட்டத்தில் தமிழகத்தின் பெரும் பகுதியை (தொண்டை மண்டலம் மற்றும் சோழ மண்டலம்) ஆட்சிபுரிந்த கோனேரி தேவமகாராயரின் ஓரளவிற்கு அறிந்து கொண்டால்தான் கந்தாடை இராமானுசமுனி பற்றிய பல அரியசெய்திகள் கோயிலொழுகில் குறிப்பிடப்பட்டுள்ளதை நாம் அறிந்து கொள்ள இயலும்.

98.13.1.: கி.பி.1371ஆம் ஆண்டு தொடங்கி *(நம்பெருமாள் ஆஸ்தானம் எழுந்தருளியபிறகு வீரகம்பண்ண உடையார் மதுரை சுல்தான்களை வென்று திருப்புல்லாணி வரை சென்று வெற்றி கொண்டார்.)* தமிழகம் விஜயநகரப்பேரரசின் ஆதிக்கத் திற்குட்படலாயிற்று. இதனால் இப்பேரரசின் பிரதிநிதிகளாக மண்டலேசுவரர்களும், மகா மண்டலேசுவரர்களும் அவ்வப் பகுதிகளுக்கு தலைவர்களாய்த் திகழ்ந்து ஆட்சி புரியலாயினர். இதுவே 15ஆம் நூற்றாண்டிலும் தொடர்ந்தது. பின்னர் கி.பி.1526ஆம் ஆண்டு தொடங்கி இந்தப் பேரரசின் ஆட்சி யாளர்களாக மதுரை, தஞ்சை, செஞ்சி நாயக்கர்கள் தமிழகத்தின் பெரும்பகுதியை ஆட்சிபுரிந்துவந்தனர்.

98.13.2.: கி.பி. 15ஆம் நூற்றாண்டின் இறுதியில் விஜய நகரப் பேரரசை, சங்கமகுல மன்னர்களான மல்லிகார்ஜுனன், விருபாக்ஷன் போன்றவர்கள் ஆட்சிபுரிந்த போது தமிழகத்தை இம்மன்னர்களின் ஆட்சியாளனாக *(மகா மண்டலேசுவரன்)* திருமலை தேவமகாராஜன் இருந்து வந்தான். கி.பி. 1450ஆம் ஆண்டு தஞ்சாவூர் மாவட்டம் பட்டீச்வரம் திருக்கோயிலில் வெட்டுவிக்கப்பெற்ற கல்வெட்டொன்று சாளுவ திருமலைய்ய தேவனை சோழ மண்டலத்தின் மகாமண்டலேசுவரன் என்று குறிப்பிடுகிறது (A.R.E. 524 of 1920). இதே போன்று தஞ் சாவூர் மாவட்டம் பாபநாசத்தில் உள்ள இரண்டு கல்வெட்டுக் கள் சாளுவ திருமலைய்யாவை விஜயநகர அரசின் சோழ மண்டல ஆட்சியாளனாகக் குறிப்பிடுகின்றன (A.R.E. 527 of 1920, 448 of 1922). இவை முறையே கி.பி 1452 மற்றும் 1458ஆம் ஆண்டுகளுக்கு உரிய கல்வெட்டுக்களாகும்.

98.13.3. திருச்சி, தஞ்சைப் பகுதிகளான சோழ மண்டலத்தை ஆண்ட சாளுவதிருமலைராஜாவின் ஆட்சி கி.பி.1471 - தமிழ் கரவருடம் இறுதி எய்தியது என்பதனைக் கோயிலொழுகு குறிப்பிடுகிறது.

"…..முன் கர வருஷத்திலே திருச்சிராப்பள்ளி சீர்மை முதலானதுகள் திருமலை ராஜாவுக்கு நடந்த பின்பு இந்த ராஜ்யத்திற்கு கோனேரி ராஜா கர்த்தராய் திருச்சிராப் பள்ளியில் பாளையம் "பண்ணிக் கொண்டிருக்கையில் . . . " என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

98.13.4. எனவே திருமலை தேவமகாராஜனின் ஆட்சிக்குப் பின்பு சோழநாட்டு அரசுரிமை கோனேரிராயன் என்பானுக்கு மாறியது என்பது தெளிவாகின்றது. பின்பு இவன் சோழ மண்டலம் மட்டுமின்றித் தொண்டை மண்டலத் துக்கும் மகா மண்டலேசுவரனாய்த் திகழ்ந்து தனி ஆட்சி நடத்தினான் என்பதைக் கல்வெட்டுக்கள் உறுதி செய் கின்றன.

98.13.5. இம்மன்னவனின் வரலாறு கூறும் கல்வெட்டு களில் திருவரங்கம் கோயில் கல்வெட்டு சக ஆண்டு 1414 (கி.பி.1492), பரீதாபி ஆண்டு ஆவணி 26ஆம் நாள் வெள்ளிக் கிழமை, உத்திரநாளில் வெளியிடப்பெற்ற கோனேரிராய னின் சாசனமாகும். *(ஸ்ரீரங்கம் கல்வெட்டு எண்.351* A.R.No.115 of 1937-38 *கார்த்திகை கோபுரவாயிலின் நிலைவாசலில் இந்தக் கல்வெட்டு அமைந்துள்ளது.)* இக்கல்வெட்டு கோனேரிராயன் அரங்கன் கோயில் கார்த்திகை கோபுரவாயி லுக்குக் கதவுகள் இட்டமையை விவரிக்கின்றது. *(கி.பி.2002-ஆம் ஆண்டு ஸ்ரீரங்கம் கோயிலில் திருப்பணிகள் மேற்கொள்ளப்பட்டபோது காலவெள்ளத்தில் கரைந்து நின்ற நேர்த்தி வாய்ந்த இந்தக்கதவுகள் அந்த இடத்தைவிட்டு அகன்று திருமடைப்பள்ளியில் தஞ்சம் புகுந்தன. அங்கு எரிந்து கொண்டிருந்த நெருப்போடு அலை கலந்து அதன்வழி ஒரு வரலாற்று சின்னம் அழிவை நோக்கிச் சென்றது. இந்தக் கதவுகளைப் பாதுகாத்திட வேண்டும் என்ற பதிப்பாசிரியருடைய முயற்சிகள் பலனற்றுப் போயின. இந்த நூல் எழுதப்படும்*

*2005-ஆம் ஆண்டில் கார்த்திகை கோபுர வாசலுக்குக் கதவுகள் இல்லை என்பதே உண்மை. கதவுகள் பொறுத்தப்பட்டதாகப் பொறிக்கப்பட்ட கல்வெட்டை யாரும் அழித்திட இயலாது. இந்தக் கார்த்திகை கோபுர வாயிலின் முன்புறத்தில்தான் கார்த்திகை மாதம் கார்த்திகை நக்ஷத்திரத்தன்று நம்பெருமாள் சொக்கப்பனை என்று அழைக்கப்படும் தீபோத்ஸவம் கண்டருளுகிறார்.)*

98.13.6. **திருவரங்கம் கோயிலில், பரீதாபி ஆண்டு மார்கழி மாதம் பொறிக்கப் பெற்றுள்ள கல்வெட்டு, கோனேரி ராயன் கி.பி.1492இல் அரங்கனுக்கு அளித்த நிலம் பற்றிக் கூறுகின்றது.** *(ஸ்ரீரங்கம் கல்வெட்டு எண்.352* A.R.No.116 of 1937-38 *கார்த்திகை கோபுரவாயிலின் நிலைவாசலில் அமைந்துள்ளது.)*

98.13.7. மேற்குறித்த திருவரங்கம் கல்வெட்டுக்கள் இரண்டும் கோனேரிராயனின் வரலாற்றில் சிறப்பிடம் வகிக்கும் கல்வெட்டுக்களாகும். திருவரங்கத்து அரங்கன் பால் மிகுந்த பக்தி உள்ளவன் என்பதை இக்கல்வெட்டுக்கள் பறை சாற்றுகின்றன.

98.13.8. கோனேரிராயன் பற்றி நேரடியாகப் பேசும் இக்கல் வெட்டுக்கள் தவிர இவனது வரலாற்றோடு தொடர் புடைய மூன்று கல்வெட்டுக்கள் திருவரங்கம் திருக்கோயிலில் உள்ளன. முதல் இரு கல்வெட்டுகள் திருவரங்கம் திருக் கோபுரம் ஏறி உயிர்துறந்த பெரியாழ்வார், அப்பாவய்யங்கார் ஆகியோர் பற்றி விவரிக்கின்றன. கோயிலொழுகு இந்த நிகழ்ச்சிகளைத் தெளிவாகத் தெரிவித்துள்ளது.

98.13.9. மூன்றாம் கல்வெட்டு கோனேரிராயனின் மகன் பற்றிய ஒரு குறிப்பினை மட்டும் சுட்டி நிற்கின்றது. இம்மூன்று கல்வெட்டுக்கள் அடிப்படையில் கோனேரிராயன் பற்றிய செய்திகளையும், அந்த மன்னன் வரலாற்றோடு

தொடர்புடைய கந்தாடை இராமானுசமுனியின் வரலாற்றையும் இனிக் காணலாம்.

98.14. கோனேரிராயன், சங்கமகுல பிரபுடதேவராயனைப் பேரரசனாக ஏற்றுக் கொண்டவன் என்பதும், பின்னர் வந்த சாளுவகுல விஜயநகரப் பேரரசர்கள், நரசாநாயக்கன் ஆகியோருடைய அரசியல் செல்வாக்கினை ஏற்காதவன் என்பதும் வரலாறு பறைசாற்றும் உண்மைகள்.

98.14.1. தெற்கு ராஜகோபுரவாயிலின் கீழ்ப்புறம் கல்வெட்டுக் குறிப்புடன் உள்ள ஒரு சிலையும், கிழக்குக் கோபுரங்களுள் மிகப்பெரிதான வெள்ளைக் கோபுரவாயிலின் வடபுறம் மற்றும் தென்புறம் உள்ள உருவச்சிலைகளும், அங்குள்ள கல்வெட்டுக் குறிப்புகளும் தமிழக வரலாற்றில் 15ஆம் நூற்றாண்டில் நிகழ்ந்த பல அரிய நிகழ்ச்சிகளை எடுத்துக்காட்டும் வண்ணம் திகழ்கின்றன. ஸ்ரீரங்கம் கல்வெட்டு எண். 521 A.R.No.87 of 1936-37 வெள்ளைகோபுரத்தின் உட்புற வாயிலின் வடக்குப் பகுதியில் அமைந்துள்ளது.

98.14.2. ஆசியாவிலேயே மிகப்பெரிய ராஜகோபுரமாகத் திகழும் திருவரங்கத்துத் தெற்குக் கோபுரத்தின் கீழ்ப்புற நிலையில் நெற்றியில் திருமண்காப்பு தரித்து, மார்பில் மாலைபுரள கூப்பிய கரங்களுடன் உள்ள கற்படிமமே அப்பாவய்யங்காருடையதாகும்.

98.14.3. இவ்வுருவச் சிலைக்கு சற்று மேலாக உள்ள கல்வெட்டில் "சுபமஸ்த்து. சௌமிய வருஷம் தைமாதம் நாலாம் தேதி வெள்ளிக்கிழமை நாள் ஸ்ரீரங்கநாத சுவாமிக்கு படித்தனம் ஒன்றும் நடத்தாமல் மிகவும் அன்னியாயம் பண்ணுகையில் குடுக்க மாட்டாதே இந்த திருக்கோபுரத்தில் ஏறி விழுந்து இறந்தகாலம் எடுத்த அழகியமணவாளதாசன் ஸ்ரீகாரியம்

அப்பாவய்யங்கார். இவருக்கு சுவாமி யெக்காளகள் திருத் தேர்புறப்பாட்டு முதலான அதிகவரிசை பிரசாதித்தருளி பிரம்மமேத சமஸ்காரம் பண்ணிவித் தருளி முழுபடித்தனம் கொண்ட ருளினார். யிப்படி நடந்த இந்த முழு படித் தனத்துக்கு விரோதம் பண்ணினவன் ரெங்கத் துரோகியாய் போகக் கடவன். அனுகூலம் பண்ணினவன் ஸ்ரீலட்சுமி பரிபூர்ண கடாக்ஷ பாக்யஸ்தனா இருக்கக் கடவன்" என்று எழுதப்பட்டுள்ளது.

98.14.4. இதே திருக்கோயிலின் கிழக்குக் கோபுரமான வெள்ளை கோபுரத்தின் வடபுற நிலைக்காலில் நெற்றியில் திருமண்காப்பு தரித்து, கையில் தூக்கிய அரிவாள் ஒன்றினைத் தோளில் சுமந்த வண்ணம், இடுப்பில் ஆடை தரித்துக் கழுத்தில் மாலையும் சூடி அரங்கனை வணங்கும் கோலத்தில் ஓர் அடியவர் சிலை உள்ளது. இதற்கு மேலாக ஒரு கல்வெட்டும் உள்ளது. இக்கல்வெட்டு "ஸ்வஸ்தி ஸ்ரீ சௌமிய வருஷம் தைமாதம் இருபதாம் தேதி வெள்ளிக்கிழமை ஸ்ரீரங்கநாத சுவாமிக்கு படித் தனம் ஒன்றும் நடத்தாமல் மிகவும் அன்னியாயம் பண்ணுகையில் பொறுக்க மாட்டாதேயிந்த திருக்கோபுரத்திலேறி விழுந்து இறந்த காலமெடுத்த அழகியமணவாளதாசன் ஸ்ரீகாரியம் பெரியாழ்வார். . ." என்று கூறுகிறது. எனவே தோளில் அரிவாள் சுமந்து வணங்கும் கோலத்திலுள்ள இவ்வுருவச் சிலை பரமபதம் அடைந்த பெரியாழ்வார் என்பவருடையது என்று தெளிவாகிறது.

98.14.5. இவ்வுருவச் சிலைக்கு நேர் எதிர்ப்புறம் இரண்டு ஜீயர்களின் திருவுருவங்கள் நிலைக்காலில் காணப்படு கின்றன. இவர்கள் இருவரும் நெற்றியில் திருமண்காப்பு தரித்து, தலையில் முண்டாசு, *(ப்ரபந்த பாகை)*, இடுப்பில் ஆடை, அதன் மேல் கட்டப்பட்ட துண்டு, மார்பில் மாலைகள் புரள கையில் துறவுக் குரிய முக்கோலும் தாங்கி அரங்கனை வணங்கும் கோலத் திலுள்ளனர். இவ்வுருவச் சிலைகள் இரண்டும் ஜீயர்களுடையது என்பது தோற்றத்தால் விளங்குகின்றது.

98.14.6. இந்த ஜீயர்களைப் பற்றிய கல்வெட்டுக் குறிப்புகள் இல்லை யாயினும் கோயிலொழுகில் உள்ள ‘கந்தாடை ராமானுஜதாஸர் கைங்கர்யம்’ எனும் பகுதியில் இரண்டு ஜீயர்களும் ஏகாங்கிகளும் கோபுரத்திலே ஏறி சரீரத்தை யுபேக்ஷித்ததாலும்... என்று கூறுகிறது. எனவே இங்கு காணும் இரண்டு ஜீயர்களும் பெரியாழ்வார், அப்பாவய்யங்கார் போன்று கோபுரத்தின் மேலேறி உயிர் துறந்தவர்கள் என்பதை அறிய முடிகிறது.

98.15. கி.பி. 1489 தமிழ் சௌமிய ஆண்டு தைமாதம் தெற்கு கோபுரத்திலிருந்தும், வெள்ளைக் கோபுரத்திலிருந்தும் அப்பாவய் யங்கார், பெரியாழ்வார் மற்றும் இரண்டு ஜீயர்களும் கீழே விழுந்து உயிர்த்தியாகம் செய்ததற்கானக் காரணங்கள் என்ன? என்பதை ஆராய முற்படும்போது, இதற்கான விளக்கத்தைக் கோயிலொழுகு விரிவாகப் பேசுகிறது.

98.15.1. கரவருடம் [கி.பி.1471இல்] திருச்சிராப்பள்ளி, தஞ்சாவூர் பகுதிகளுக்கு விஜயநகரப் பேரரசின் ஆளுனராய்த் திகழ்ந்த திருமலைராயனின் மறைவிற்குப் பின்பு, கோனேரி ராஜா பாளையக்காரராகத் திகழ்ந்ததாகவும், இவர் திருவானைக்கா கோயிலுக்கு எல்லா உதவிகளையும் செய்ததோடு, திருவரங்கம் கோயிலுக்குரிய புரவரி, காணிக்கை வரி, பட்டு வரி, பரிவட்ட வரி போன்ற பல வருவாய்களைப் பிடுங்கித் திருவானைக்கா கோயிலுக்கு அளித்த செய்தியையும் அறியமுடிகிறது. திருவரங்கன் கோயில் நிலங்களைக் கோட்டை சாமந்தனார், சென்றப்ப நாயக்கன் என்பவர்களுக்குக் குத்தகைக்குக் கொடுத்ததோடு, கோயில் நிர்வாகிகளுக்குப் பல இடையூறுகளை அளித்தமையால், இதற்கு எதிர்ப்புத் தெரிவிக்கும் வண்ணம் இரண்டு ஜீயர்களும், ஏகாங்கிகளும் திருவரங்கம் கோபுரத்திலேறி கீழே விழுந்து உயிர்த்தியாகம் செய்தனர் என்ற செய்தியும் கூறப்பெற்றுள்ளது. இதன் பின்னர் கந்தாடை ராமாநுஜதாசர் இந் நிகழ்ச்சிகளைக் குறித்து விஜயநகரத் தளபதி நரசநாயக்கனுக்குப் பலமுறை

அறிக்கை அனுப்பியதால், நரசநாயக்கன் திருச்சிராப்பள்ளி வந்து கோனேரிராயனுடன் போரிட்டு வென்ற பின்னர் திருவரங்கம் ஆலயம் சீர் பெற்றதாகவும் கூறுகின்றது.

98.15.2. இவை அனைத்தையும் தொகுத்து நோக்கும் போது கோனேரிராயனின் நசுக்குதலுக்குத் திருவரங்கம் கோயில் நிர்வாஹம் ஆட்பட்டதால் இரண்டு ஜீயர்கள், அப்பாவய்யங்கார், பெரியாழ்வார் முதலியவர்கள் கோபுரங்களின் மேலிருந்து விழுந்து, தம் இன்னுயிர் ஈந்து கோனேரிராயனின் நெருக்குதல்களுக்கு முடிவுகட்டினர் என்ற செய்தி பெறப்படுகிறது. இந்நிகழ்ச்சிகளை மையமாகக் கொண்டு இதுவரை ஆராய்ந்த வரலாற்று ஆராய்ச் சியாளர்கள், கோனேரிராயனை வைணவ எதிரியாய்க் கொண்டு, ஒரு கொடுங்கோலனாகவே குறிப்பிட்டுள்ளனர்.

98.15.3. கி.பி.1486இல் விஜயநகர மன்னன் பிரபுட தேவராயனின் ஆட்சி சாளுவநரசிம்மனால் கவிழ்க்கப் பட்டதை யும், இதனால் விஜயநகரப் பேரரசின் சங்கம குலம் அழிந்து சாளுவ குலம் உதயமாயிற்று என்பதையும், சங்கம குல மன்னர்களைப் பேரரசர்களாக ஏற்றுக் கொண்ட கோனேரிராயனால் தனக்குச் சமமான பதவியில் இருந்தவர்களைப் பேரரசர்களாக ஏற்றுக் கொள்ள இயலவில்லை என்பதையும் முன்பே கண்டோம். இதனால்தான் கி.பி. 1486லிருந்து 1495 வரை கோனேரிராயனின் தனி அரசு தொடர்ந்து விஜயநகர அரசுக்கும் இவனுக்கும் பகைமை மூண்டது.

98.15.4. கோனேரிராயனின் திருக்கோயிற் பணிகள் எந்த அளவுக்குச் சிவாலயங்களுக்காக செய்யப் பெற்றனவோ, அந்த அளவு வைணவ ஆலயங்களுக்கும் நடந்தன. இதனை இம்மன்னவனது பல கல்வெட்டுகள் தெளிவாக எடுத்துக் காட்டுகின்றன. திருப்பதி திருமலைக் கோயிலில் நாள்தோறும் தன் பெயரால் அமுதுபடி செய்திட சோழநாட்டு ஊர்கள்

இரண்டினை வழங்கிய கல்வெட்டு திருமலையில் காணப்படு கிறது. பந்த[ணை]நல்லூர் ஆதிகேசவனுக்குப் பல அறக் கொடைகளையும் அளித்துள்ளான். திருவரங்கம் திருக் கோயிலுக் கும் கோனேரிராயன் பல திருத்தொண்டுகள் செய்துள்ளதை திருவரங்கத்துக் கல்வெட்டுக்கள் பேசுகின்றன.

98.15.5. திருவரங்கம் திருக்கோயிலில் சிலைகளாக நிற்கும் அப்பாவய்யங்கார், பெரியாழ்வார் மற்றும் ஜீயர்கள் இருவரின் உயிர்த் தியாகத்திற்குப் பிறகு, கந்தாடைராமானுஜ தாசரின் வேண்டுகோளுக்கிணங்க நரசநாயக்கன் தன் பெரும் படையுடன் வந்து கோனேரிராயனுடன் போரிட்டு, அவனைத் தோல்வியுறச் செய்து, சோழமண்டலத்து ஆட்சியுரிமையை கி.பி. 1496இல் அகற்றினான் என்பதைக் கோயிலொழுகும், கல் வெட்டுக்களும் மெய்ப்பிக்கின்றன.

98.15.6.] கி.பி.1496இல் நரசநாயக்கன் கோனேரிராயனை முறியடிக்க 'திக் விஜயம்' வந்த நிகழ்ச்சியைத் தென் ஆர்க்காடு மாவட்டம் வாரன்ஜரம் எனும் ஊரில் உள்ள கல்வெட்டொன்று வலியுறுத்துகின்றது. மேலும் திருமலாம்பா எழுதிய '***வரதாம்பிகா பரிணயசம்பு***' எனும் தெலுங்கு மொழிக் காவியம் நரசநாயக்கன் சோழநாட்டு மன்னனுடன் *(கோனேரிராயனுடன்)* நிகழ்த்திய போர் பற்றி விவரிக்கின்றது.

98.15.7. மேலே கூறப்பெற்றுள்ள அனைத்து வரலாற்று ஆவணங்களையும் தொகுத்து நோக்கும்போது கோனேரி ராயனைப் பற்றி இரண்டுவிதமான மாறுபட்ட கருத்துக்கள் தெளிவாக உள்ளன. கோனேரிராயன் மிக ஆழமான அசைக்க முடியாத வைணவ பக்தன் என்பதும் திருமலைவேங்கடவனும், திருவரங்கத்து அழகியமணவாளனும் அவனது உள்ளத்தில் நிறைந்தவர்கள் என்பதையும் திருமலை மற்றும் திருவரங்கத்துக் கல்வெட்டுகள் உறுதிசெய்கின்றன. திருவரங்கத்து கோயில்

உரிமைகள் சிலவற்றை திருவானைக்காவலாருக்குக் கொடுத்தது, நால்வர் கோபுரம் ஏறி உயிர் துறந்தது, கந்தாடை இராமானுச தாஸருடைய வேண்டுகோளுக்கு இணங்க நரசா நாயக்கன் வந்தது ஆகிய நிகழ்ச்சிகளும் கற்பனையால் புனையப்பட்ட தன்று. ***உண்மை நிகழ்ச்சிகளே.*** முரண்பட்ட, குழப்பமான இந்நிகழ்ச்சி களுக்குப் பின்னணியில் ஒரு பெரிய வரலாற்றுப் பேருண்மை மறைந்து நிற்கின்றது.

98.15.8. வைணவத்தின்பால் வெறுப்பு இல்லாத கோனேரிராயனின் நெருக்குதலுக்குத் திருவரங்கம் கோயில் உட்பட்டது, கோயில் நிர்வாஹம் மற்றும் நில உரிமைகளில் தலையிட்டது; பாதிக்கப்பட்டவர்கள் கோபுரமேறி உயிர்துறந்தது போன்ற காரணங்களுக்கு விளக்கம் தேட முற்படும்போது, கோயிலொழுகே அதற்கான விடையினையும் பகர்கின்றது. இதில் கந்தாடை இராமானுசமுனி விஜயநகரப் பேரரசன் சாளுவ நரசிம்மனின் உடன்பிறந்தவர் என்பதும், இவர் சாத்தாத வைணவர்களுக்குத் தலைவராகவும் திருவரங்கத்தில் திகழ்ந்தவர் என்பதும் கோயிலொழுகின் கூற்றுகளாகும்.

98.15.9. விஜயநகரப் பேரரசின் சங்கம குல மன்னனான பிரபுட தேவராயனை *(ப்ரபண்ட தேவராயன்)* சாளுவகுல வீர நரசிம்மன் வென்று விஜயநகரப் பேரரசனாக முடிசூட்டிக் கொண்டதை *(கி.பி. 1486)* கோயிலொழுகு கூறி, அந்த சாளுவ வீரநரசிங்கராயரின் உடன் பிறந்தவராக ***ராமராஜா*** என்பவரைக் குறிப்பிடுகிறது. ராமராஜா ஸ்தலசாஸ்திரம் படித்து விரக்தியுற்று, அயோத்திக்கு தீர்த்தயாத்திரை சென்று துறவறம் பூண்ட செய்தியையும் விவரிக்கின்றது. அயோத்தியிலிருந்து மீண்டும் கநகிரிக்கு வந்து தம் தம்பியான விஜயநகரப் பேரரசன் சாளுவ நரசிம்மராயரைக் கண்டு தான் 108 வைணவத் திருப்பதி களுக்கும் அரச முத்திரையோடு செல்ல ராயசாஸனமும் அதற்கான அரசாணையையும் வாங்கிக் கொண்டதையும் கூறுகின்றது.

98.15.10. சக ஆண்டு 1411ஆன கி.பி. 1489இல் விஜய நகரப் பேரரசனின் அண்ணனான அயோத்யாராமாநுஜதாஸர் எனப்படும் ராமராஜா, கோயில் கந்தாடையண்ணன் திருவடிகளில் திருமலையில் ஆஶ்ரயித்து, அதன் பின்பு 'கந்தாடை இராமானுச முனி' என்ற தாஸ்யநாமம் சூட்டப்பெற்று, விஜயநகர அரசு ஆணைப்படி திருவரங்கம் கோயிலுக்கு வருகைதந்தார். திருவரங்கத்தில் வைஷ்ணவ ஏகாங்கிகளுக்குத் தலை வராய்த் திகழ்ந்தார்.

98.15.11. ராமராஜா *(கந்தாடை இராமானுசமுனி)* எனும் சாளுவ நரசிம்மனின் அண்ணன் திருவரங்கத்து ஏகாங்கிகளுக்கு தலைவராய் விஜயநகர அரசாணைப்படி பொறுப்பேற்றது சௌம்ய ஆண்டு *(கி.பி. 1489)* ஆகும். இதே ஆண்டு தைமாதம் நால்வர் திருவரங்கம் கோயிலுக்குக் கோனேரிராயன் ஊறுவிளைவித்ததாய்க் கூறிக் கோபுரம் ஏறி விழுந்து உயிர் துறந்தனர்.

98.15.12. பின்னர், "***இந்த சேதிகளெல்லாம் பலகாலும் நரச நாயக்கருக்கு கந்தாடை ராமாநுஜதாஸர் அறிக்கை பண்ணியதாகக்***" கோயிலொழுகுக் குறிப்பிடுகிறது. தன் தம்பியான விஜயநகரப் பேரரசன் வீரநரசிம்மனின் படைத் தளபதியான நரச நாயக்கனைக் கோனேரிராயன்மீது படைஎடுத்து வரும்படி தூண்டியவரும் ராமராஜா எனும் கந்தாடை இராமானுசமுனியே.

98.15.13. இதுகாறும் கண்ட அனைத்து செய்திகளையும் நோக்கும் போது கோனேரிராயன் திருவரங்கன் மீது அளவிலா பக்தி உடையவன் என்பது தெளிவு. தான் பேரரசனாக ஏற்றுக் கொள்ளாத சாளுவ நரசிம்மனின் அண்ணனானக் கந்தாடைஇராமானுச முனிக்கும், இவனுக்கும் பகைமை உணர்வு ஏற்பட்டு, அதனால் சிலர் கோபுரம் ஏறி உயிர்துறந்திருக்க வேண்டும். தான் மதியாத மன்னனின் அண்ணன், தன் நாட்டில் இருந்துகொண்டு, சமய நடவடிக்கைகளில் ஈடுபடுவது கோனேரிராயனுக்குப் பிடிக்காமல்

இருந்திருக்கலாம் அல்லது கந்தாடைஇராமானுசமுனி தன் தம்பியின் எதிரியான கோனேரிராயனின் நாட்டில் அரசியல் குழப்பம் ஏற்படுத்த முயன்றிருக்கலாம்.

98.15.14. எனவேதான் திருவரங்கத்து ஸ்ரீவைஷ்ணவர்கள் சிலருக்குக் கோனேரிராயன் தொல்லைகள் தந்திருக்க வேண்டும். **திருவரங்கத்தில் நிகழ்ந்த இந்நிகழ்ச்சிகள் அரசியல் காழ்ப் புணர்ச்சியினால் நடைபெற்றவையே அன்றி வைணவ விரோதத்தால் அல்ல என்பது உறுதியாகின்றது.**

98.15.15. கோனேரிராயனுக்கு எதிர்ப்புத் தெரிவித்து கோபுரமேறி விழுந்து உயிர் துறந்தவர்களுக்கு, பின்பு கோபுரத்தில் உருவம் சமைத்து, கல்வெட்டு வெட்டியமையையும், கோனேரி ராஜனின் கோட்டை சாமந்தனார் சென்றப்ப நாயக்கர் அனுபவித்த கிராமங்களின் எண்ணிக்கைப் போன்ற விபரங்களையும், இராமானுசமுனி வீரநரசிம்மனின் தமையனார் என்பது பற்றியும் கோயிலொழுகு தெளிவாகக் கூறுகின்றது.

98.15.16. "அகளங்கன் திருமதில் கீழ் கோபுரத்திலே துலுக்கா வணத்துக்கு முன்னே இடிவிழுந்து சேதமாயிருக்கை யில் பழைய அடிப்பாரத்துக்குள்ளே மட்டமாக அடிப்பாரமும் மேலும் எடுத்துக்கட்டி, குடவரையும் கோபுரமும் கட்டி, அதுக்குப் படியும் கட்டுவித்து, நிலைக்காலிலே கோனேரிராஜா நாளையில் அந்த கோபுரத்தில் ஏறி விழுந்த ஜீயர்களையும், ஏகாங்கிகளையும் உருக்களடிப்பித்து, எழுத்தும் வெட்டுவித்து . . . ." என்றும் காணப்படுகிறது.

98.16. ஸ்ரீரங்கம், திருமலை மற்றும் காஞ்சிபுரம் திருக் கோயில்களில் காணப்படும் கல்வெட்டுகளில் கந்தாடை இராமானுசமுனியைப் பற்றியும், அவருக்குப் பின் அவர் வழி வந்த சிஷ்யர்களைப் பற்றியும் பல குறிப்புகள் காணப்படுகின்றன.

98.16.1.கி.பி.15ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்து 16ஆம் நூற்றாண்டின் முற்பகுதிவரை அமைந்துள்ள கல்வெட்டுகள் கந்தாடை இராமானுசமுனியும், அவரது சிஷ்யர் களும் வைணவத்திற்கு ஆற்றிய அரியப் பணிகளைப் பற்றிக் குறிப்பிடுகின்றன. திருவரங்கம், திருமலை, காஞ்சிபுரம் ஆகிய திவ்யதேசங்களில் இராமானுச கூடங்களை நிறுவி ஆங்காங்கே அடியார்களுக்கு உணவிடும் பணியைத் தொடங்கி வைத்தவர் கந்தாடை இராமானுசமுனி ஆவார்.

98.16.2. காஞ்சிபுரத்துக் கல்வெட்டுகள் தேவப் பெருமாள் ஸந்நிதியின் ஸ்ரீகார்யமாக கந்தாடை இராமானுச முனியை அறிமுகப்படுத்திட, திருமலை – திருப்பதி கல்வெட்டுகள் அவரை பொற்பண்டாரத்தின் பாதுகாவலராக *(டிரஸ்டியாக)* குறிப்பிடுகின்றன. கந்தாடை இராமானுசமுனியும், அவரது சிஷ்யர்களும் தமக்கென ஒரு சிறப்பான இடத்தைப் பெறு கின்றனர். மேலும், அவரும் அவரது சிஷ்யர்களும் அப்பொழுது தமிழகத்தை ஆண்ட விஜயநகர மன்னர்களின் நம்பிக்கையை யும் பெற்றிருந்தனர். விஜயநகர **சாளுவ, துளுவ** மன்னர்களாலும், மக்களாலும் பெறுமதிப்புக்குரியவர்களாக இவர்கள் ஏற்றுக் கொள்ளப்பட்டனர். ஆயினும் இந்த கல்வெட்டுகள் கந்தாடை இராமானுசமுனியைப் பற்றிய முழு வரலாற்றுச் செய்திகளை அளித்திடவில்லை. கந்தாடை இராமானுச முனியின் வரலாற்றை அறிந்து கொள்வதற்கு **கோயிலொழுகும், திருமலை ஒழுகும்** நமக்கு சில குறிப்புகளைத் தந்து உதவு கின்றன.

98.16.3. கந்தாடை இராமானுசமுனியை, கந்தாடை இராமானுச அய்யங்கார் என்றும் கல்வெட்டுகள் குறிப்பிடு கின் றன. திருமலை திருப்பதி கல்வெட்டுகளை தொகுத்த **திரு.ஸாது சுப்பிரமணிய சாஸ்திரி** அவர்கள் கந்தாடை இராமானுசமுனியைப் பற்றி குறிப்பிடும்போது, அவர் அந்தணர்

குலத்தைச் சார்ந்த ஆசார்யபுருஷர் என்ற கருத்தினைக் குறிப்பிட்டுள்ளார். அது தவறானதொரு கருத்தாகும்.

98.16.4. திருமலை திருப்பதி வரலாற்றினைத் தொகுத்துத் தந்த திரு.T.K.V.வீரராகவாசார்யர், கந்தாடை இராமானுமுனியைப் பற்றி குறிப்பிடும்போது, அவர் ஆசார்யபுருஷர் அல்லாத வம் சத்திலே பிறந்தவர் என்றும், அந்தணர் அல்லாத வகுப்பினைச் சார்ந்த சாத்தாத வைஷ்ணவர்களால் பெருமதிப்பிற்குரிய வராகவும், போற்றதலுக்குரியவராகவும் கொள்ளப்பட்டவராகக் கொண்டார். சாத்தாத வைஷ்ணவர்களுடைய நலனுக்காகப் பல பணிகளை அவர் மேற்கொண்டதாகவும், தம்முடைய '*திருப்பதி வரலாறு*' என்னும் நூலில் குறிப்பிட்டுள்ளார்.

98.17. ஸ்ரீமணவாளமாமுனிகள் காலத்தில் ஆழ்வார் களுக்கும் அருளிச்செயல்களுக்கும் பெரியதோர் ஏற்றம் ஏற்பட்டது. ஆழ்வார்களின் அருளிச்செயல்களில் ஈடுபட்ட கந்தாடை இராமானுசமுனியும், அவர் வழிவந்த சிஷ்யர்களும் ஆழ்வார்கள் ஸந்நிதிகளைப் புனருத்தாரணம் செய்வதிலும், திவ்யப் பிரபந்தங்களை ஓதுவதிலும், ஓதுவித்தலிலும் அதன் புகழைப் பரப்புவதிலும், ஆழ்வார்களுக்காக ஏற்பட்ட திருநாட் களைக் கொண்டாடுவதிலும் மிகுந்த கவனம் செலுத்தினர்.

98.17.1. அழகியமணவாளஜீயர் திருவடிகளை முதலில் ஆச்ரயித்து இவர் பல கைங்கர்யங்களைச் செய்துள்ளார். (T.T.D. No.628) திருமலைத் திருப்பதி கல்வெட்டுகளில் இவர் அழகியமணவாளஜீயரின் சிஷ்யராகவே குறிப்பிடப்படுகிறார். (T.T.D.VoII 13 and 14) இவற்றின்மூலம் தான் ஆப்ரயித்திருந்த அழகியமணவாளஜீயர் பரமபதித்தபிறகு கோயில் கந்தாடை அண்ணனை ஆப்ரயித்திருக்கலாம் என்று பெறப்படுகிறது.

98.17.2. கந்தாடை இராமானுசமுனி ஸ்ரீரங்கம், திருமலை, காஞ்சிபுரம் ஆகிய திவ்யதேசங்களில் பல கைங்கர்யங்

களைச் செய்துள்ளார். திருமலை கல்வெட்டுகளின்படி கோயில் (*ஸ்ரீரங்கம்*), திருமலை (*மேலத்திருப்பதி*), பெருமாள்கோயில் (*காஞ்சிபுரம்*) ஆகிய இடங்களில் இராமானுச கூடங்களை ஏற்படுத்தியதாக அறியப்படுகிறது.

98.17.3. திருமலையில் வைகுந்தன் திருவாசலிலும், பெரிய திருவாசலிலும் அமைந்திருந்த கதவுகளைப் புதுப்பித்து பொன்னாலான தகடுகளைப் பொருத்தினார் என்றும் திருமலை கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. (*கந்தாடை இராமானுச முனியைப் பற்றிய மேலும் பல குறிப்புகள் பிள்ளைலோகம் ஜீயர் அருளிச்செய்த யதீந்த்ர ப்ரவண ப்ரபாவம் என்ற நூலில் விரிவாக எடுத்துரைக்கப்பட்டுள்ளது. அங்கே கண்டுகொள்க. கந்தாடை இராமானுசமுனியைப் பற்றிய மேலும் பல ஆய்வுகளை எதிர்காலத்தில் மேற்கொண்டால் இவருடைய வரலாறு முழுமையாக எழுதப்படலாம்.*)



*விக்கிரமசோழன் திருவீதியின் தெற்குபகுதியில் அமைந்து காந்தாடை இராமானுசமுனி மடத்தின் முகப்புத் தோற்றம்*

## தே₃வதா₃யம் ராயரதீ₄நமானது

99. பூர்வம் சேர சோழ பாண்டிய மண்ட₃லங்களுக்கு ஒரு ப்ரபு₄வாயிருந்த நாளிலும், அதின்பின்பு மூன்று மண்ட₃லத்துக்கும் மூன்றுபேர் ராஜாக்கள் ஆளுங்காலத்திலும், ஒரு படியாகத்தானே, ஶகாப்₃த₃ம் ஆயிரத்திருநூற்று நாற்பத் தொன்பதில் (கி.பி.1327) அக்ஷய வருஷம் வரைக்கும் ராஜாக்கள் தே₃வதா₃ய ப்₃ரஹ்மதா₃யங்களை ஆளாமற்படிக்கு ப்₃ராஹ்மணரதீ₄நமாகத்தானே நடக்க; அதிலே நடக்கிற ந்யாயாந்யாயங்களை மாத்ரம் விசாரித்து நிக்₃ரஹங்களைப் பண்ணிக் கொண்டிருந்தார்கள். அதின்பின்பு, துலுக்கர் வந்து தே₃வதா₃ய ப்₃ரஸ்மதா₃யங்களை அழித்து, பெருமாளும் தங்கு வேட்டையாக ஆராமங்களிலே எழுந்தருளி, ஶகாப்₃த₃ம்

---

99. தமிழ்நாட்டை மூவேந்தர்களான சேர, சோழ, பாண்டியர்கள் தனித்தனியே ஆண்டுவந்த காலத்தில், ஒரு அரசன் மற்றைய அரசர்களை வெற்றிக்கொண்டு ஒரு குடைக்கீழ் ஆண்ட காலத்திலும், (அதாவது கி.பி.1327-ஆம் ஆண்டு வரையிலும்) திருக்கோயில்களுக்கும், அந்தணர்களுக்கும் ஏகபோக உரிமை யாக விடப்பட்ட நிலங்களில் ஆதிக்கம் செலுத்திவரவில்லை. அதற்கு மாறாக அந்த நிலங்களை அந்தணர்களே மேற்பார்வை யிட்டு வரும்படியான ஏற்பாடுகளை செய்து வந்தனர். அவ்வாறான காலங்களில் தவறு செய்வோர் மீது நடவடிக்கை எடுப்பது, அதற்கான தண்டனையை வழங்குவது போன்றவற்றில் மட்டுமே அவர்களுடைய ஆதிக்கம் இருந்தது. கி.பி.1323-27 காலகட்டத்தில் நிகழ்ந்த முகம்மதியர்களுடைய படையெடுப்பிற்குப் பிறகு, இவ்வாறு தானமாகக் கொடுக்கப்பட்ட நிலங்களின் உரிமை பறிக்கப்பட்டது. அந்த படையெடுப்பின் போது நம்பெருமாள் திருவரங்கத்தைவிட்டு நீங்கி, பல இடங்களுக்குச் சென்று, மீண்டும் சகம் 1293 (கி.பி.1371)-இல்

*ஆயிரத்திருநூற்றுத் தொண்ணூற்றுமூன்றில் (கி.பி.1371) பரீதாபி வருஷம் வைகாசி-மீ பதினேழாந்தேதியிலே திரும்பவும் கோயிலுக்கெழுந்தருளினபின்பு, இம்மண்ட₃லங் களெல்லாம் நரபதியான ராயரதீ₄நமான படியினாலே, தே₃வ தா₃யமான திருவிடையாட்டங்களை, ராயரும் ராயமநுஷ்ய ரான பல து₃ர்க்க₃ாதி₄பதிகளும் உத₃கதா₄ரா பூர்வகமாக க்₃ராமங்களை தா₃நம்பண்ணி, கோயிலுக்குத் தங்கள் மநுஷ் யராக மணியமும் ஸம்ப்ரதியும் கட்டளையிட்டு, அரண் மனைச்சீர்மையோடொத்ததாக ஆண்டு கொண்டிருந்தார்கள்.*

---

பரிதாபீ வருஷம் வைகாசி மாதம், 17-ஆம் தேதி ஆஸ்தானம் எழுந்தருளினார். அக்காலகட்டத்தில் தென் தமிழகம் முழுவதும் விஜய நகரப் பேரரசுக்கு உட்பட்டதாக விளங்கியது. அப்போது விஜயநகரப் பேரரசை ஆண்டு வந்த மன்னர்கள் பலரும், அவர்களுடைய மண்டலாதிகாரிகளும், உறவினர்களும், படைத்தலைவர்களும் உதகதாராபூர்வமாக *(நீர்வார்த்து தானமாகத் தருதல்)* பல திருவிடையாட்ட பூமிகளைத் திருவரங்கம் கோயிலுக்கு அளித்தனர். ஆபரணங்கள் பொற் காசுகள் பலவற்றை வாரி வழங்கினர். அவர்கள் அவ்வாறு தானமாக வழங்கிய நிலங்களையும், அவர்களால் தானமாக அளிக்கப்பட்ட பொற் காசுகளைக் கொண்டு வாங்கப்பட்ட நிலங்களையும் மேற்பார்வை பார்ப்பதற்கும், அதில் பெறப்படும் வருவாயினை கோயிலுக்கு கொண்டு வந்து சேர்ப்பதற்கும், தம்முடைய பிரதிநிதிகளாகக் கணக்கர்களையும், மேற்பார்வை யாளர்களையும் ஏற்படுத்தி வைத்தனர். இந்த அமைப்பின்படி விஜயநகர மன்னர்களின் காலத்தில் திருவரங்கம் பெரிய கோயிலினுடைய நிர்வாஹம், விஜயநகரமன்னர்களின் அரண் மனையின் விஸ்தரிக்கப்பட்ட ஒரு பகுதியாகவே விளங்கிவந்தது. (An extension counter of the Palace)

*(கி.பி.1371-ஆம் ஆண்டிற்குப் பிறகு உத்தமநம்பி*

## உடையவர் கல்பித்த கட்டுக்கொலைந்தது

*100. ஆனபடியினாலே, உடையவர் கல்பித்த கட்டுக் கொலைந்தது; ராயர் முத்₃ரையாக, செங்கோலதி₄காரி ஒருத்தரும், கொறட்டுப்பாரபத்தியக்காரர் ஒருத்தரும்,*

---

*வம்சத்தைச் சார்ந்த பலர் திருக்கோயிலின் நிதி நிலைமையை வலுவான நிலைமைக்கு உயர்த்திடவும், மண்டபங்கள் பலவற்றை நிர்மாணித்து, இந்தத் திருக்கோயில் மீண்டும் பொலிவுற விளங்குவதற்கும் பெருப்பெருத்த தியாகங்களைச் செய்துவந்தனர். திருவரங்கம் பெரியகோயில் தற்போது நாம் காணும் நிலைமையில் உள்ளதென்றால் அதற்கு மூலகாரணமாக விளங்கியவர்கள், கி.பி.1371 தொடங்கி கி.பி.1489-ஆம் ஆண்டு வரை ஸ்ரீரங்கம் கோயில் நிர்வாஹத்தை மேற்பார்வையிட்டு வந்த (அதாவது சுந்தாடை ராமானுசமுனி திருவரங்கத்திற்கு எழுந்தருளின ஆண்டு வரை - சுமார் 118 ஆண்டுகள்) உத்தமநம்பி வம்சத்தில் உதித்த பெரிய கிருஷ்ணராயர், பெரிய சக்ரராயர், சின்ன சக்ரராயர், வழியடிமை நிலையிட்ட பெருமாள் உத்தமநம்பி, திருமலைதாத உத்தமநம்பி, கிருஷ்ணராய உத்தமநம்பி போன்ற சான்றோர்களே ஆவர்.)*

100. இத்தகைய நிர்வாஹ மாறுதல்களினாலே இராமானுசர் ஏற்படுத்தி வைத்த நிர்வாஹமுறை மாற்ற மடைந்தது. விஜயநகர மன்னனுடைய பிரதிநிதியாக அவருடைய முத்திரையைக் கொண்டவராகச் செங்கோலதிகாரி ஒருவர் நியமிக்கப்பெற்றார்.

100.1. உடையவர் ஏற்படுத்தி வைத்த பத்து அந்தணர் கொத்துக் கைங்கர்யங்களிலும் மாற்றங்கள் ஏற்பட்டன. ஓரோர் கொத்தில் ஏற்பட்ட கைங்கர்யங்கள் இன்னொரு கொத்தில் உள்ளவர்களால் எடுத்துக்கொள்ளப்பட்டன. சில கொத்துக் களுடைய கைங்கர்யங் கள் ஸ்ரீபண்டாரத்திலே சேர்க்கப்பட்டன.

*ஸ்த்த₂லத்தில் பெரியவராக ஸ்ரீரங்க₃நாராயணஜீயர் ஒருத்தரும், காலவிஶேஷத்திலே* **இளங்கேள்வி** *என்று உத்தமநம்பியும்;* ***ராயர்முத்₃ரை*** *என்று சக்ரராயர் ஒருத்தரும்,* ***தே₃ஶாந்தரி முத்₃ரை*** *என்று கந்தாடைராமாநுஜரும், இப்படி அதி₄காரிகளும் பல முக₂ங்களாய் ஸ்த்த₂லத்திலே உடையவர் கல்பித்த பத்துக்கொத்து ப்₃ராஹ்மண பரிகரங்களிலேயும் ப₃ஹு₂முக₂ங்களாய், ஒரொரு கொத்தில் கைங்கர்யங்களைப் பலவித₄மாகக் கொத்திலே சேராமல் ஸ்ரீப₄ண்ட₃ாரத்திலே விட்டு, இப்படி பலவித₄மாக, உடையவர் கல்பித்த கொத்தும் மரியாதையும்*

---

100.2. ஸ்ரீரங்கராயர் நாராயணஜீயர் மடத்தை அலங்கரித்து வந்த உத்தமர்கோயில் ஸ்ரீரங்கராஜர் காலத்தில் *(5-வது பட்டம் வஹித்தவர்)* மேலைப்படியில் முதல் தீர்த்தம் இவருக்கு அளிக்கப்பட்டது. சில நாட்கள் கழித்து முதல் தீர்த்தம் வாதூல தேசிகருக்கு அளிக்கப்பட்டது. *(உடையவர் நியமனப்படி இந்த முதல் தீர்த்தம் கோவணவர் வரிசைக்குத் தலைவரான உடையவருக்கு அளிக்கப்பட்டு வந்தது, அதன் பின்னர் ஸ்ரீரங்கநாராயண ஜீயருக்கு அளிக்கப்பட்டு வந்தது)*

100.3. மற்றும் சில நாட்களில் ஸ்ரீரங்கநாராயண ஜீயருக்கு இரண்டாம் இடத்தில் தீர்த்த மரியாதைகள் அளிக்கப்பட்டன. இவ்வாறு அளிக்கப்பட்ட இரண்டாவது தீர்த்தமும், பிறகு பட்டர் வம்சத்தியவருக்கு அளிக்கப்பட்டு, ஸ்ரீரங்கநாராயண ஜீயருக்கான மரியாதை மூன்றாவது இடத்திற்கு தள்ளப்பட்டது. சில நாட்கள் கழிந்து ஸ்ரீரங்கநாராயண ஜீயர், வாதூல தேசிகர், பட்டர் ஆகியோருக்குத் தீர்த்தம் ஒரே சமயத்தில் ஸாதிக்கப்பட்டது. அதன் பிறகு சில நாட்கள் கழித்து வாதூல தேசிகருக்கான அருளப்பாடு ஸாதிக்கும் வழக்கம் நிறுத்தப்பட்டது.

100.3.1. திருப்பாவாடை விநியோகத்தின் போது சில சமயங்களில் ஒரே அளவிலான பிரசாதங்களும், வேறு சில

*அழிந்து, பெருமாள் தாமே ஸ்ரீபாஞ்சராத்ர முக₂த்தாலே அருளிச்செய்த ஶாஸ்த்ர மர்யாதை₃ப்படியே உடையவர் கல்பித்த வரிசை குலைந்து, ஸ்வதந்த்ரமாக ஶாஸ்த்ர விருத்₃த₄மாய் ஆசார்யபுருஷ ப₃ஹுமாநங்களும், இவ் வனைத்துக் கொத்துப் பரிகரங்களும் ஸ்த்த₂ாந ஸமய விப₄ாக₃மும், இதுக்குண்டான பேறுகளும், இது முதலானது களெல்லாம் நலமாக நடத்திக்கொண்டார்கள்.*

---

சமயங்களில் சமஅளவில் இல்லாத பிரசாதங்களும் இம் மூவருக்கும் ஸாதிக்கப்பட்டன.

100.3.2. மேலும் சிலநாட்கள் கழிந்த பிறகு ஸ்ரீரங்க நாராயண ஜீயருக்கும், பட்டர் வம்சத்தவர்ருகும் ஏக காலத்தில் தீர்த்தம் ஸாதிக்கப் பெற்று, மரியாதைகள் செய்விக்கப்பட்டன. சில நாட்களுக்குப் பிறகு ஸ்ரீஶடாரி ஸ்ரீரங்கநாராயண ஜீயருக்கு ஸாதிக்கப்பட்டு, அதன்பின் வாதூல தேசிக வம்சத்தவருக்கு ஸாதிக்கப்பட்டது. அந்த முறையும் மாற்றம் அடைந்து பட்டர் வம்சத்தவருக்கும், வாதூல தேசிக வம்சத்தவருக்கும் ஒருநாள் விட்டு ஒருநாள் ஸ்ரீஶடாரி ஸாதிக்கப்பட்டது.

100.3.3. இவ்வாறு உடையவர் ஏற்படுத்தி வைத்த முறை பெரும் மாற்றம் அடைந்து அரசியல் அதிகாரிகளைச் சார்ந் திருப்போர் விருப்பப்படி மரியாதைகள் மாறி மாறி வழங்கப்பட்டன என்பதனைக் கோயிலொழுகு தெரிவிக்கின்றது.

100.3.4. உடையவர் காலத்தில் ஸேனாபதி துரந்தரரான வாதூலதேசிக வம்சத்தவருடைய கட்டளைப்படி இயங்கி வந்த பத்துக் கொத்து பரிஜனங்களும் அந்தக்கட்டுக்குலைந்து, ஸ்தானத்தார், சமயத்தார் போன்றவர்களுடைய கட்டுக்கோப்பின் கீழ்கொண்டு வரப்பட்டனர். ஸ்ரீரங்கநாராயணஜீயர் தொடக்கமான ஸ்தலத்தார், அதாவது வாதூல தேசிக வம்சத்தவர், பட்டர்

வம்சத்தவர், உத்தமநம்பி வம்சத்தவர் ஆகியோர் **ஸ்தலத்தார்கள்** என்ற அமைப்பை ஏற்படுத்திக் கொண்டனர். *(இராமானுசருடைய ஆசார்யரும், ஸ்ரீரங்கத்திலே அவதரித்துத் திருக்கோயிலைக் காப்பாற்றியவரான பெரியநம்பி வம்சத்தவருக்கு ஸ்தலத்தார் என்ற மரியாதையைத் தந்திடாமல், தங்களுடைய அரசியல் செல்வாக்கைப் பயன்படுத்தி இவர்கள் மட்டுமே ஒன்று சேர்ந்து ஸ்தலத்தார் என்ற அமைப்பை ஏற்படுத்திக்கொண்டனர். ஸ்தலத்தார் என்ற அமைப்பை உடையவர் ஏற்படுத்தி வைக்க வில்லை. பத்துக் கொத்தில் ஒரு கொத்தாக ஸ்தானத்தார் என்ற கொத்தையே அவர் ஏற்படுத்தி வைத்தார். இந்த ஸ்தானத்தார் என்பவர்கள், மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஆறு நபர் கொண்ட ஸ்ரீவைஷ்ணவகன்மிகள் என்று அழைக்கப்பட்டனர். இதைப் பற்றிய விரிவினை பாஞ்சஜன்யம் இதழ் 69-இல் கண்டு கொள்க.)*

100.4. விஜயநகர மன்னர்கள் காலம் தொடங்கி அவருடைய பிரதிநிதியாக சோழ மண்டலத்தை ஆண்டு வந்தவர்கள் கோயில் நிர்வாஹ அமைப்பில் குறுக்கீடு செய்து கீழ்க்கண்ட புதிய அதிகார அமைப்புகளை (Power Centres) ஏற்படுத்தி வைத்தனர்.

100.4.1 [1] கொறட்டு மணியகாரர் *(உள்துறை கண் காணிப்பாளர்)* அல்லது கொறட்டு பாரபத்யகாரர் [2] ஸந்நியாஸி களுக்கு தலைவராக ஸ்ரீரங்கநாராயண ஜீயர் ஆதீனம் [3] இளங்கேள்வி யாக உத்தமநம்பி *(உதவிக் கண்காணிப்பாளர்)* [4] ராயருடைய ஆணைப்படி ஏற்படுத்தப்பட்ட சக்ரராயர் ஆதீனம், [5] தேசாந்திரி முத்திரை தரித்த கந்தாடை இராமானுசமுனி.

100.5. இவ்வாறாக உடையவர் ஏற்படுத்தி வைத்த கோவணர் வரிசையின் தலைவருடைய அதிகாரம் பலரால் பங்கீடு கொள்ளப்பட்டது. உடையவர் ஏற்படுத்தி வைத்த அந்தணர் அல்லாத கொத்தின் நிர்வாஹ அமைப்பும் பல மாறுதல்களை

## நம்பெருமாள் கோயிலிலேயே எழுந்தருளியிருந்தது

*101. ஶகாப்தம் ஆயிரத்துமுந்நூற்று நாற்பத்தேழில் (கி.பி.1425) மணவாளமஹாமுனி எழுந்தருளி நம்பெருமாளை மங்களாஶாஸநம் பண்ணினது முதலாக, பெருமாள் பூபாலராயனை விட்டுச் சலியாமல் எழுந்தருளியிருந்தார்.*

---

அடைந்தது. பெரியபெருமாளால் ஸ்ரீபாஞ்சராத்ர ஆகமத்தில் தெரிவிக்கப்பட்ட நிர்வாஹமுறைகளை உடையவர் ஏற்படுத்தி வைத்தார். அவரால் ஏற்படுத்திவைக்கப்பட்ட கொத்துகள் சாஸ்த்ர மரியாதைக்கு உட்பட்ட திட்டங்கள். ஆனால் இந்தக் கட்டுக் கோப்பு குலைந்து, அரசாங்க அதிகாரிகளுடைய ஆணைகளின் அடிப்படையில் நிர்வாஹ திட்டங்கள் வகுக்கப்பட்டன அதனால் உடையவரால் ஏற்படுத்தி வைக்கப்பட்ட முறைமை சீர்குலைந்தது.

101. சகம் 1347 [கி.பி.1425] ஆம் ஆண்டில் ஸ்ரீமணவாளமாமுனிகள் ஸந்யாஸ ஆஶ்ரமம் ஸ்வீகரித்துக் கொண்டு தர்சன நிர்வாஹம் செய்ய முற்பட்ட காலந்தொடங்கி நம்பெருமாள் எந்த ஆபத்தும் இன்றி அனைத்து விழாக்களையும் கண்டருளி கர்பக்ருஹத்தில் பூபாளராயன் ஸிம்ஹாசனத்தில் எழுந்தருளி இருந்தார். கோயிலொழுகின் இந்தக் குறிப்பு மிக முக்கியமானது. ஸ்ரீமணவாளமாமுனிகள் திருவரங்கம் திருப்பதியே இருப்பாகப் பெற்றோம் என்றருளிச்செய்தபடி பிள்ளைலோகா சார்யர் காலத்திற்குப் பிறகு, திருவரங்கத்திலே எழுந்தருளி யிருந்து நம்பெருமாளுடைய உத்ஸவங்களை பண்டுபோலே ஏற்படுத்தி வைத்து, உடையவர் ஏற்படுத்தி வைத்த மரியாதைப்படி ஸேனாபதி துரந்தரராக வாதூலதேசிகர் வம்சத்தவரான கோயிலண்ணனை உள்துறை நிர்வாஹகத்திற்குக் கடவராக மீண்டும் ஏற்படுத்தி வைத்தார். உத்தமநம்பி வம்சத்தவர்

## விசுவநாதநாயக்கரைக்கொண்டு, நரஸிம்ஹாசார்யர் பண்ணின கைங்கர்யம்

*102. ஶகாப்தம் ஆயிரத்துநானூற்றிருபதுக்குமேல் (கி.பி.1498) மதுரை திருச்சிராப்பள்ளி விசுவநாதநாயக்கன் அதீநமாய், அவரைக் கொண்டு வாதூலதேஶிகர் குமாரர் நரஸிம்ஹாசார்யர் பெருமாளுக்கு ஸமர்ப்பித்தது:- தங்க பஞ்சபாத்ர வட்டில், கலசப்பானை, திருப்படிக்கம்,*

---

களுடைய உதவிகொண்டு, திருக்கோயிலின் வருவாயை அதிகரிப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்தருளினார்.

101.2. ஸ்ரீமணவாளமாமுனிகள் திருவரங்கத்திற்கு எழுந் தருளிய பிறகு நம்பெருமாள் திருவரங்கத்தைவிட்டு அகலாமல் எழுந்தருளியிருந்தார். அதாவது முகம்மதியர்களுடைய படை யெடுப்பால் சீர்குலைந்து போன திருக்கோயிலும் திருவிழாக் களும் மரபுகளும் மீண்டும் பொலிவுறத் தொடங்கின என்பதே இந்தச் செய்தியால் பெறப்படும் பொருளாகும்.

102. சக ஆண்டு 1420க்கு மேல் [கி.பி.1498] மதுரையும் திருச்சிராப்பள்ளியும் மதுரை நாயக்க மன்னனான விசுவநாத நாயக்கர் ஆதீனத்தில் இருந்தது. *(கோயிலொழுகு தரும் இந்த ஆண்டு வரலாற்றுச் செய்திகளுக்கு முரண்பட்டது. விசுவநாதநாயக் கருடைய ஆட்சி ஆண்டுகளாக மதுரை நாயக்கர் வரலாறு என்ற நூலின் ஆசிரியரான சத்யநாத ஐயர் கி.பி.1529-1564ஐ குறிப்பிடுகிறார். இதே போன்று அடுத்து வரும் க்ருஷ்ணப்ப நாயக்கனுடைய ஆட்சி ஆண்டாக சகம் 1452 (கி.பி.1530) என்று கோயிலொழுகில் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆயினும் முதலாம் க்ருஷ்ணப்ப நாயக்கனுடைய ஆட்சி ஆண்டுகளாக கி.பி.1564-72 ஐ வரலாற்று ஆசிரியர்கள் குறிப்பிடுகிறார்கள்).*

*ஸஹஸ்ரத₄ாரை தட்டு, சில திருவாப₄ரணங்களும் செய்வித்து; பன்னீராயிரம் திருமுடிக் குறையிலே ஸ்ரீரங்கராஜநாத₂ன் அநுப₄வித்த கொவணவர் வரிசைகளும் ஸ்ரீப₄ண்ட₃ாரஞ் சேர்ந்திருந்ததைத் தாம் லபி₄த்து, ஸ்வாமிக்கு அநேக கைங்கர்யங்களையும் நடப்பித்து, மூன்றுலக்ஷம் பொன் கைங்கர்யம் செய்வித்தார்.*

*அக்காலத்திலே, பெருமாள் புறப்பட்டருளி, ஸேனை*

---

102.1. இவருடைய உதவி கொண்டு கோயிலண்ணன் ஸ்தானத்தில் எழுந்தருளியிருந்த ஸ்ரீரங்கராஜநாதன் வாதூல தேசிகர் குமாரர் நரஸிம்ஹாசார்யர் தங்கபஞ்சபாத்ர வட்டில்கள், கலசப்பானை, திருப்படிக்கம், ஸஹஸ்ரதாரைத் தட்டு மற்றும் பல திருவாபரணங்களை நம்பெருமாளுக்கு ஸமர்ப்பித்தார்.

102.2. பன்றியாழ்வான் மேட்டில் நம்பெருமாள் எழுந்தருளியிருந்த காலத்தில், அதாவது உலுக்கானுடைய படையெடுப்பின் போது [கி.பி.1323], கோவணவர் வரிசையில் வாதூல தேசிகர் வம்சத்தவர்கள் பெற்று வந்த மரியாதைகள் நீண்ட காலமாக ஸ்ரீபண்டாரத்தில் சேர்ப்பிக்கப்பட்டிருந்தன. இவர் காலத்தில் அவ்வாறு ஸ்ரீபண்டாரத்தில் சேர்ப்பிக்கப்பட்டிருந்த மரியாதைகள் மீண்டும் நம்பெருமாள் தவராசன் படித்துறைக்கு எழுந்தருளும் காலத்தில் வாதூலதேசிகர் வம்சத்தவர்களுக்கு அளிக்கப்பட்டன.

102.3. விஶ்வநாதநாயக்கர் காலத்தில் எழுந்தருளி யிருந்த வாதூலதேசிக வம்சத்தைச் சார்ந்த நரஸிம்ஹாசார்யர் மூன்று லக்ஷம் பொன் கொண்டு பல கைங்கர்யங்களைச் செய்தருளினார்.

102.3.1. இவருடைய காலத்தில் நம்பெருமாள் மேலைப்

*முதலியார் ஸந்நிதி₄ வாசலிலே திரும்பி, ஸேனை முதலி யாருக்குத் திருமாலைஸாதி₂த்து கொவணவர் வரிசையான திருமாலையை முதலியாண்டான் வம்ஶ்யரான குமார நரஸிம்ஹாசார்யருக்கு ஸாதி₂த்து, ஆசார்யபுருஷர்கள் திருவோலக்கத்துக்குப் பெரியநம்பி கந்தாடையண்ணன் க்ரமத்திலே நடந்தது.*

*ஸ்த்தா₂நவட்டிலிலே ஜீயர் ப₄ட்டர் வாதூ₄லதே₃ஶிகர் முறைவிதத்திலே தீர்த்த₂ஶட₂கோப மரியாதைகள் நடந்தது. ப₄ட்டருக்கு, திருவாராத₄ந காலத்திலே தீர்த்த₂ம் நடந்தது ப்ராமாணிகம். வாதூ₄ல தே₃ஶிகருக்கு ஸ்ரீகார்யதீர்த்த₂ம் நடந்தது ப்ராமாணிகம். பெரியநம்பி முதல் திருவோலக் கத்துக்கு ஸமயவட்டில் தீர்த்த₂ம் நடந்தது ப்ராமாணிகம்.*

---

படியைவிட்டு ராஜமகேந்திரன் திருச்சுற்றின் மேற்குப்பகுதி வழியாக எழுந்தருளி விஷ்வக்ஸேநருக்கு தாம் சாற்றிக்களைந்த திருமாலையை அனுப்பியருள்வார். அதன்பின் கோவணவர் வரிசைக்கு ஏற்பட்ட மரியாதையான திருமாலையை முதலியாண்டான் வம்சத்தவரான குமார நரஸிம்ஹாசார்யருக்கு ஸாதித்த பிறகு, ஆசார்ய புருஷர்கள் திருவோலக்கத்திற்கு பெரியநம்பி, கந்தாடை அண்ணன் க்ரமத்திலே மரியாதைகள் செய்விக்கப்பட்டன.

102.3.2. ஏக காலத்தில் ஸ்தாந வட்டிலிலே ஸ்ரீரங்க நாராயண ஜீயர், பட்டர், வாதூல தேசிகர் என்ற க்ரமத்திலே தீர்த்தம், ஸ்ரீஶடாரி ஆகியன ஸாதிக்கப் பெற்றன. திருவாராதன காலத்தில் பட்டர் வம்சத்தவர்களுக்கு தீர்த்தம் ஸாதிக்கப் பெற்றதும், ஸ்ரீகார்யத் திற்கான தீர்த்த மரியாதை, வாதூல தேசிக வம்சத்த வர்களுக்கு ஸாதிக்கப்பட்டதும் உண்மையிலேயே நடைபெற்ற மரியாதைகள். பெரியநம்பி தொடக்கமான மற்றைய ஆசார்ய புருஷர்களுக்கு ஸமயவட்டிலில் தீர்த்தம் ஸாதிக்கப்பட்டது.

## க்ருஷ்ணப்பநாயக்கர் கைங்கர்யம்

*103. ஶகாப்₃த₃ம் ஆயிரத்துநானூற்று நாற்பத்தேழில் (கி.பி.1525) க்ருஷ்ணப்பநாயக்கர் துரைத்தனத்தில் ஸ்வாமிக்கு அநேகம் திருவாப₄ரணம் ஸமர்ப்பித்து, தன் பேருக்குத் தென்திருக் காவேரிக் கரையிலே படித்துறையும் மண்டபமும் கட்டி, குமார நரஸிம்ஹ வாதூ₄லதே₃ஶிகரைக் கொண்டு ஸ்வாமிக்கு அனைத்தழகும் கண்டருளப் பண்ணுவித்தார்.*

---

103. மதுரை நாயக்க மன்னனான முதலாம் க்ருஷ்ணப்ப நாயக்கர் குமார நரஸிம்மவாதூல தேசிகருடைய நியமனங் கொண்டு பெரிய பெருமாளுக்கு ஏராளமான திருவாபரணங்களை ஸமர்ப்பித்தான். இவன் காலத்தில்தான் தென்திருக்காவிரியின் மண்டபமும், படித்துறையும் கட்டப்பட்டது.

*(தற்போது அம்மா மண்டபம் என்று வழங்கப்படும் இந்தப் படித்துறை முதலாம் க்ருஷ்ணப்ப நாயக்கர் காலத்தில் கட்டப்பட்டது)*



அம்மாமண்டபம்
படித்துறையின் முகப்புத் தோற்றம்

## குமாரக்ருஷ்ணப்பநாயக்கர் கைங்கர்யம்

*104. பின்பு, குமார க்ருஷ்ணப்பநாயக்கரும் ராஜ்யம் பண்ணுகையில், ஸ்வாமிக்கு ரத்நாங்கி$_3$ ரத்நகிரீடம் முதலானது லக்ஷத்தைம்பதினாயிரம் பொன் கைங்கர்யம், அந்த நரஸிம்ஹ தே$_3$ஶிகரைக்கொண்டு ஸமர்ப்பித்தார்.*

## உத்தமநம்பிக்கும் ப$_4$ட்டர் திருமலாசார்யருக்கும் உண்டான கலஹம்

*104. ஶகாப்$_3$த$_3$ம் ஆயிரத்தைந்நூற்றொன்றுக்குமேல் (கி.பி.1579) முத்து வீரப்பநாயக்கர் துரைத்தனத்தில், முன்*

---

104. குமார க்ருஷ்ணப்பநாயக்கர் *(அல்லது இரண்டாம் க்ருஷ்ணப்ப நாயக்கர்)* காலத்தில் *(கி.பி.1595-1601)* நம்பெருமாளுக்கு ரத்னங்கி, ரத்னகிரீடம் முதலானவை லக்ஷத்து ஐம்பதினாயிரம் பொன் கொண்டு ஸமர்ப்பிக்கப்பட்டன.

105. விஜயநகரப் பேரரசினை சங்கம, சாளுவ, துளுவ குல மன்னர்களுக்குப் பிறகு ஆரவீடு வம்சத்தவர்கள் ஆண்டு வந்தனர். துளுவ மன்னனான சதாசிவராயன் காலத்திற்குப் பிறகு முதலாம் திருமலை ஆட்சிப் பொறுப்பினில் அமர்ந்தார். இவருக்குப் பிறகு இவருடைய தமையனான அளியராம ராஜாவின் வழித் தோன்றலான இரண்டாம் வேங்கடவன் விஜயநகர மன்னனாய்த் திகழ்ந்தான். இவனுடைய மறைவுக்குப் பின் வேலூரைத் தலைநகராய் கொண்டு ஆண்டுகொண்டிருந்த விஜயநகர சாம்ராஜ்யத்தின் அரியணையைக் கைப்பற்றுவதற்குப் பெரியதொரு உள்நாட்டுப்போர் நடைபெற்றது.

105.1. அதன் விளைவாக விஜயநகர மன்னனாக யார் முடிசூடிக் கொள்வது? என்ற போராட்டம் வலுவடைந்து அதனுடைய தாக்கம் திருவரங்கத்தில் காணப்பட்டது. இந்த உள்நாட்டுப் போரினாலே ஆங்காங்கே மண்டலாதிகாரிகளாய் செயல்பட்டு வந்தவர்கள் தன்னாட்சி செய்யத் தொடங்கினர்.

105.1.1 அந்தக் காலகட்டத்தில் நடந்த நிகழ்ச்சிகளை "***ராம ராஜ்யமு***", இராமபத்ராம்பா எழுதிய "***இரகுநாதாப் யுதயம்***", யக்ஞநாராயண தீக்ஷிதர் எழுதிய "***ஸாஹித்ய ரத்னாகரம்***", கோவிந்த தீக்ஷிதர் எழுதிய "***ஸாஹித்யசுதா***" போன்ற நூல்களும், மேல்நாட்டு யாத்திரிகர்களான Barradas *(போர்த்துகீசிய பாதிரியார்)*, Queyroz *(ரஷ்ய யாத்திரிகர்)* ஆகியோர் தம்முடைய குறிப்புகளில் விவரித்துள்ளனர்.

105.1.2. இனிவரும் கோயிலொழுகுப் பகுதிகளில் கொடுக்கப் பட்டுள்ள நிகழ்ச்சிகளைப் புரிந்துகொள்ளவேண்டு மானால் தஞ்சை நாயக்க மன்னனான அச்சுதப்ப நாயக்கன், மூர்த்திமாம்பா தம்பதியினருடைய ஒரே மகனான ரகுநாத நாயக்கனைப் பற்றிய சில செய்திகளை நாம் தெரிந்து கொள்ள வேண்டும்.

105.1.3. ஈழத்தின் மீது படையெடுத்து, வெற்றி பெற்ற பிறகு தஞ்சை நோக்கித் திரும்பும் வழியில் இரகுநாதனுக்காக மீண்டும் ஒரு போர்ச் செய்தி காத்திருந்தது. தஞ்சைக்கு மேற்கே உள்ள ***கல்லணையை ஜக்கராயன், செஞ்சி, மதுரை நாயக்கர் களின் துணைகொண்டு இடித்ததால் காவிரியில் பெருவெள்ளம் ஏற்பட்டுச் சோழநாட்டிற்கு ஆபத்து ஏற்பட் டிருப்பதாகவும், ஜக்கராயனின் பெரும்படை தஞ்சையைத் தாக்க ஆயத்தமாகி ஸ்ரீரங்கம் பகுதியில் முகாமிட்டிருப்ப தாகவும் செய்தி வந்ததாக 'இரகுநாதாப்யுதயம்' விவரிக் கின்றது.*** இச்செய்தியை அறிந்த இரகுநாதன் ஈழத்திலிருந்து

நேராகக் கல்லணை நோக்கித் தன் பெரும் படையைச் செலுத்திச் சென்றான்.

105.1.4. ஜக்கராயன் என்பான் யார்? இவன் எதற்காக இரகுநாதன் மீது போர் தொடுத்தான் என்பதையும், இப்போர் எவ்வாறு மூண்டது என்பது பற்றியும் நாம் முதலில் அறிந்து கொள்ளவேண்டும். இந்தப்போருக்கும் திருவரங்கத்தில் நடை பெற்ற நிகழ்ச்சிகளுக்கும் முக்கியமானதொரு தொடர்பு அமைந்துள்ளது.

105.1.5. கி.பி.1614-ஆம் ஆண்டு விஜயநகர மன்னனான இரண்டாம் வேங்கடபதிராயர் மரணப் படுக்கையில் கிடந்த போது ஏற்பட்ட குழப்பமே தோசூர் [கல்லணைப்பகுதி] போருக்கு அடிப்படைத்தளமாய் அமைந்தது. இரண்டாம் வேங்கடபதிராயருக்கு நேரிடையான வாரிசாக ஆண்மகன் இல்லாமல் இருந்தது. அவரது மனைவியருள் இளையவளும், பேரழகியுமான பாயம்மா என்பாள் கொப்பூரி ஜக்கராயனின் சகோதரியாவாள்.

105.1.6. ஜக்கராயன் விஜயநகரப் பேரரசுக்குட்பட்ட கோலார் பகுதியில் ஆட்சியாளனாக விளங்கியவன். குழந்தைப் பேறு இல்லாத இரண்டாம் வேங்கடபதிராயரின் அரசு உரிமை களை முழுவதுமாகக் கவர நினைத்த ஜக்கராயன் தன் சகோதரி யின் துணையுடன் கபட நாடகம் ஆடும் செயலில் இறங்கினான். பாயம்மா தனக்குக் குழந்தை பிறக்க வாய்ப்புக்கள் இல்லை என்ற நிலையில் தான் கருவுற்றிருப்பதாக நடித்தாள். அதே சமயம் முன்னேற்பாடுகளுடன், கருவுற்ற பிராமணப் பெண் ஒருத் தியைத் தங்களுக்கு உதவுவதற்கான ஏற்பாட்டினையும் செய்தாள்.

105.1.7. பிராமணப்பெண்ணுக்கு, ஆண் மகவு பிறந்த அதே நாளில் தனக்குக் குழந்தை பிறந்துள்ளது என்று பலரையும் நம்பவைத்து, ரகசியமாகப் பிராமணப் பெண்ணின் குழந்தையை

எடுத்து வந்து தனது குழந்தை என்று கூறி அரண்மனையில் உள்ளவர்களை நம்பவைத்தாள். பேரரசர் இரண்டாம் வேங்கடாபதி ராயருக்குப் பாயம்மா ஆடிய கபட நாடகம் தெரிந்தும், அவள் மீதுள்ள மோகத்தால் இதனை வெளிக்காட்டிக் கொள்ளாமலேயே இருந்தார். கி.பி.1614ஆம் ஆண்டு மரணப் படுக்கையில் இருந்த மன்னர் தனது மரணத்திற்கு இரண்டு நாட்கள் முன்பு பாயம் மாவுக்கு அளவு கடந்த பொன்னும் பொருளும் அளித்தார். ஆனால் அவளது குழந்தைக்கு *(அவளுக்குப் பிறந்ததாகக் கூறிக் கொள்ளும் குழந்தைக்கு)* பட்டம் சூட்டுவார் என்று அவள் எதிர் பார்த்திருந்த வேளையில், தனது சகோதரனின் மகன் சிக்க தேவராயன் எனும் இரண்டாம் ஸ்ரீரங்கனை அருகில் வரச்செய்து, தனது அரசு மோதிரத்தை அவனுக்கு அளித்து விஜயநகரப் பேரரசனாக அறிவித்து, இரண்டு நாட்களில் இறந்தும் போனார்.

105.1.8. பேரரசைக் கவரத் திட்டம் போட்டிருந்த ஜக்கராயன் தனது சகோதரி பாயம்மாவின் மகன்தான் பேரரசரின் உண்மையான வாரிசு என்று அறிவித்து, முன்னரே தனக்குச் சாதகமாகக் கைக்குள் வைத்திருந்த தளபதிகள், மற்ற அலுவலர்கள் உதவியுடன் பேரரசைக் கைப்பற்றினான். சிக்கதேவராயர் *(இரண்டாம் ஸ்ரீரங்கன்)*, அவரது மனைவி, மூன்று குழந்தைகள் உட்பட அனைவரையும் அரண்மனையில் சிறைவைத்தான். ஜக்க ராயனின் சதி வலையில் விழாத விஜயநகரப்பேரரசின் உண்மை ஊழியர்களும், குறுநிலத் தலைவர்களும் வெலுக்கோட்டி யாசமநாயக்கர் என்ற குறுநில அரசர் தலைமையில் அநீதியை எதிர்த்து ஓர் அணியாகத் திரண்டு செயல் படத்தொடங்கினர். எப்படியும் உண்மையான அரச வம்சத்தைத் தழைக்கச் செய்ய வேண்டும் என்று யாசம நாயக்கர் செயலில் இறங்கினார்.

105.1.9. அரண்மனைக் காவலிலிருந்த சிக்கதேவராய ருக்கு அரண்மனை வண்ணான் மூலம் இரகசியச் செய்தி அனுப்பி, அவரது ஒரு மகனை வெளியில் கடத்தி வர

ஏற்பாடுகள் செய்தார். யாசம நாயக்கரின் திட்டப்படி காவலிலிருந்த ஸ்ரீரங்கனின் இரண்டாம் மகனான பன்னிரண்டு வயதுடைய ஸ்ரீராமனை, அரண்மனை வண்ணான் தனது அழுக்குத் துணி மூட்டைக்குள் வைத்து அரண்மனையிலிருந்து கடத்தி வந்தான். தனது வீட்டில் இரண்டு நாட்கள் அச்சிறுவனை வைத்திருந்து யாசம நாயக்கரிடம் ஒப்புவித்தான்.

105.1.10. விஜயநகர வாரிசான சிறுவன் ஒருவன் காவலிலிருந்து தப்பிவிட்டான் என்பதை அறிந்த ஜக்கராயன் கடும் சினத்துடன் சிறை வைத்த இடத்திற்குச் சென்றான். ***ஸ்ரீரங்கராயர்*** *(சிக்கதேவராயர்)*, ***அவருடைய பதினேழுவயது மூத்தமகன், மனைவி, மூன்றாவது மகன் ஆகியோரைத் தன் வாளால் வெட்டிக் கொலை செய்தான்.***

105.1.11. யச்சமநாயக்கர் தான் கடத்திச் சென்ற சிறுவனுக்கு எப்படியும் பேரரசர் பதவியைக் கிடைக்கச் செய் திடுவார் என்பதை உணர்ந்த ஜக்கராயன், யாசமநாயக்கரையும், சிறுவன் ஸ்ரீராமனையும் ஒழித்துக்கட்டப் படை திரட்டினான். இரண்டாண்டு காலம் யாசமநாயக்கருக்கும் ஜக்கராயருக்கும் கடுமையான மோதல்கள் நிகழ்ந்தன. கி.பி.1616ஆம் ஆண்டுத் தொடக்கத்தில் யாசம நாயக்கரால் கடுமையாகத் தாக்கப்பட்ட ஜக்கராயன் யச்சமனையும், சிறுவன் இராமனையும் பூண்டோடு அழிக்கத் திட்டமிட்டுச் செஞ்சி கிருஷ்ணப்ப நாயக்கர், மதுரை முத்துவீரப்ப நாயக்கர் ஆகியோரின் உதவியை நாடிப் பெரும் படையுடன் ***தமிழகம் வந்து ஸ்ரீரங்கத்தில் தங்கி இருந்தான் என்பதை பரதாஸ் என்பாரின் கடிதம் தெளிவாகக் கூறு கின்றது.***

105.1.12. இதே நிகழ்ச்சிகளை யஜ்ஞநாராயண தீக்ஷிதர் சற்றுச் சுருக்கமாகக் கூறுவதுடன் மேலும் சில வரலாற்றுச் செய்தி களையும் விவரித்துள்ளார். வேங்கடபதிராயரின் இறுதிக்கால

நிகழ்ச்சிகளையும், ஸ்ரீரங்கராயர் குடும்பம் கொலையுண்டதையும், ஜக்கராயர் திருவரங்கம் வந்துள்ளதையும், அதே நேரத்தில் யாசம நாயக்கர் தஞ்சை இரகுநாத நாயக்கரின் உதவியை நாடித் தன் பெரும்படையுடன் தஞ்சை வந்து கொண்டு இருப்பதையும் ஒற்றர்கள் மூலம் கோவிந்த தீட்சிதர் தெரிந்து கொண்டு, அதனை இரகுநாத நாயக்கரின் தந்தை அச்சுத தேவராயருக்கு எடுத்துச் சொல்லி இரகுநாதனை இதற்கு ஆயத்தப்படுத்த அறிவுரை கூறியதாகவும் கூறியுள்ளார். மேலும் கல்லணையை நோக்கிப் படையெடுத்துச்செல்வதற்கு முன்பாகவே இரகுநாதர் கும்ப கோணத்தில் யாசம நாயக்கரையும், இளைஞன் ஸ்ரீராமனை யும் எதிர் கொண்டழைத்து ***அச்சிறுவனுக்குக் கும்பகோணத் திலேயே விஜயநகரப் பேரரசனாக முடிசூட்டச் சென்ற தையும் குறிப்பிடுகின்றனர்.***

105.1.13. ஈழத்திலிருந்து சோழநாடு திரும்பிய இரகுநாதன் நேரே கல்லணைப் பகுதியில் காவிரியின் தென்கரையில் உள்ள பழமானேரியை அடைந்ததாகத் தஞ்சை இலக்கியங்கள் கூறுகின்றன. ஜக்கராயனின் பெரும்படை செஞ்சி, மதுரை நாயக்கர்களின் படைகளோடு கல்லணை அருகில் உள்ள தோப்பூர் *(தற்போது தோகூர் என அழைக்கப் பெறுவது)* எனும் ஊரில் போர் புரிய ஆயத்தமாயினர்.

105.1.14. தோப்பூர் போர் பற்றி இரகுநாத நாயக்கரின் மகனான விஜயராகவ நாயக்கர் எழுதிய '*இரகுநாதாப்யுதயமு*' எனும் தெலுங்கு நூல் *(சரஸ்வதி மகால் நூலகம் - தெலுங்குச் சுவடி எண் - 687 - 559)* மிக விரிவாகக் கூறுகின்றது. நள ஆண்டு ஆஷாட மாதம் வளர் பிறை ஐந்தாம் நாள் இப்போர் தொடங்கியதாகக் கூறுகின்றது. காவிரியின் தென்கரையில் தோப்பூருக்குக் கிழக்காக எட்டு கிலோ மீட்டர் தொலைவிலுள்ள பழ மானேரியில் இரகுநாதன் முகாமிட்டிருந்தார். காலை எழுந்தவுடன் தனது

கடமைகளை முடித்துக் கொண்ட இரகுநாதன் **இராமபத்ரன் எனும் தனது பட்டத்து யானையின் மீது ஏறிக் கொண்டு, தனது மூத்த மகன் இராமபத்ரன் துணை புரியப் போருக்குப் புறப்பட்டார்.** *(பட்டத்து யானைக்கும் இராமபத்ரன் என்ற பெயர், தன் மூத்த மகனுக்கும் அதே பெயர், தன் அரண்மனையில் இராமனுக்கு ஓர் ஆலயம், தினந்தோறும் ஸ்ரீராமாயணபாராயணம் பண்ணாமல் எந்தக் காரியத்தையும் செய்யமுற்படுவதில்லை. இம்மன்னனின் இராம பக்தி என்னே!)* மன்னனின் இருமருங்கும் இணைந்து வந்த இரண்டு யானைகளில் ஒருபுறம் புருஷோத்தம்மய்யா, நரசப்பா என்ற இரு படைத்தலைவர்களும், மறுபுறம் அஸ்தப்பா, அழகப்பா எனும் இருவரும் தொடர்ந்துவர மன்னன் இரகுநாதன் போர்க்களம் நோக்கிப் புறப்பட்டார். விஜய நகரப் பேரரசனாகக் குடந்தையில் முடிசூட்டப் பெற்ற இளைஞன் இராமதேவராயன் மற்றொரு யானையின் மேல் அமர்ந்த வண்ணம் இரகுநாதனைப் பின் தொடர்ந்தான்.

105.1.15. திரும்பும்போது ஜக்கராயனின் சகோதரன் யதிராஜனும், செஞ்சி கிருஷ்ணப்ப நாயக்கனும் தோப்பூரிலிருந்து தம் படைகளுடன் ஓடிய போதும், சோழ நாட்டுப் படையைத் தாக்க யத்தனிக்கின்றனர் என்பதை அறிந்த இரகுநாதன் தஞ்சைக்குத் திரும்பாமல் திருவையாற்றில் முகாமிட்டுக் கொண்டு தன் படையைச் செஞ்சி கிருஷ்ணப்பனை நோக்கி அனுப்பிவைத்தார். தஞ்சைப் படைகள் செஞ்சி நாயக்கரின் புவனகிரிக் கோட்டையை *(சிதம்பரத்திற்கு அருகில் உள்ள ஊர்)* கைப்பற்றிக் கிருஷ்ணப்பன் மற்றும் யதிராஜனின் படைகளை விரட்டிவிட்டு, அங்கிருந்த பெருஞ்செல்வங்களைக் கைப்பற்றித் தஞ்சை நோக்கித் திரும்பின. வெற்றிச்செய்தியை அறிந்தபின்பே திருவையாற்றிலிருந்து இரகுநாதன் தஞ்சை நோக்கித் திரும்பினான்.

105.1.16. விஜயராகவநாயக்கர், தமது '*இரகுநாதாப்யு*

*தயமு*' எனும் நூலில் இரகுநாதன் பழமானேரியிலிருந்து போருக்குப் புறப்பட்ட நாளை, "**அஞ்சித நளவஸ்த்ர ஆஷாட சுத்த பஞ்சமி புஷ்யார்க்க பரிக யோகமுன**" என்று குறிப் பிட்டுள்ளார். நள ஆண்டு ஆஷாட மாதம் வளர்பிறை பஞ்சமி திதியுடன் சூரியன் பூசத்திலுள்ள நாள் [மகம்] பரிகயோக காலமும் உடைய பொழுதில் புறப்பட்டார் என்று கூறப்பெற்றுள்ளது. இக் குறிப்பைக் காலக்கணக்கீட்டின் அடிப்படையில் நோக்கும் போது கி.பி.1616ஆம் ஆண்டு ஜூன் 9 ஆம் நாளான ஞாயிற்றுக் கிழமையில் இந்நிகழ்வு நிகழ்ந்தது என்பதறிகிறோம்.

105.1.17. பரதாஸ் இந்த நிகழ்ச்சிகளைக் குறிப்பிடும் போது தோப்பூர் போர் கி.பி.1616 டிசம்பர் 12 ஆம் நாளில் நிகழ்ந்ததாகக் குறித்துள்ளார். இக்குறிப்புக்களை வைத்து நோக்கும் போது **ஜக்கராயனின் பெரும்படை 'திருவரங்கத்தில்' இருந்து கொண்டு இரகுநாத நாயக்கருடன் மோத எத்தனித்துப் பல மாதங்கள் தங்கி இருந்து டிசம்பரில் மோதியிருக்கலாம்** என்று ஒரு வகையாகவும், அல்லது போர்க்களத்தைக் கண்ணால் பார்த்த விஜயராகவ நாயக்கரின் கூற்றுப்படியே ஜூன் மாதமே போர் நிகழ்ந்தது, பின்னர் வேறு எங்கோ ஓரிடத்திலிருந்து Barradas கடிதம் எழுதும்போது போர் நிகழ்ந்த மாதத்தைத் தவறாகக் குறிப்பிட்டிருக்கலாம் என்றும் ஊகம் கொள்ள முடிகிறது. எப்படி இருப்பினும் தோப்பூர் போர் கி.பி.1616 ஆம் ஆண்டில்தான் நிகழ்ந்தது என்பது தெளிவான ஐயமற்ற கூற்றாகும்.

105.1.18. பெருவெற்றியைப் பெற்ற இரகுநாதன் போர் நிகழ்ந்த இடத்தில் வெற்றித்தூண் [ஜயஸ்தம்பம்] ஒன்றினை நாட்டு வித்துத் தன் வரலாற்றை நிலைபெறுமாறு செய்தான் என்று இரகுநாதாப்யுதயம் என்னும் நூலில் கூறியுள்ளார்.

105.1.19. தஞ்சைநாயக்க வம்சத்தைத் தோற்றுவித்த

செவ்வப்ப நாயக்கர் சைவநெறி போற்றியவர். அவருடைய மகனான அச்சுதப்ப நாயக்கர் சைவம், வைணவம் ஆகிய இரு கோட்பாடுகளையும் பின்பற்றியவர். ஆனால் இரகுநாதனின் சமயப்பணிகள் முழுவதும் இராம வழிபாட்டை மையமாகக் கொண்டே அமைந்தன.

105.1.20. விஜயநகரப் பேரரசனாக இளைஞன் இராம ராயனுக்குக் கும்பகோணத்தில் முடிசூட்டு விழா நடத்தி மகிழ்ந்த இரகுநாதன் அவ்வூரிலேயே எழில் மிகுந்த இராமசாமிகோயிலை எடுத்த தோடல்லாமல், அங்கு இராம பட்டாபிஷேகக் கோலத்திலேயே திருமேனிகளையும் அமைத்து வழிபட்டான்.

105.1.21. இவ்வாறு ஜக்கராயன் ஸ்ரீரங்கம், திருச்சியைச் சுற்றிய காடுகளில் செஞ்சி மற்றும் மதுரை நாயக்கருடைய படைகளை எதிர்நோக்கி முகாமிட்டிருந்தான். அப்போது மதுரை நாயக்கனாக முதலாம் முத்துவீரப்பநாயக்கன் ஆண்டு வந்தான் [கி.பி.1609 -1623]. விஜயநகர மன்னர்களுக்கு அடங்கிய மண்டலாதிகாரி யாய் விளங்க விருப்பமற்றவனும், எவ்வழியை மேற்கொண் டேனும் தஞ்சை நாயக்கர் வம்சத்தை அழித்திட வேண்டும் என்ற எண்ணத்தோடும் இருந்த முத்துவீரப்ப நாயக்கன் ஜக்கராயனுக்கு உதவி புரிவதாக வாக்களித்தான்.

105.1.22. யாசமநாயக்கனும் அவனால் காப்பற்றப்பட இருக்கும் ஸ்ரீராமனுக்கும் தஞ்சை நாயக்கர்கள் எத்தகைய உதவியையும் செய்யக் கூடாது என்ற குறுகிய எண்ணத்தில் கல்லணையின் சில மதகுகள் ஜக்கராயனால் தகர்த்தெறியப் பட்டன. இரகுநாத நாயக்கன் தோப்பூர்போரில் அடைந்த வெற்றி முதலாம் முத்துவீரப்ப நாயக்கனை எந்தவிதத்திலும் பாதிக்க வில்லை. தனது தலைநகரை மதுரையிலிருந்து திருச்சி கோட்டைக்கு மாற்றினான். திருச்சிராப்பள்ளி மதுரை நாயக்கர் களுடைய தலைநகரமாக கி.பி.1640 வரை இருந்து வந்தது.

*பட்டர் ஶிஷ்யன் அழத்திவாழ்வித்தவன் என்கிற சோழியன்*

105.1.23. ஜக்கராயன் படைகள் திருவரங்கத்தில் முகாமிட்டிருந்த போது, திருவரங்கத்தில் பட்டர் திருமலா சார்யருக்கும் (*இவர் அந்தக் காலகட்டத்தில் கோயில் நிர்வாஹ அதிகாரியாய் பொறுப்பில் இருந்திருக்கக் கூடும்*) உத்தமநம்பி வம்சத்தில் வந்த ஒருவருக்கும் (*இவருடைய பெயர் கோயிலொழுகில் கொடுக்கப்படவில்லை*) ஏற்பட்டமோதல் ஒன்றினைத் தெரிவிக் கின்றது. இந்த நிகழ்சியைக் கோயிலொழுகு "***உத்தமநம்பிக்கும் பட்டர் திருமலாசார்யருக் கும் உண்டான கலஹம்***" என்று வர்ணித்துள்ளது.

105.2. கோயிலில் மிக முக்கியமானதொரு முத்ரையான கருட முத்ரையைப் போடுவதில் பட்டருக்கும் உத்தமநம்பிக்கும் அடிக்கடி மோதல்கள் ஏற்பட்டு வந்தன. இந்த கருடமுத்ரை உள்ளவருக்குத்தான் கோயிலுக்குச் சொந்தமான நிலங்களின் லிருந்து வருவாயைப் பெற்றுக் கைங்கர்யங்களைச் செய்யும் உரிமை வழங்கப்பட்டிருந்தது. முதலாம் முத்துவீரப்ப நாயக்கரிடம் உத்தமநம்பி ஒரு புகார் மனுவை கொடுத்தார். அதில் பட்டர் திருமலாசார்யர் தம்முடைய சொத்துக்களை அபஹரித்துக் கொண்டு விட்டதாகவும் தெரிவித்தார்.

105.3. இந்தக் கலஹத்தின் பின்புலத்தை அறிந்து கொண்டால் தான் மேலே சொல்லப்படும் நிகழ்ச்சிகளின் தாக்கத்தை அறிந்து கொள்ளலாம். சக ஆண்டு 1501-க்கு மேல் [கி.பி.1579] முத்து வீரப்பநாயக்கன் ஆண்டு கொண்டிருந்த காலத்தில் (*கோயிலொழு குறிப்பிடும் முத்துவீரப்பநாயக்கனின் சக ஆண்டு தவறானதாகும். ஏனெனில் வரலாற்று ஆசிரியர்களின் குறிப்புகளின்படி முதலாம் முத்துவீரப்ப நாயக்கன் ஆட்சியாண்டு கி.பி.1609-1623*) பட்டருடைய சிஷ்யனான அழத்திவாழ் வித்தவன் (*அழைத்து வாழ்வித்தவன்*) என்கிற சோழியன்

கோயிலிலே காணிமுத்₃ரையும் உடையனாய், அபுத்ரபத்நீ கனாய், காணிமுத்₃ரைகள் மேலே ப₄ட்டர் கையிலே கடன் பட்டு காலத₄ர்மமடைந்தபின்பு, அவன் பெண் ஸ்ரீரங்க நாய்ச்சியார் அபுத்ரவிதந்துவாய், தன் காணிகளைத் திருமாளிகைக்குக் கொடுக்கவிருக்கிறவளை, உத்தமநம்பி அநுஸரித்து மித்ரபே₄த₃ம் பண்ணி, தனக்கு ஒருபெண்ணும் ஒருபிள்ளையும் இருக்கிறதை ரஹஸ்யமாக ஸ்வீகாரம்

---

கோயிலிலே காணிமுத்ரை (*கருடமுத்ரை*) உடையவனாய் இருந்து வந்தான். இவன் பட்டருடைய சிஷ்யன். இவனுடைய மனைவி ஒரே ஒரு பெண்ணைப் பெற்ற பிறகு இறந்துவிட்டாள். இவனுக்கு ஆண்வாரிசு இல்லை. தன்னுடைய கருடமுத்ரையை பட்டர் திருமலாசார்யரிடம் அடகு வைத்து ஏராளமாகக் கடன் வாங்கியிருந்தான் இந்த அழத்திவாழ்வித்தவன் என்னும் சோழியன். இவனுடைய பெண்ணான ஸ்ரீரங்கநாய்ச்சியார், திருமணம் செய்து கொண்ட போதிலும் குழந்தைப்பேறு இல்லாமல் போனாள். அவளுடைய கணவனும் இறந்து விட்டான். அத்தகைய சூழ்நிலையில் தம்முடைய சொத்துக்கள் அனைத்தையும் பட்டர் திருமலாசார்யரிடம் ஒப்படைப்பதாகத் தீர்மானித்தாள் ஸ்ரீரங்கநாய்ச்சியார்.

105.3.1. இந்தச் செய்தியை அறிந்த உத்தமநம்பி அந்த ஸ்ரீரங்கநாய்ச்சியாரை அணுகி அவளிடம் நயமாகப் பேசி, தம்முடைய பெண்ணையும் பிள்ளையையும் ஸ்வீகாரம் எடுத்துக் கொள்ளும்படி செய்தார். பட்டர் திருமலாசார்யரிடம் அவளுடைய சொத்துக்களை ஒப்படைக்க வேண்டாம் என்றும் அறிவுறுத்தினார். இதையறிந்த பட்டருடைய சிஷ்யர்கள் ஸ்ரீரங்கநாய்ச்சியாரிடம் சென்று பட்டரிடம் பட்ட கடனுக்கு அவளுடைய சொத்துக்களை ஒப்படைக்க வேண்டுமென்று வற்புறுத்தினார்கள்.

105.3.2. ஸ்ரீரங்கநாய்ச்சியாருக்குத் தமது பெண்ணையும்

*பண்ணுவிக்க; இதறிந்துப$_4$ட்டர் மநுஷ்யர்கள் அவளை அழைக்கவருகையில், அவர்களைத் தள்ளிவிட்டு, அவள் காணிகளையும் லபி$_4$த்து, ப$_4$ட்டர் கையிலே முத்$_3$ரை அகப்பட்டுப்போனபடியினாலே வேறே க$_3$ருட$_3$முத்$_3$ரை பண்ணிக் கோயிலிலே போடுகையில்; ப$_4$ட்டர் திருமலா சார்யரும் அந்த முத்$_3$ரையைப் போடுவர்; ஒருத்தருக் கொருத்தர் கலஹமுண்டாய், உத்தமநம்பி முத்து வீரப்ப நாயக்கரைக் கண்டு திருமலாசார்யரை அழைப்பித்து வர சரி சொல்லி, அவர் முத்$_3$ரையை நிறுத்திப்போட்டார்.*

---

பிள்ளையையும் ஸ்வீகாரம் கொடுத்த பிறகு உத்தமநம்பி அவளுடைய நிலங்களைத் தம்வசப்படுத்திக் கொண்டார். அந்த நிலங்களுடைய வருவாய் ஸ்ரீபண்டாரத்தில் சேர்ப்பிக்கப் பட்டபோது தாம் தயார் செய்த போலி கருடமுத்ரையை இடமுயற் சித்தார். அசலான கருடமுத்ரை பட்டர் திருமலாசார்யாரிடம் இருந்ததால் அவரும் கருடமுத்ரையை இட, உத்தமநம்பிக்கும் பட்டர் திருமலாசார் யருக்கும் பகை மூண்டது.

105.3.3. இதன் விளைவாக அடிக்கடி இரு தரப் பினருக்குமிடையே வாக்குவாதங்களும் கைகலப்பும் நிகழ்ந்தன. மதுரை நாயக்கனான முதலாம் முத்துவீரப்ப நாயக்கனிடம் உத்தமநம்பி சென்று முறையிட்டார். பட்டர் திருமலாசார்யரை தன்னுடைய அரசவைக்கு அழைத்துவரச் செய்தான் முத்துவீரப்ப நாயக்கன்.. உத்தமநம்பி, பட்டர் திருமலாசார்யர்த் மீது பல குற்றச்சாட்டுகளைச் சுமத்தினார். பட்டர் திருமலாசார்யர் கருட முத்ரையை உபயோ கிக்கக் கூடாது என்று ஆணை பிறப்பித்தான் முத்துவீரப்ப நாயக்கன். ***இந்தத் தருணத்தில்தான் ஜக்கராய னுடைய படைகளுக்கு உதவுவதற்காக முத்துவீரப்ப நாயக்கன் திருவரங்கத்திற்கு வருகை தந்தான்.***

105.3.4. இரகுநாத நாயக்கன் – யாசமநாயக்கன் ஆகியோர்

*சில காலத்துக்குப் பின்பு, த்ரிசிரபுரத்தின்மேலே ராயர் படையெடுத்து வருகையில், துரை, திருமலாசார்யரை அழைத்து, ஸ்வாமி ஸொத்தெல்லாம் தன் அதீ$_4$நத்துக்குக் கோட்டையிலே சேர்க்கச்சொல்ல; ப$_4$ட்டர் திருமலா சார்யரும், 'நாம் ஸமயம் கூட்டி வந்தபேருக்கு ஸ்வாதீ$_4$நமா காமல் ஸ்த்த$_2$லத்தை நிர்வஹித்து, பின்பு உம் வசம்*

---

ஒரு பக்கத்திலும், ஜக்கராயன், முத்துவீரப்ப நாயக்கன், செஞ்சி நாயக்கன் ஆகியோர் மற்றொரு பக்கத்திலும் இருக்க எந்த நேரமும் போர் அபாய மேகங்கள் திருவரங்கத்தைச் சூழ்ந்திருப் பதால், கோயிலிலுள்ள அனைத்து ஆபரணங்களையும் மற்றைய தங்கம், வெள்ளியிலானான பொருட்களையும், பண்டங்களையும் திருச்சி கோட்டையில் பாதுகாப்பாக வைத்திடும்படி பட்டர் திருமலாசார்யாருக்குக் கட்டளையிட்டான் முத்துவீரப்ப நாயக்கன். ஆனால் பட்டரோ அவனுடைய ஆணைக்குக் கீழ்ப்படியாததோடு மட்டுமல்லாமல், ***அரங்கனுடைய சொத்து காவிரி நதியைத் தாண்டி இன்னொரு இடத் திற்குச் செல்ல அனுமதிக்க முடியாது*** என்று உறுதிபடக் கூறினார்.

105.3.5. மேலும், பட்டர் திருமலாசார்யர் அநேக திரிதண்டி ஸந்யாஸிகளையும், ஸ்ரீவைஷ்ணவ அடியார்களையும் திரட்டி, அவர்களிடம் 'ராமானுஜகத்தியைக்' கொடுத்து அரங்கனையும் கோயில் சொத்தையும் பாதுகாப்பதற்கான ஏற்பாடு களைச் செய்துள்ளதாகவும், அவ்வாறு தன்னால் அரங்கனுடைய சொத்தைக் காப்பாற்ற இயலாத சூழ்நிலையில் அந்தச் சொத்தைப் பாதுகாக்கும் பொறுப்பை முத்துவீரப்ப நாயக்கனிடம் ஒப்படைப் பதாகவும் கூறினார்.

105.3.6. முத்துவீரப்ப நாயக்கனிடம் கூறியது போல், அனேக ஸ்ரீவைஷ்ணவர்களைத் திரட்டி அவர்களுக்கு ஸந்யாஸி

*பண்ணுகிறோம்' என்று ப்ரமாணம்பண்ணி, ஸ்த்த2லத்தில் வந்து, அநேக த்ரித3ண்ட3 காஷாயங்கள் ஸேக2ரித்து ராமாநுஜ கத்தியுடன் அநேகம்பேருக்கு ஸந்யாஸி வேஷமாகவும் ஏகாங்கிகளுமாகப் பண்ணி, கொம்மைக்கு ஒருத்தர் விழுக்காடுவைத்து, 'ஸ்ரீமத்3ரங்3ம் மஹத்3தா4ம' என்று கூப்பிடச்சொல்ல; தோகூரிலே ராயர் படையிறங்கி, இது அறிந்து, ராயர் உத்தரவின்படி ரகு4நாத2நாயக்கரும் ஒரு அடப்பக்காரனுமாய் உள்ளேவந்து ஸ்வாமியை ஸேவிக்க; திருமலாசார்யரும், "உமக்கு ஜயம் வந்தாப்போலே ஸ்த்த2லம் உம்வசம் பண்ணுகிறோம்" என்று விநயவாக்கினாலே ரஞ்ஜிப்பிக்க; அவன் ஸந்துஷ்டனாய்ப் போனான்.*

---

யினுடைய உடையினை அணிவித்து, ஒவ்வொருவரிடமும் இராமானுசக் கத்தியைக் கொடுத்து ஸ்ரீரங்கத்திலுள்ள அனைத்து வீடுகளின் முன்பு **'ஸ்ரீமத்ரங்கம் மஹத்தாம'** *(ஒப்பற்றதும், உயர்வானதுமான ஸ்ரீரங்கம் திருக்கோயில்)* என்று கூவிக் கொண்டு நின்று அரங்கனையும், கோயில் சொத்தினையும் காத்திடுமாறு பணித்தார். ஸ்ரீரங்கத்தின் நிலைமை இவ்வாறிருக்க, யச்சமநாயக்கனுடன் தோப்பூருக்கு *(தோகூருக்கு)* வந்த விஜயநகர மன்னனான ஸ்ரீராமனின் ஆலோசனைப்படி இரகுநாதநாயக்கர் தன் அடப்பக்காரன் ஒருவனுடன் *(அடப்பக்காரன்-வெற்றிலைப் பெட்டியைச் சுமந்துவருபவன். இந்த அடப்பக்காரர்கள் அரசனுடைய பாதுகாப்புக்கருதி எப்போதும் அவனுடன் இருப்பவர்கள். தற்காலத்திய பூனைப்படையைப் போன்றவர்கள்)* பெரிய பெருமாளைத் தண்டனிட்டு அவருடைய அநுக்ரஹத்தைப் பெறுவதற்காக வந்தான்.

105.3.7. அங்கே பட்டர் திருமலாசார்யர் இரகுநாத ராயனை நோக்கி 'நீ அனேக வெற்றிகளை அடைந்தவன். வெற்றித்திருமகன் நீ, ஸ்ரீரங்கத்தை உனக்கு உரித்ததாக நான்

அந்த ஸமயத்திலே, உத்தமநம்பி, ப4ட்டர் ராயருக்கு எழுதின தாக ஒரு தப்போலையை முத்துவீரப்பநாயக் கருக்குக் கொடுக்க; அவனும், நமக்கு "ஹிதராயிருக்கிறவர் த்3ரோஹம் பண்ணுவரோ?" என்று ஸம்ஶயப்பட; "அந்த ரகு4நாத2 நாயக்கரைப்போல நீரும் வந்தால் நாம் பிடித்துத்தருகிறோம்" என்று சொல்ல; அந்தப்படி ஸ்வாமியை ஸேவிக்க; உத்த நம்பியும் அண்ணனண்டையிலே வந்து "ப4ட்டர் மேலே

---

செய்திடுவேன்' என்று கூறினார். பெரியபெருமாள் திருமுன்பு இத்தகைய வார்த்தைகளைக் கேட்ட இரகுநாதநாயக்கன் பெரு மகிழ்ச்சி கொண்டவனாய் தோகூருக்குத் திரும்பி வந்தான்.

105.3.8. இந்தச் சமயத்தில் உத்தமநம்பி, பட்டர் திருமலாசார்யர், இரகுநாதநாயக்கனுக்கு எழுதியதாக ஒரு போலி ஓலையைத் தயாரித்து, அதன் நகலை மதுரை நாயக்கமன்னனும் அப்போது திருச்சிராப்பள்ளி கோட்டையில் இருந்தவனுமான முத்துவீரப்பநாயக்கனுக்கு அனுப்பிவைத்தார். இந்த ஓலையைக் கண்ட முத்துவீரப்ப நாயக்கன் பட்டர் திருமலாசார்யர் மீது பெரும்சினம் கொண்டான்.

தனக்கு ஆதரவாக விளங்கிய பட்டர் திருமலாசார்யர் நம்பிக்கை துரோகியாக மாறிவிட்டாரே என்று வருத்தமுற்றான். அப்போது உத்தமநம்பி, முத்துவீரப்ப நாயக்கனிடம் 'இரகுநா தநாயக்கன் ஸ்ரீரங்கம் கோயிலுக்கு வந்தது போல் நீயும் வந்தால், பட்டர் திருமலாசார்யரின் கபட வேஷத்தை நீ அறிந்து கொள்ளலாம், கையும் களவுமாக நான் பிடித்துத் தருகிறேன்' என்று கூறினார்.

105.3.9. உத்தமநம்பி இதன் மத்தியில் கோயிலண்ண னிடம் சென்று பட்டர் திருமலாசார்யரைப் பற்றிய பல

*தே₃ாஷங்களை துரைக்குச் சொல்லவேணும்" என்று கேட்கையில்; அவர் அஸம்மதராகையாலே, மிகவும் நிர்ப்ப₃ந்தி₄த்து, "உத்தமநம்பி சொன்னது ஸரி" என்று சொல்லச்சொல்லி ஸம்மதிபண்ணுகையில்; துரையை அழைத்துவந்து, அண்ணங் காரை துரை கேட்கையில், அவரும் அப்படி சொன்னதினாலே துரைக்கு மநஸ்ஸிலே பட்டு, வாசலிலே ப₄ட்டரைப் புரஸ்கரியாமல், வெளியிலே போய் ராயரை ஸமாத₄ாநம் பண்ணி அனுப்பி, தண்டு போகையில்; உத்தமநம்பி, "ப₄ட்டர்கையில் லக்ஷாந்தரம் அறுவிட்டுத் தருகிறோம், அவர் ஶிஷ்யன் கத்திவால்*

---

குற்றச்சாட்டுகளை முத்துவீரப்பநாயக்கனிடம் கூறிடுமாறு கட்டாயப்படுத்தினார். கோயிலண்ணனுக்கு இவ்வாறு செய்வதில் விருப்பம் இல்லை. ஆயினும் உத்தமநம்பியின் வற்புறுத்தலுக்கு இணங்க தாம் உத்தமநம்பி சொல்வதற்கெல்லாம், சரி என்ற வார்த்தையைக் கூறுவதாக உறுதியளித்தார்.

105.3.10. முத்துவீரப்ப நாயக்கன் ஸ்ரீரங்கம் கோயிலுக்கு வந்து பெரியபெருமாளை ஸேவித்த பிறகு கோயிலண்ணனிடம் பட்டர் திருமலாசார்யரைப் பற்றிய அபிப்பிராயத்தைக் கேட்க, அவரும் உத்தமநம்பி சொன்னதெல்லாம் சரியான தகவல்களே என்று கூறினார். இதுகேட்ட முத்துவீரப்ப நாயக்கன், தாம் ஆதரவாக நம்பியிருந்த பட்டர் திருமலாசார்யர் இப்படி துரோகம் இழைத்து விட்டாரே என்று மீண்டும் வெகுண்டான். பட்டர் திருமலாசார்யரைப் போய்ப் பார்க்காமல் தனது அரண்மனைக்கு திரும்பிய முத்துவீரப்ப நாயக்கனிடம், உத்தமநம்பி சென்று 'இந்த பட்டரிடமிருந்து உனக்குச் சேரவேண்டிய *(கோயிலுக்கு நிலங்களிலிருந்து வந்த வருமானத்திற்கு ஏற்பட்ட வரிவிகிதம்)* பங்கான ஒரு லக்ஷத்திற்கும் மேற்பட்ட வராகன்களை நான் எப்படியேனும் வசூல் செய்து உம்மிடம் சேர்ப்பிக்கிறேன். அதற்கோர் உபாயமுண்டு. பட்டருடைய சிஷ்யனான கத்திவால் நாயக்

நாயக்கனைக்கொண்டு ஆகவேணும்" என்று உபாயம் சொல்ல; துரையும் அவனையழைத்து, "ஒரு காரியம் அகத்தியமாய்ப் பண்ணித்தரவேணும்" என்று கேட்க; அவனும், "உங்களுக்கு த்₃ரோஹம் பண்ணுகிறதில்லை, தாய்தலையைக் கொண்டுவரச் சொன்னாலும் கொண்டு வருகிறேன்" என்ன; திருமலாசார்யரைக் கொண்டுவரச் சொல்ல; "ஆகட்டும்" என்று, அநேக ஜட்டிகளையும் ஆனை களையும் கூட்டிக்கொண்டுவந்து, "ஶிஷ்யன் வருகிறேன்" என்று ஐயங்காருக்குச் சொல்லியனுப்பிவைக்க; அவரும், உள்ளே அழைத்துவரச் சொல்லி, பரஸ்பரம் ப்ரீதர்களாக விருக்கையில்; ஒரு ஸமயத்தை உத்தமநம்பி நாயக்கருக்குச்

---

கனைக் கொண்டு இந்த காரியத்தை முடித்திடலாம்' என்று கூறினார்.

105.3.11. அரண்மனைக்குத் திரும்பிய முத்துவீரப்ப நாயக்கனும் பட்டர் சிஷ்யனான கத்திவால் நாயக்கனை அழைத்து, 'உன்னாலே எனக்கு ஒரு காரியம் ஆகவேண்டும்', என்ற கூற அவனும் 'அரசே உனக்காக நான் எதையும் செய்யச் சித்தமாயிருக்கிறேன், என் தாயின் தலையை வெட்டிக் கொண்டு வா என்று சொன்னாலும், அதைச் செய்திடுவேன்' என்று மறுமொழி கூறினான். இந்த வார்த்தைகளைக் கேட்ட முத்துவீரப்ப நாயக்கன் மகிழ்ச்சியுற்றவனாய் அவனிடம், எந்த உபாயத்தை யாவது கைக்கொண்டு பட்டர் திருமலாசார்யாரைத் தன்னிடம் ஒப்படைத்திடுமாறு கேட்டுக் கொண்டான்.

105.3.10. கத்திவால் நாயக்கனும் சில மல்யுத்த வீரர்களையும், யானைகளையும் அழைத்துக் கொண்டு ஸ்ரீரங்கம் சென்றான். பட்டர் திருமலாசார்யருக்கு சிஷ்யனாகிய தான், அவரைப் பார்க்க வருவதாகச் சொல்லியனுப்பினான். தன் வாசலில் வந்த சிஷ்யனை உள்ளே அழைத்து அவனிடம் பேசிக்

சொல்ல; அந்தவேளையில், நாயக்கரும் பெருமாளை ஸேவித்து, ப₄ட்டர் வாசலிலே வர; ப₄ட்டரைக் கண்டு ஸேவித்து; வாசலிலே தனித்துநிற்கிற ப₄ட்டரை ஆனையைப் படுக்கவைத்து, க்ருதஸங்கேதர்களான மல்லரைக்கொண்டு, ப₄ட்டரை ஆனைமேலே பிடித்துப் போட்டுக் கொண்டு, துரை

---

கொண்டி ருக்கும் சமயத்தில் முத்துவீரப்ப நாயக்கனுக்குச் செய்தி சொல்லியனுப்பினார் உத்தமநம்பி. முத்துவீரப்ப நாயக்கனும் பெரியபெருமாளை ஸேவித்துவிட்டு, கோயில் வாசலிலே நின்ற பட்டரைக் கண்டு அளவளாவிக் கொண்டிருந்தான். அப்போது சிஷ்யனான கத்திவால் நாயக்கன் யானையை உட்காரவைத்து அதன் மேல் தன்னுடன் இருந்த மல்யுத்த வீரர்களைக் கொண்டு வலுக்கட்டாயமாகத் திருமலாசார்யரை யானைமேல் ஏற வைத்து அவரைச் சிறைபிடித்தான்.



*பங்குனி ப்ரஹ்மோத்ஸவத்தில் நம்பெருமாள் திருத்தேரில் எழுந்தருளும் கோரத மூலை*

*உத்தரவின்மேலே து₃ர்க்க₃த்திலே ஆறுமாஸம் போட்டு, உத்தமநம்பியைக் கொண்டு வீடு கொள்ளையிட்டு, மநுஷ்யர்களையும் பிடித்துக் கொண்டு, அவரதீ₄நத்தை ஸ்ரீரங்க₃ம் தாதாசார்யருக்கு அதீ₄நம் பண்ணிப் போட்டான். அவர் குஞ்சுகுழந்தைகளும் துறையூருக்குப் போனார்கள்.*

*அவ்விடத்து ரெட்டி இருபதினாயிரம் பொன் அரண்மனைக்குக் கொடுத்து, அவரை விடுவித்து, துறையூர் சீமையிலே ஏழுவருஷம் வைத்துக்கொண்டிருக்கையில்; அந்த துரைக்குப்பின்பு திருமலைசௌரி ராஜ்யம் பண்ணுகையில்,*

---

105.3.10. முத்துவீரப்பநாயக்கனுடைய ஆணைப்படி பட்டர் திருமலாசார்யர் ஆறு மாதம் திருச்சிராப்பள்ளி கோட்டையில் சிறை வைக்கப்பட்டார். உத்தமநம்பியைக் கொண்டு பட்டர் திருமலாசார்யருடைய வீட்டைச் சூறையாடச் செய்ததோடு மட்டுமல்லாமல் அவருடைய குடும்பத்தினரையும் சிறையிலிட்டான். பட்டர் திருமலாசார்யருடைய ஆதீனத்தை ஸ்ரீரங்கம் தாத்தாசார்யருக்கு மாற்றிக் கொடுத்தான். பட்டர் திருமலாசார்யருடைய குடும்பத்தினரும், குழந்தைகளும் துறையூரில் சிறை வைக்கப்பட்டனர்.

105.3.11. பட்டர் திருமலாசார்யாருடைய சிஷ்யனான துறையூர் ரெட்டி, முத்துவீரப்ப நாயக்கனுக்கு 20 ஆயிரம் பொன் கொடுத்து அவரையும், அவர் குடும்பத்தினரையும் விடுவித்தான். அவன் தமது ஆசார்யரான பட்டர் திருமலாசார்யரைத் துறையூரிலே ஏழு ஆண்டுகள் தங்க வைத்து, அவருக்கு வேண்டிய அனைத்து வசதிகளையும் பண்ணித்தந்தான். முத்துவீரப்ப நாயக்கருடைய மரணத்திற்கு பிறகு, அதாவது கி.பி.1623-இல் திருமலை சௌரி என்பான் மதுரை நாயக்க வம்சத்தின் அடுத்த மன்னனாக முடிசூடிக் கொண்டான் *(கி.பி.1623-59)*.

*அந்த ப4ட்டர் அவரை அநுஸரித்து; “இந்த அநர்த்த2மெல்லாம் உம்முடைய பெரியவர்கள், உத்தமநம்பி அண்ணங்கார் இவர்கள் வார்த்தையைக் கேட்டு நம்மை இப்படி பண்ணி னார்கள்” என்று சொல்லுகையில்; துரையும், ப4ட்டரை உபசாரோக்திகளினாலே ஶமிப்பித்து ப3ஹுமாநம் பண்ணி, அவரதி4நமர்யாதை3களை யதா2ப்ரகாரம் கொடுத்தனுப்ப; உத்தமநம்பியும், பூர்வத்3வேஷபீ4தனாய், அவரை ஸ்நேஹித் திருக்கையில். சிலநாளைக்குப் பின்பு, துரை து3ர்பு3த்3தி4 யாலே தம்முடைய ஆசார்யரான ப்ரணதார்த்திஹர வாதூ4ல*

---

105.4. திருமலைசௌரியை நேரில் கண்டு ஆசி வழங்கிய பட்டர் திருமலாசார்யர், அவனிடம் ‘மன்னவனே, எனக்கு நேர்ந்த இந்தத் தாழ்வுகளுக்கெல்லாம் உத்தமநம்பியும், கோயிலண்ணனுமே மூலகாரணம். உன்னுடைய தந்தை உத்தமநம்பி, கோயிலண்ணன் ஆகியோருடைய ஆலோசனை களைக் கேட்டு என்னை இந்த கதிக்கு ஆளாக்கினன்’ என்று முறையிட்டார். இதைக் கேட்ட திருமலைநாயக்கன் *(இந்த நாயக்க மன்னனை திருமலை சௌரி என்று கோயிலொழுகு குறிப்பிடுகிறது.)* அவருக்குத் தக்க பரிசுப் பொருட்களை அளித்து, அவரிடமிருந்து பறிக்கப்பட்ட உரிமைகளையும், உடமை களையும் அவருக்கு மீண்டும் அளித்து, அவருக்கு உரிய ஆதீனத்தையும், தாத்தாசார்யரிடமிருந்து மீட்டுத்தந்தான்.

105.5. இவ்வாறு பட்டர் திருமலாசார்யர் ஸ்ரீரங்கத்திற்கு திரும்பிவந்தபிறகு உத்தமநம்பி முன்பு அவருக்குச் செய்த துரோகத்திற்குத் திருமலைசௌரி நடவடிக்கைகள் எடுப்பானோ என்று அஞ்சி, பட்டர் திருமலாசார்யருடன் மீண்டும் நட்பைப் புதுப்பித்துக் கொண்டார்.

105.6. இந்த நிகழ்ச்சிகளுக்குப் பிறகு, திருமலைசௌரி காலக்கோளாறினால் துர்மதிபடைத்தவனாய், தனது ஆசார்யனான

*தேஶிகரை அதிக்ரமித்து; அவரை தேஶாந்தரம் போம்படி பண்ணி, ஶைவதீக்ஷையில் பண்டாரம் மநுஷ்யன் அய்ய களையனிடத்தில் ஶிஷ்யனாய், முன் ஆசார்ய ஜ்ஞாதி களென்கிற அபிமாநமும் அண்ணங்காரிடத்தில் தப்பினதுக்கு ஸ்த்தலத்திலே செங்கோல் கொடாததினாலே த்வேஷம் பிறந்து,*

*அர்த்தாசையினாலே பட்டரைக் கைப்பிடித்து, "உமக்கு ஸ்த்தலத்திலே விரோதி யார்? அர்த்தவான்களார்? காரியக் காரர் ஆர்?" என்று கேட்க; "அண்ணங்காரும், உத்தமநம்பியும்"*

---

ப்ரணதார்த்திஹர வாதூல தேசிகரை அவமதித்து அவரை ஸ்ரீரங்கத்தை விட்டு வெளியேற்றினான். தன்னுடைய ஸ்ரீவைஷ்ணவ நிலையைத் துறந்து, திருவானைக்காவில் இருந்த அய்யங்களையன் *(அய்யங்களையனைப் பற்றிய குறிப்பு திருவானைக்கா கோயிலில் அமைந்துள்ள கல்வெட்டு எண்* A.R.E. 112 of 1936-37 *காணப்படுகிறது.)* என்ற சைவ பண்டாரத்திடம் தீக்ஷை பெற்றான். இந்தச் செய்கையினாலும், கோயிலண்ண னிடம் அபசாரப்பட்டதாலும், ஸ்ரீரங்கம் கோயிலில் அவனுக்கு ஏற்பட்ட விசேஷ மரியாதைகளை அவனால் பெற இயல வில்லை. இதனால் கோபமடைந்த திருமலைசௌரி ஸ்ரீரங்கம் கோயில் நிர்வாஹ அதிகாரிகள் மீது கோபம் கொண்டான்.

105.7. அப்போது பட்டர் திருமலாசார்யரைத் தனது அரண் மனைக்கு அழைத்து வரச்செய்து, 'இந்தக் கோயிலில் உம்முடைய நலனுக்கு எதிராகச் செயல்படுபவர்கள் யார்?, இந்தக் கோயிலின் ஸ்ரீபண்டாரப் பொறுப்பு யாரிடம் உள்ளது? இந்தக் கோயில் நிர்வாஹ அதிகாரி யார்? என்பதை எமக்குத் தெரியப்படுத்தும்' என்று கேட்டுக் கொண்டார். அதற்கு பட்டர் திருமலாசார்யர், 'கோயிலண்ணனும், உத்தமநம்பியும்' என்று

என்று சொல்ல; "அவர்களுக்கு புத்தி சொல்லுகிறோம்" என்று ஒருக்கால் ஸ்ரீரங்கத்துக்கு வந்தான்.

**கோயிலொழுகு முதல்பாகம் ஸம்பூர்ணம்**

---

பதிலளித்தார். 'நாம் அவர்களுக்கு ஒரு பாடம் கற்பிக்கிறோம்' என்று கூறிக்கொண்டு ஸ்ரீரங்கத்திற்கு திருமலை சௌரி வருகை தந்தான்.

*(கோயிலொழுகின் இந்தப் பகுதி 17-ஆம் நூற்றாண்டில் நடந்த வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த பல நிகழ்ச்சிகளைக் குறிப்பிட்டுள்ளது. விஜயநகர சாம்ராஜ்யத்தின் மன்னனான ஸ்ரீரங்காவிற்கு ஆதரவளித்த இரகுநாதநாயக்கன் ஸ்ரீரங்கம் கோயிலுக்கு வருகை தந்தது, யாசமநாயக்கனுக்கு இரகுநாத நாயக்கன் உதவிக்கரம் நீட்டியது, உள்நாட்டுப் போர் மூளுவதற்கு முன்பு ஸ்ரீரங்கத்தின் நிலைமை, முத்துவீரப்ப நாயக்கனுடைய கோரிக்கை, அதற்கு பட்டர் திருமலாசார் யருடைய பதில், பட்டர் திருமலாசார்யடைய உறுதிப்பாடு, அதனால் அவர் எதிர்கொள்ள நேர்ந்த சிறைவாசம், தோகூர் போரைப்பற்றிய குறிப்புகள் போன்றவை இந்தப் பகுதியில் கொடுக்கப்பட்டுள்ளன.*

*ஆயினும் ஸ்தலத்தார்களாகிய உத்தமநம்பி, பட்டர் திருமலாசார்யர், கோயிலண்ணன் ஆகியோரிடையே ஏற்பட்ட தான மனத்தாங்கல்களும், கசப்புணர்ச்சியும், சற்று மிகைப் படுத்தியே கோயிலொழுகில் விவரிக்கப்பட்டுள்ளதாக நாம் கொள்ளவேண்டும். ஸ்தலத்தார் சிலரிடம் இந்த நிகழ்ச்சியை ஏடுபடுத்தியவருடைய பகைமை உணர்ச்சியும் இதற்குக் காரணமாய் அமைந்திருக்கலாம்.)*

**(கோயிலொழுகு முதல்பாகம் முற்றும்)**

***குறிப்பு :***

கோயிலொழுகின் முதற்பகுதி கி.பி.1623-ஆம் ஆண்டு முத்துவீரப்ப நாயக்கனுடைய காலத்தோடு முடிவுற்றாலும், அதன் பிறகு பட்டத்திற்கு வந்த திருமலைநாயக்கனுடைய ஆட்சியின் [கி.பி.1623-59] ஆரம்ப காலகட்டத்தில் நடைபெற்ற சில நிகழ்ச்சிகளையும் தெரிவிக்கின்றது. இதற்கு பிறகு நடைபெற்ற நிகழ்ச்சிகள் கோயிலொழுகின் இரண்டாம் பாகத்தில் விவரிக்கப் படும்.

**ஆழ்வார் ஆசார்யர் ஜீயர் திருவடிகளே சரணம்**



*நம்பெருமாள் சேர்த்தி - திருவரங்கம்*



ஸ்ரீரங்கநாச்சியார் - ஸ்ரீரங்கம்

உல்லாச பல்லவதபாலித ஸப்தலோகீ
நிர்வாஹ கோரகித நேம கடாக்ஷ லீலாம்,
ஸ்ரீரங்க ஹர்ம்யதல மங்கள தீப ரேகாம்
ஸ்ரீரங்கராஜ மஹிஷீம் ச்ரியமாச்ரயாம:

- ஸ்ரீகுணரத்நகோசம் 2

## முதல் திருச்சுற்று

## தர்மவர்மா திருச்சுற்று






## முதல் திருச்சுற்று

1, 2 ஜயன், விஜயன் ஆகிய இரு துவாரபாலகர்கள்.

3 ஸந்நிதிக்குள் நுழையும் திருவாசல், இதற்கு திருஅணுக்கன் திருவாசல், தங்கத்திருவாசல் ஆகிய பெயர்கள் வழங்கிவருகின்றன.

4 ஸ்ரீஆதிவராஹன்

5 விமான பிரதக்ஷிணம், இதுவே தர்மவர்மா திருச்சுற்றெனப்படும்

6 கணநாதர்

7 சுவர்ச் சித்திரங்கள்

8 யோக அனந்தன்

9 சுவர்ச்சித்திரங்கள், வண்ணப்படங்கள்

10 யோக நரசிம்மன்

11 நாபிநளிநர்

12 விஷ்ணுதுர்க்கை

13 விமானப் பிரதக்ஷிண முடிவு.

14 யோகநாராயணர்

15 காயத்திரிமண்டபம், அமுதுபாறை

16 கர்பக்ருஹ வாசல், இதைக் குலசேகரன்படி என்பார்கள் *(இந்த வாயிலின் அருகே சண்ட, ப்ரசண்டர்கள் திருவாயில் காக்கும் துவார பாலகர்கள். இவர்களுக்கு விக்ரஹ ப்ரதிஷ்டை கிடையாது. கர்பக்ருஹத்தின் உள்ளே வாஸ்து புருஷனும், க்ஷேத்ரபாலனும் அரூபியாக ஸேவை ஸாதிப்பர். கர்பக்ருஹத்தின் நுழைவாயிலில் த்வார லக்ஷ்மி எழுந்தருளப் பண்ணப் பட்டிருப்பாள்.)*

17, 18 திருமணத் தூண்கள் (திருமணல் தூண்கள்)

19 அரவணையில் பள்ளிகொண்ட தோற்றத்தில் பெரியபெருமாள், நம்பெருமாள், உபயநாய்ச்சிமார்கள், பஞ்சபேரர்கள் *(திருவரங்க மாளிகையார் உட்பட. பெரியபெருமாளின் திருவடி நிழலின் கீழ் சூடிக் கொடுத்த நாய்ச்சியாரும், வீணையும் கையுமான தோற்றத்தோடு திருப்பாணாழ்வாரும் எழுந்தருளியிருப்பதாக நினைத்துக்கொண்டு நம் பூர்வர்கள் பெரியபெருமாளை மங்களாசாஸனம் செய்தருளுவர்.)*

# இரண்டாம் திருச்சுற்று

## ராஜமஹேந்திரன் திருச்சுற்று

(இந்தத் திருச்சுற்றின் சுவர்களில் பல கல்வெட்டுகள் அமைந்துள்ளன)



## இரண்டாம் திருச்சுற்று

1,2 பத்ரன், சுபத்ரன் இவ்விருவரும் முன்புறத்தில் துவார பாலகர்கள்

3 நாழிகைகேட்டான் திருவாசல், மூன்றாம் திருச்சுற்றிலிருந்து இரண்டாம் திருச்சுற்றிக்குச் செல்லும் வழி

4,5 சங்கநிதி, பத்மநிதி பின்புறம் காவலர்கள்

6 இங்கிருந்து ராஜமஹேந்திரன் திருச்சுற்று தொடக்கம்

7 நம்பெருமாள், தாயார் திருவாபரணங்கள் வைக்குமிடம் தெக்கலறை (தெற்குக் கல் அறை) என்று பெயர்

8 கோயில் கருவுலம்

9 எடுபிடி சாமான்கள் இருக்குமிடம்

10 தோளுக்கினியான் அறை

11 பெருமாளுக்கான சாத்துபடி எனப்படும் சந்தனம் அறைக்குமிடம்

12 திருப்பரியட்டங்கள் வைக்குமிடம், இதன் பக்கத்து அறையிலே தான் காணிக்கையாக வந்த வஸ்திரங்கள், பாத்திரங்கள் வைக்கப் படுகின்றன

13 விஜயரங்க சொக்கநாத நாயக்கர் குடும்பம் சிலாரூபமாகக் காட்சி யளித்தல். இந்தச் சிலைகள் யானை தந்தங்களால் செய்யப்பட்டவை.

14 நம்பெருமாளுக்கான மாலை கட்டுமிடம்

15 சுக்கரவார பண்டாரி அறை, பெருமாளுக்கு புனுகுக்காப்பு, கஸ்தூரித்திலகம் தயாரிக்கும் இடம்

16 யாகசாலை

16a நிலைக்கண்ணாடி

17 தொண்டைமான் கொறடு

18 கிணறு

19 விஷ்வக்ஸேனர் என்றழைக்கப்படும் ஸேனைமுதலியார் ஸந்நிதி

19a பெரிய பெருமாள் பாதம்

19b நம்பிள்ளை காலக்ஷேபம் ஸாதித்த இடம்

20 கிளி மண்டபத்திற்குச் செல்லும் படிகள்.

21 சேரகுலவல்லி நாய்ச்சியார் ஸந்நிதி

22 துலுக்க நாய்ச்சியார் வண்ணச் சித்திர ஓவியம்

23 ரேவதி மண்டபம்



தங்க விமானத்தின் மேற்குப் பகுதியில் அச்சுதன்



தங்க விமானத்தின் வடக்குப் பகுதியில் அனந்தன்



தங்க விமானத்தின் கிழக்குப் பகுதியில் கோவிந்தன்

24 அர்ஜுன மண்டபம் அல்லது பகல்பத்து மண்டபம்

25 கிளி மண்டபம். இங்கிருந்து மேலே பார்த்தால் விமானத்திலுள்ள பரவாஸு தேவரை ஸேவிக்கலாம்.

26 நந்தகோபன் யசோதை கண்ணன் ஆகியோருடைய ஸந்நிதி

27 நிலைக்கண்ணாடி

28 ஸ்ரீநிவாஸர் திருவுருவப்படம்

29 திருவந்திக் காப்பு மண்டபம்

30 மேற்கு யாளிப்படிக்கட்டு. இங்கு கற்பூரப்படியேற்றம் நடக்கும் (மேலப்படி)

31 ஸ்ரீசைலேச தனியன் அவதரித்த இடம்

32 கிழக்கு யாளிப்படிக்கட்டு. இவ்வழியாக ஸந்நிதிக்குள் செல்வர் (கீழைப்படி. இந்த இடத்தில் தான் எம்பெருமானார் வீற்றிருந்து கோயில் கார்யங்களை மேற்பார்வையிடுவார். அதற்கு அடையாளமாக ஒரு வெள்ளைக்கல் பதிக்கப்பட்டிருக்கும். இந்த இடத்திற்கு தேவராஜன் கொறடு என்று பெயர்)

33 பாவை விளக்கு இருக்குமிடம். இவ்விடத்திற்குப் பொன்னரங்கம் என்று பெயர்

34 ஸந்நிதி கருடன்

35 கண்ணாடி அறை

36 சந்தன மண்டபம். ஏகாதசி முதலான பஞ்சபருவகாலங்களில் நம்பெருமாளுக்கு சந்தன மண்டபத்தில் திருமஞ்சனம் நடைபெறும்.

36a பரமன் மண்டபம் (தீபாவளி, யுகாதி ஆகிய இருநாட்களில் இந்தப் பரமன் மண்டபத்தில் நம்பெருமாள் எழுந்தருளுவார்)

37 விஶ்வரூபத்திற்கான பசு நிற்குமிடம்

38 ஸந்நிதிக்குள் செல்ல அமைக்கப்பட்டுள்ள திருவணுக்கன் திருவாசல்

# மூன்றாம் திருச்சுற்று

1,2 ஸ்ரீஸுதர்சனாழ்வான், கருடன், த்வாரபாலகர்கள்

3 ஆர்யபட்டாள் வாசல்

4 குலசேகரன் திருவீதி என்னும் மூன்றாவது சுற்று தொடங்கும் இடம்

5 திருப்பவித்திர உற்சவ மண்டபம்

6 ஹயக்ரீவர் /வராஹ ஸந்நிதி

7 சரஸ்வதி ஸந்நிதி

8 தசமூர்த்தி ஸந்நிதி

9 பழைய ஸரஸ்வதி பண்டாரம் (பழைய நூல் நிலையம்)

10 பழைய வாஹனஅறை

11 திருமங்கை மன்னன் திருநடை மாளிகை

12 துரை மண்டபம்

13 இராப்பத்து உத்ஸவத்தில் வேதவிண்ணப்பம் நடைபெறும் இடம்

14 பரமபதவாசல். இதன் கதவுகளைத் திறந்தால் இவ்வழியாகச் சந்திரபுஷ்கரிணி, தாயார் ஸந்நிதி ஆகிய இடங்களுக்குச் செல்லலாம். இதன் கதவுகள் இராப்பத்துத் திருநாட்களின் போது மட்டுமே திறந்திருக்கும்.

14a விரஜா நதி (கிணறு)

15 பழைய திருமடைப்பள்ளி-ஊறுகாய் மண்டபம்

16 அரவிந்த நாய்ச்சியார் திருமடைப்பள்ளி (பெரிய திருமடைப்பள்ளி)

17 அன்னமூர்த்தி, ஒற்றை கருடன் மண்டபம்

18 ஊஞ்சல் மண்டபம்

19 ஏணிவழியாக மேலே சென்று ஸ்ரீரங்க விமானம் - ப்ரணவாகார விமானத்தின் அருகே போய்ச் சேரலாம்.

20,21 நெய், பால் கிணறுகள்

22 கொடியேற்ற மண்டபம் (வெண்கலத்தேர்)

23 ஆஞ்சநேயர்

23a துலாபாரம் ஸமர்ப்பிக்கும் இடம் (இங்குதான் விருப்பண்ண உடையார், இரண்டாம் ஹரிஹரர் ஆகியோர் துலாபாரம் ஸமர்ப்பித்தனர்)

24 பலிபீடம்

25 கொடிமரம்

26 நாழிகைகேட்டான் திருவாசல். இரண்டாம் திருச்சுற்றுக்குச் செல்லும் வழி.

## நான்காம் திருச்சுற்று

## ஆலிநாடன் திருச்சுற்று



## நான்காம் திருச்சுற்று (ஆலிநாடன் திருச்சுற்று)

1,2 கங்கை, யமுனை துவாரபாலகிகள்

3 நான்காவது திருச்சுற்றாகிய ஆலிநாடன் திருவீதிக்குச் செல்லும் வழி. இதற்கு கார்த்திகை கோபுரவாசல் என்றும் பெயர் வழங்கி வருகிறது.

4 ஆலிநாடன் திருவீதி தொடங்குகிறது

5 ஸ்ரீ வேணுகோபாலன் ஸந்நிதி

6 நம்மாழ்வார் ஸந்நிதி, இங்கே மதுரகவியாழ்வாரும் திருமங்கை யாழ்வாரும் உடன் எழுந்தருளியுள்ளனர்.

7 நந்தவனம்

8 திருக்கொட்டாரம். செங்கமலவல்லித் தாயார், (தான்யலக்ஷ்மி) குருகு நாய்ச்சியார் ஆகியோருடைய ஸந்நிதிகள்

8a பாழடைந்த நிலையில் உள்ள நெற்களஞ்சியங்கள்

9 மேலைப்பட்டாபிராமன் ஸந்நிதி

10 முதலாழ்வார்கள் ஸந்நிதி

11 தீர்த்தக்கரை வாசுதேவப்பெருமாள் ஸந்நிதி

12 தந்வந்த்ரி ஸந்நிதி

13 ஐந்துகுழி மூன்றுவாசல், இவ்வழியே தாயார் ஸந்நிதிக்கும், ஐந்தாம் திருச்சுற்றுக்கும் செல்லலாம்.

14 சந்திரபுஷ்கரிணிக்குச் செல்லும் வழி

15 சந்தான கோபாலகிருஷ்ணன், ராதா ஆலிங்கன கிருஷ்ணன் ஸந்நிதிகள்

16 வ்யாஸ மகரிஷி ஸந்நிதி

17 வராஹப்பெருமாள், வரதராஜப் பெருமாள் ஸந்நிதிகள்

18 சந்திரபுஷ்கரிணி (தலவிருட்சமான புன்னைமரம் அருகில் உள்ளது)

19 பரமபதவாசல்

20 கோதண்டராமர் ஸந்நிதி

21 பரமபதநாதன் ஸந்நிதி

22 கோயில் வேத, காவ்ய பாடசாலை (தற்பொழுது இந்தப் பாடசாலை மூடப்பட்டுள்ளது)

23 கீழைப்பட்டாபிராமன் ஸந்நிதி

24 பூச்சாத்து மண்டபம் (வெளிக்கோடை மண்டபம்)



தங்க விமானத்தில் தெற்கு நோக்கி
எழுந்தருளியிருக்கும் பரவாஸுதேவர்

25 ஸ்ரீநிவாஸர் ஸந்நிதி

25a சமயநூலகம்

26 தவிட்டறைவாசல், இதன் வழியாக ஆயிரங்கால் மண்டபத்தை அடையலாம். ஐந்தாம் சுற்றுக்குப் போகும் வழி

27 போஜராமர் ஸந்நிதி

28 ருக்மிணி, ஸத்யபாமா கண்ணன் ஸந்நிதி

29 திருமழிசையாழ்வார், எம்பார் ஸந்நிதி

30 பெருமாள் அமுது செய்த பிரசாதங்கள் விற்குமிடம்

31 நாலுகால் மண்டபங்கள். ஒரு கம்பத்தில் கண்ணன் ஸந்நிதி, இவருக்கு எதிர்க்கம்பத்தில் வீபீஷணன் ஸ்ரீரங்க விமானத்தைப் பெற்றுச் செல்லும் காட்சி. (இந்த மண்டபங்களில் தான் முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் பலமுறை துலாபாரம் ஸமர்ப்பித்தான். இந்த இடத்தில் நான்கு மண்டங்கள் ஒன்றிற் கொன்று அருகில் அமைந்துள்ளதைக் காணலாம்.)

32 உள்துறை அதிகாரி அலுவலகம்

33 வாஹனங்கள் வைக்கப்படும் இடம்

34 சூர்யபுஷ்கரிணி

35 திருக்கச்சிநம்பி ஸந்நிதி

36 தோன்றமல்லர் நாயுடு சிற்பம்

37, 38 சுக்ரீவன், அங்கதன் துவாரபாலகர்கள்

39 கருடாழ்வார் ஸந்நிதி (பெரிய திருமேனியுடன் ஸேவை ஸாதிக்கும் கருடன்)

40 நாயக்கர் மண்டபம்

41 முதலியாண்டான் கொறடு

42 ஸந்நிதிக்குள் செல்லும் வழியாகும். ஆர்யபட்டாள் வாசல்

# ஐந்தாம் திருச்சுற்று

# அகளங்கன் திருச்சுற்று



## ஐந்தாம் திருச்சுற்று

1, 2 தர்மாத்யக்ஷன், நியந்தா துவாரபாலகர்கள்

3 நான்முகன் கோட்டை வாசல்

4 ஸ்ரீமத் நாதமுனிகள் ஸந்நிதி

5 யானைவாகன மண்டபம்

6 உள் ஆண்டாள் ஸந்நிதி

7 வேணுகோபாலன் ஸந்நிதி (ஹொய்சாள காலத்து சிற்பங்கள் நிறைந்துள்ளன).

8 அமுத(அமிர்த) கலச கருடன்

9 வாஹன மண்டபம்

10 அகளங்கன் திருவீதி தொடங்குமிடம்

11 சக்கரத்தாழ்வார் ஸந்நிதி (இவருக்குப் பின்புறம் யோகநரசிம்மரை வழிபடலாம்)

12 வஸந்த மண்டபம்

13 தாயார் ஸந்நிதி (ஸ்ரீரங்கநாய்ச்சியார் ஸந்நிதி)

14 ஆறாம் சுற்றுக்குப் போகும் வழி, வடக்கு வாசல் கோபுரம்

15 தேசிகர் ஸந்நிதி

16 கம்பராமாயண அரங்கேற்ற மண்டபம்

17 எடுத்த கை அழகிய சிங்கப்பெருமாள் ஸந்நிதி (மேட்டு அழகியசிங்கர்)

18 ஐந்துகுழி மூன்று வாசல்

19 வாசுதேவப் பெருமாள்

20 ஆயிரங்கால் மண்டபத்திற்குச் செல்லும் வழி, பெரியவாச்சான் பிள்ளை ஸந்நிதி

21 ஆயிரங்கால் மண்டபம்

22 மணல்வெளி

23 தவிட்டறைவாசல். இதன்வழியாக ஐந்தாம் திருச்சுற்றை அடைந்து பெரியபெருமாள் ஸந்நிதியையும் அடையலாம்.

24 வெள்ளைகோபுரம் வழியாக ஆறாம் சுற்று உள் திருவீதி. ஏழாம் சுற்று கலியுகராமன் திருவீதி ஆகியவற்றிக்குச்செல்லலாம்.



*பிள்ளைலோகாசார்யர்*

அத்திகிரி யருளாள ரனுமதியோன் வாழியே★

ஐப்பசியில் திவோணத் தவதரித்தான் வாழியே★

முத்திநெறிமறைத்தமிழால் மொழிந்தருள்வோன் வாழியே★

மூதரிய மணவாளன் முன்புதித்தான் வாழியே★

நித்தியம் நம்பிள்ளைபதம் நெஞ்சில் வைப்போன் வாழியே★

நீள்வசன பூடணத்தால் நியமித்தான் வாழியே★

உத்தமமாம் முடும்பைநக ருதித்தவள்ளல் வாழியே★

உலகாரியன் பதங்க ளூழிதொறும் வாழியே.

25 சேஷராயர் மண்டபம்

26 கோதண்டராமர் ஸந்நிதி

27 பிள்ளைலோகாசார்யர் ஸந்நிதி

28 பார்த்தசாரதி ஸந்நிதி

29 உடையவர் ஸந்நிதி

30 அருங்காட்சியகம்

31 பெரியகோயில் அலுவலகம்

32 திருப்பாணாழ்வார் ஸந்நிதி

33 விட்டல்கிருஷ்ணன் ஸந்நிதி

34 தொண்டரடிப்பொடியாழ்வார் ஸந்நிதி

35 கூரத்தாழ்வான், பட்டர், நஞ்சீயர் ஸந்நிதி

36 திருவந்திக்காப்பு மண்டபம்

37 ரங்கவிலாஸ மண்டபம்

38 பலிபீடம்

39 தீபஸ்தம்பம்

40 ஆஞ்சநேயர் ஸந்நிதி

41 சொக்கப்பனை கொளுத்தப்படும் இடம்

42 நாலாவது சுற்றான ஆலிநாடன் திருவீதிக்கு செல்லக்கூடிய கார்த்திகை கோபுர வாசல்.



*தொண்டரடிப்பொடி ஆழ்வார்*



*திருமழிசை ஆழ்வார்*

# ஆறாம் திருச்சுற்று

1,2 சக்கரம், சங்கம் என்னும் துவாரபாலகர்கள்

3 தெற்கு கட்டை கோபுரவாசல். இதன் வழியாகத்தான் இந்தச் சுற்று தொடங்குகிறது.

4 விக்ரமசோழன் திருவீதி தொடங்கும் இடம். இதை உள் திருவீதி என்றும், நாளும் விழவறாத் திருவீதி என்றும் அழைக்கப்படுகிறது. வலப்புறம் மதில், இடப்புறம் ஊரவர் மாளிகைகள்

5 யானைக் கொட்டடி

6 தைத்தேர்

7 உத்தராதிகள் சத்திரம்

8, 9 அர்ச்சகர்கள் திருமாளிகைகள்

10 உத்தமநம்பி திருமாளிகை

11 மேலைக்கட்டை கோபுரவாசல். இவ்வழியாக ஏழாம் சுற்று, தெப்பக் குளம் முதலிய இடங்களுக்குச் செல்லலாம்.

12 ராஜாபாதர் மூலை

13 தேசிகன் திருமாளிகை

14 எம்பார் திருமாளிகை

15 வடக்குக் கட்டை கோபுரவாசல், இவ்வழியாக ஏழாம் சுற்றுக்கும் வடதிருக்காவிரி, ஆண்டவன் ஆஶ்ரமம், அஹோபிலமடம் முதலியவைகளுக்குச் செல்லலாம்.

16 தாயார் ஸந்நிதிக்குச் செல்லும் வடபுறக் கோபுர வாசல்

17 ஸ்ரீரங்க நாராயண ஜீயர் மடம்

18 ஹயக்ரீவ வித்யாமந்திரம் (தற்போது இந்தப் பாடசாலை இயங்கவில்லை)

19,20 வேதவியாச பட்டர் திருமாளிகைகள்

21 ஸ்ரீமத் ஆண்டவன் ஸ்வாமி ஆஶ்ரமத்தின் கட்டடம்

22 பௌண்டரீகபுரம் ஆண்டவன் ஸ்வாமியின் நிர்வாகத்தில் உள்ள தேசின் ஸந்நிதி

23 ஆஞ்சநேயர் கோயில் (இங்கு பெரியபெருமாள் திருவடியுண்டு)

24 கீழக்கட்டை கோபுரவாசல். இதன் வழியாக ஏழாம் சுற்றுக்கும் பள்ளிக்கூடங்களுக்கும், ரயில் நிலையத்திற்கும் காட்டழகிய சிங்கர் ஸந்நிதிக்கும் செல்லலாம்.

25 வெள்ளைகோபுரம். இதன்வழியாக ஐந்தாம் சுற்றுக்கு வந்து ஆயிரங்கால் மண்டபத்தை அடையலாம். பிறகு தவிட்டறை வாசல் வரும். அவ்வழியாக நாலாம் சுற்றிலுள்ள கோயில் திருவாசலையும் அடையலாம்.

26 அஹோபில மடம்

27, 28 அரையர்கள் திருமாளிகைகள்

29 கோயில் கந்தாடை அண்ணன் திருமாளிகை

30 மணவாளமாமுனிகள் ஸந்நிதி

31 கந்தாடை ராமானுசமுனி மடம்

32 ஐந்தாம் சுற்றான நான்முகன் கோபுரவாசலை அடைகிறோம். இவ் வழியாக ரங்க விலாச மண்டபம் முதலியவைகளை அடையலாம்.

33 திருமதில் சுவர்



*ரங்கவிலாச மண்டபத்தின் முகப்புத் தோற்றம்*



தாயார் ஸந்நிதிக்குச் செல்லும் வழி

# ஏழாம் திருச்சுற்று

1,2 பூர்ணன், புஷ்கரன் என்னும் துவாரபாலகர்கள்

3 ஏழாம் சுற்றான தெற்குச் சித்திரை வீதி புறமுள்ள கட்டை கோபுர வாசல். இங்கிருந்துதான் ஏழாம் திருச்சுற்று தொடங்குகிறது.

4 இது கோபுரத்தின் எதிர்ப்பக்கமுள்ள நான்கு கால் மண்டபம். இதன் வலப்புறக் கம்பத்தின் கீழ் பாதாள கிருஷ்ணன் கோயில்

5 மாடமாளிகைசூழ் (கலியுகராமன்) திருவீதி தொடங்குகிறது.

6 கோயில் தங்கும் விடுதி

7 பாவனாசார்யர் திருமாளிகை

8 ஆரம்பப்பள்ளிக்கூடம்

9 தாத்தாசார்யர் திருமாளிகை

10 திட்டி மூலை, இதன் வழியாக அடையவளைந்தானுக்கும், வெளி ஆண்டாள் ஸந்நிதிக்கும் செல்லலாம்.

11 ஆஞ்சநேயர் கோயில்

12 மேலைசித்திரை வீதிக் கட்டை கோபுரவாசல் (சக்கிலியன் கோட்டை வாசல்) இவ்வழியாக அடையவளைந்தான், தெப்பக் குளம் முதலிய இடங்களுக்குச் செல்லலாம்.

13 ஆறாம் திருவீதிக்குச் செல்லும் கட்டைகோபுரவாசல்

14 திட்டிமூலை. இதன் வழியாக அடையவளைந்தானுக்குச் செல்லலாம்.

15 அர்ச்சகர்கள் திருமாளிகைகள்

16 ஸ்ரீஹயக்கிரீவரும், ஸ்ரீமந்நிகமாந்த மஹாதேசிகனும் எழுந்தருளி யுள்ள ஸந்நிதி

17 ஆயனார் திருமாளிகை

18 கபிஸ்தலம் ஸ்வாமி திருமாளிகை

19 பகுகுடும்பி ஸ்வாமி திருமாளிகை

20 பெரியகோயில் நிர்வாக அதிகாரியின் வீடு

21 ஏழாம் திருச்சுற்றான வடக்குச் சித்திரை வீதி கட்டை கோபுரம்.

22 ஆறாம் சுற்றான உள்திருவீதிக்குச் செல்லும் கட்டை கோபுரவாசல். இவ்வழியாகத் தாயார் ஸந்நிதிக்குச் செல்லலாம்.

23 திருவரங்கத்தமுதனார் திருமாளிகை

24,25 பாரமேச்வர ஸம்ஹிதை வெளியிட்ட வித்வான் உ.வே. கோவிந்தாசார்யர் ஸ்வாமியின் திருமாளிகை

26 திட்டிமூலை. இதன் வழியாக அடையவளைந்தான் கீழ்ப்பகுதிக்குச் செல்லலாம்.

27 கோரதம் (தேர்)

28 வேதம், ஆகமம், காவியம், பிரபந்தம் முதலியவற்றைக் கற்றுத்தர சிங்கமய்யங்கார் நிறுவிய குருகுலம்

29 இக்குருகுலத்தை நிறுவியவர் திருமாளிகையும், குருகுல மன்னர் விடுதியும்.

30 பிரஸித்தி பெற்ற ஸ்ரீவிலாசம் அச்சகம் இருந்த இடம்

31 பெண்கள் பள்ளிக்கூடம் 32,33 கிடாம்பியார் திருமாளிகைகள்

34 ஏழாம் சுற்றின் கீழைசித்திரை வீதிக்கோபுரம்

35 ஆறாம் திருவீதி கட்டைகோபுரம். இதன் வழியாக வெள்ளைக் கோபுரத்தை அடையலாம்.

36 சித்திரைத் தேர்

37 பெரியநம்பி திருமாளிகை

38 கூரத்தாழ்வான் திருமாளிகை

39 அப்பன் ரங்காசார்யர் திருமாளிகை

40 ஸ்ரீமுதலியாண்டான் திருமாளிகை

41 ஸ்ரீவானமாமலை மடம்

42 திட்டி மூலை. இதன் வழியாக அடையவளைந்தானுக்குச் செல்லலாம்.

43 மார்வாரி சத்திரம்

44 மாத்வர் மடம்

45 வாணிவிலாஸ் அச்சகம், முன்னாள் விசய நகர மன்னன் அரச மாளிகை என்பர் (தற்போது இந்தக் கட்டிடம் இடிக்கப்பட்டு விட்டது)

46 ஆறாம் சுற்றான தெற்கு உள்திருவீதிக் கட்டை கோபுர வாசல்.

# துணை நூற்பட்டியல்


| | |
|---|---|
| கருடவாகன பண்டிதர் | திவ்யசூரிசரிதம்.<br>உ.வே. திரு. வீ. சாமி அய்யங்கார் (தமிழாக்கம்)<br>ஹரி சமய திவாகரப் பிரசுரம்<br>ஹெச்.எஸ்.டி. பிரஸ், மதுரை, 1929 |
| கிருஷ்ணமாச்சார்யர் (ப.ஆ.) | கோயில் ஒழுகு, ஆனந்தா அச்சுக்கூடம்,<br>சென்னை. முதற்பதிப்பு, டிசம்பர் 1888 |
| அரங்கசாமி முதலியார் | கோயில் ஒழுகு<br>உமாபதி குருப்ரகாசம் அச்சுக்கூடம்,<br>ராயப்பேட்டை, சென்னை. |
| வைணவப் பண்டிதர்கள் | கோயில் ஒழுகு, ஆனந்தா<br>(முத்ராட்சர) சாலை, சென்னை, 1909 |
| கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் S. (ப.ஆ.) | ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவம்,<br>சரமோபாய நிர்ணயம், பெரியதிருமுடியடைவு.<br>1994 - மூன்றாம் பதிப்பு. |
| | திருவாய்மொழி பத்து பத்துக்களுக்குமான<br>ஈட்டு வ்யாக்யானங்கள். |
| | கோயிலொழுகு, முதற்பதிப்பு 1976 |
| | ப்ரபந்நாம்ருதம் (இரண்டு பாகங்கள்)<br>முதற்பதிப்பு 1983 |
| | பெரியதிருமொழி வ்யாக்யான விவரணம்<br>கி.பி.2003-ஆம் ஆண்டு பதிப்பு |
| | ஆசார்ய வைபவமஞ்ஜரி (இரண்டுபாகங்கள்), |
| | வார்த்தாமாலை, 2-ஆம் பதிப்பு கி.பி.2001 |
| | பூர்வாசார்ய ஸ்தோத்ரமாலா -<br>ஸ்ரீரங்கநாத ஸ்தோத்ரம் முதல் பாகம், |
| | திருநெடுந்தாண்டகம்<br>பெரியவாச்சான் பிள்ளை - அருளிச்செய்த<br>வ்யாக்யானத்தின் விவரணம், |
| | தனியன் வ்யாக்யானம், பிள்ளைலோகம் ஜீயர் |
| | திருப்பாவை வ்யாக்யானம் (1991) |
| | 3B. புத்தூர் அக்ரஹாரம், திருச்சி - 17. |

| | |
|---|---|
| ஸ்தானீகம் நரசிம்மய்யங்கார் S. | உத்தமநம்பி வைபவம், கல்யாண் பிரஸ், திருச்சிராப்பள்ளி, 1912 ஸ்ரீரங்கம் கோயில் தத்துவம் இலட்சுமி பிரிண்டர்ஸ் ஒர்க்ஸ் தேர்நிலை, சேலம். |
| ஸ்தானீகம் பார்த்தசாரதி ஐயங்கார், | உறையூர் நாச்சியாரும் பங்குனி உத்தரமும் (இலட்சுமி காவியம் - தமிழாக்கம்) வீரராகவ ராமானுஜகூடம் வெளியீடு |
| | கைசிக மகாத்மியம் (தமிழாக்கம்), வைகுண்ட ஏகாதசி, ஆர்.ஆர். பிரிண்டிங் ஒர்க்ஸ், பெரம்பூர் பாரக்ஸ் அஞ்சல், டிசம்பர் 1937. |
| | ஸ்ரீரங்க மாஹாத்மியம் (தமிழாக்கம்) இம்பீரியல் பிரஸ், திருச்சி, ஐப்பசி 1935 |
| | திவ்யப்பிரபந்த அகராதி, தேவஸ்தான பத்திரிகை வெளியீடு ஸ்ரீரங்கம், கி.பி. 1958. |
| கோவிந்தாசார்யர் (ப.ஆ.) | பாரமேசுவர சம்ஹிதை ஸ்ரீவிலாஸம் பிரஸ், ஸ்ரீரங்கம் 1953 |
| ஒட்டக்கூத்தர் | மூவர் உலா (1992) தக்கயாகப்பரணி, ஊ.வே.சாமிநாதையர் நூல்நிலையம், பெசன்ட் நகர், சென்னை-90. |
| சதாசிவ பண்டாரத்தார், T.V., | பிற்காலச் சோழர் சரித்திரம், மூன்றாம் பதிப்பு. அண்ணாமலைப் பல்கலைக்கழகம், 1967 |
| அரங்கராஜன், இரா. பேராசிரியர் | காரேய் கருணை இராமானுசன், 28A, பழங்காநத்தம் அக்ரஹாரம், மதுரை-4, முதற்பதிப்பு 2004 |
| சுப்பிரமணியன், பூ. | மெய்க்கீர்த்திகள், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், டி.டி.டி.ஐ. தரமணி, சென்னை-113, கி.பி.1983 |
| கந்தாடை திருவேங்கடாசார்யார் | ராமானுஜார்ய திவ்யசரிதை, ஸத் ஸம்ப்ரதாய க்ரந்த ப்ரகாசந ஸமிதி, ஸ்ரீரங்கம், மறுபதிப்பு கி.பி.2000 |
| கண்ணன், R. | ஸ்ரீராமானுஜ வைபவம், 91, துளசிங்க முதலி தெரு, சென்னை-11 பதிப்பு கி.பி.1988 |

| | |
|---|---|
| அண்ணன் ஸ்ரீநிவாஸாசார்யர் கோ.க.வா (ப.ஆ) | கோயில்அண்ணன் திருமாளிகை-குருபரம்பராப்ரபாவம், 206, கீழைஉத்திரவீதி ஸ்ரீரங்கம், திருச்சி-6, கி.பி.1983 |
| ஸ்ரீரங்கநாராயண ஜீயர் மடத்து சிஷ்யர்களால் தொகுக்கப்பட்டது | ஸ்ரீரங்கநாராயணஜீயர் கோயில் கைங்கரிய சூசிகை, இலட்சுமி விலாஸ் அச்சுக்கூடம் - இரண்டாம் பதிப்பு 1925 |
| சண்முகசுந்தரம்,க. | 'திருவரங்கம் பெரியகோயில் திருவிழாக்களும் ஒழுகலாறுகளும்', 2002, 'சமயபுரம் மாரியம்மன் திருக்கோயில்' 1989, கந்தமேஸ்திரியார் பதிப்பகம், 123, கீரைக்காரத் தெரு, திருவரங்கம்-6, |
| விசுவநாதன், நா. | சப்தம் என்னும் தாளச்சொற்கட்டு, தஞ்சை சரசுவதி மகால் வெளியிடு, 1997 |
| சேதுராமன், என். | பாண்டியர் வரலாறு, அருளுடைச் சோழமண்டலம், ராமன் & ராமன் பிரைவேட் லிட் பிடாரிகுளம் ரோடு கும்பகோணம், பதிப்பு கி.பி.1989. |
| தமிழ் அகராதித் தொகுப்புகள் I-VI | சென்னைப் பல்கலைக்கழக வெளியீடு, கி.பி.1928-34 |
| சாந்தி சாதனா ட்ரஸ்ட் | வைணவ உரைநடை வரலாற்று முறைத் தமிழ்ப் பேரகராதி, Volume - I, II, III. 125, சேமியர்ஸ் சாலை, சென்னை - 600 028. |
| குடவாயில் பாலசுப்ரமணியன் | தஞ்சாவூர் நாயக்கர் வரலாறு, தஞ்சாவூர் மகாராஜ சரபோஜியின் சரசுவதி மஹால் நூலகம் |
| | கோனேரிராயன், அஞ்சனா பதிப்பகம், தஞ்சை. |
| சத்தியநாதய்யர் R. | History of Madurai Nayakas |
| சதாசிவ பண்டாரத்தார் T.V. | திருமலைநாயக்கர் வரலாறு |
| ஸ்ரீவேணுகோபாலன் | திருவரங்கன் உலா, லக்ஷ்மிஸ்ரீ பதிப்பகம் 848,91ஆவது தெரு, 13ஆவது செக்டர், கே.கே.நகர், சென்னை - 78. |
| ஜயங்கொண்டார் | கலிங்கத்துப்பரணி, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம். |

ராமன் K.V. — பாண்டியர் வரலாறு, தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை.

ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ கிருஷ்ணமாசார்யர் அ. (ப.ஆ) — ஸ்ரீரங்கராஜஸ்தவம், பூர்வசதகம், உத்தரசதகம் 1976ஆம் ஆண்டு பதிப்பு.
சுந்தரபாஹு ஸ்தவம்
வெளியீடு கிரந்தமாலா, காஞ்சிபுரம், பதிப்பித்த ஆண்டு கி.பி.1970

பாஞ்சஜன்யம் மாத இதழ்கள்

ஸ்ரீபராசரபட்டர் அருளிச்செய்த நம்பெருமாள் திருமஞ்சனக் கட்டியங்கள்

ஸ்ரீரங்கம் அத்யயனோத்ஸவம்

உறையூர் நாச்சியாரும் பங்குனி உத்ஸவமும்

ஸ்ரீரங்கம் கோயில் உத்ஸவ நாட்காட்டி 2003-2004,

தத்வத்ரயம் - (பிள்ளைஉலகாரியன்- ஸ்ரீமணவாள மாமுனிகளுடைய வ்யாக்யானம்,)

பெரியாழ்வார் திருமொழி வ்யாக்யானம்,

திருவிருத்தம், (வாதிகேஸரி அழகியமணவாளச் சீயரது ஸ்வாபதேச உரை,நம்பிள்ளை ஈடு) நாலாயிர திவ்யப்பிரபந்தம்,

காட்டழகிய சிங்கர் மலர்.

மணவாளமாமுனிகள் அருளிச்செய்த உபதேசரத்னமாலை (பிள்ளைலோகம்ஜீயர் வ்யாக்யானம்) 2001.

ஸ்ரீவசனபூஷணம் (ஆயி, மணவாளமானிகள் ஆகியோரது வ்யாக்யானங்கள்) 2001

ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ, 214, கீழஉத்தரவீதி, ஸ்ரீரங்கம் - 6.

சி.கோவிந்தன் சி.கோ.தெய்வநாயகம் — கரந்தைச் செப்பேடுகள், மதுரை காமராசர் பல்கலைக்கழகம்.

ஸ்ரீநிவாஸஐயங்கார் K. — கலியன் அருள்பாடு (ரகஸ்ய க்ரந்தங்கள்) 3B,புத்தூர் அக்ரஹாரம், திருச்சி. 1999

ராமாநுஜம் V.V. — யதீந்த்ர ப்ரவணப்ரபாவம் (2000)

ஸ்ரீரங்கப்ரியா பதிப்பகம், 68, T.P.கோயில் தெரு திருவல்லிக்கேணி, சென்னை.

சுஜாதா S. — இப்புத்தகத்தில் சேர்க்கப்பட்டுள்ள படங்கள் ஸ்ரீரங்கத்துக் கதைகள் (உயிர்மை பதிப்பகம்) என்ற சிறுகதைத் தொகுப்பிலிருந்து எடுக்கப் பட்டவை. சித்திரங்களைத் தீட்டியவர் தேசிகன்.

டேனியல் ஸ்மித் & வெங்கடாச்சாரி, கே.கே.ஏ. — பாஞ்சராத்திர நூல் விளக்கம், சென்னை Hoe & Co. 1967

**Hari Rao V.N.** — **'Koil Olugu'** The Chronicles of Srirangam Temple with Historical Notes Rochouse & Sons, Madras

**'History of Srirangam Temple', & The Srirangam Temple Art and Architec ture** Sri Venkateswara University Historical Series, Sri Venkateswara University Tirupati.

**K.A.Neelakanta Sastri** — The CŌḶAS, University of Madras,2000.

**Dr.Krishnaswamy Iyengar** — Early History of Vaishnavism in South India.

**V. Vijaya Raghavacharya (Ed.)** — Inscriptions of Saluva Narasimha's Times (T.T.D) - 1998.

Annual Reports of Epigraphy, Published by Dept. of Archaeology, from time to time.

**Director General A.S.I.** — South Indian Inscriptions, Vols.1 to 26

| | |
|---|---|
| **Srinivasan P.R. Narasimha Swamy H.K. Ramesh, K.V. (Editors)** | Archaeological Survey of India South Indian Inscriptions Vol.XXIV, (Inscriptions of the Ranganathasvami Temple, Srirangam) Published by: the Director General Archaeological Survey of India New Delhi - 110 011. |
| **Daniel Smith, H.** | A descriptive Bibliography of the printed Texts of the Pancaratragama Vol. I and Vol. II. |
| **Parthasarathy T.S.** | The Koil Olugu (History of Srirangam Temple) Published by Tirumala Tirupati Devasthanam, Tirupati, July 1954. |
| **Raman K.V.** | Sri Varadaraja Swami Temple, Kanchi. Abhinav Publications, New Delhi. (1975) |
| **Ramesan, N.** | The Tirumala Temple, Tirumala Tirupati Devasthanams, Tirupati, 2nd Edition, 1999. |
| **Robert Sewell** | A Forgotten Empire (Vijayangar), Asian Educational Services, New Delhi, Madras. (1988) |
| **B.Suryanarain Row** | A History of **VIJAYANAGAR** The never to be forgotten Empire. Asian Educational Services, New Delhi, Madras. (1905) |
| **Domingos Paes & Fernao Nuniz** | **THE VIJAYANAGAR EMPIRE CHRONICLES OF PAES AND NUNIZ** Asian Educational Services, New Delhi, Madras. (1905) |




# சொற்பிழைதிருத்தம்

| பக்கம் | பத்தி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 67 | 2 | தில்லை சித்திர கூடத்தில் | தில்லைதிருச்சித்ர கூடத்தில் |
| 91 | மூலம் | பெரிதிருவடி | பெரியதிருவடி |
| 92 | 1 | இக்கோயிலிருந்து | இக்கோயிலிலிருந்து |
| 105 | 3 | திருத்தேரினை பொன்னாலே | திருத்தேரினைப் பொன்னாலே |
| 113 | 1 | கொரடு | கொறடு |
| 178 | 1 | நிலமாண்யம் | நிலமான்யம் |
| 187 | 2 | அன்றிலிருந்து காலத்திலிருந்து | அன்றிலிருந்து |
| 214 | 1 | பட்டையம் | பட்டயம் |
| 244 | 1 | பன்னிரண்டு | பனிரண்டு |
| 256 | 4 | கல்வெட்டுஒன்று | கல்வெட்டு ஒன்று ஆர்யபட்டாள் வாசலில் உள்ளது. |
| 267 | 1 | ப்ரதிவாதிபயங்கரம். அண்ணங்கராசாரியர் | ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் |
| 277 | 2 | ஈஶ்வர்களைப் | ஈஶ்வரர்களை |
| 281 | 2 | பிரச்சந்த | பிரச்சந்ந |
| 286 | 2 | உத்துறை விதியில் | உள்துறை வீதியில் |
| 298 | 2 | குறிப்புகள் | குறிப்புகள்: |
| 299 | 3 | பரிபாலிப்பதில் | பரிபாலிப்பது, |
| 305 | 1 | எண்ணிக்கையில் | எண்ணிக்கை |

| | | | |
|---|---|---|---|
| 311 | 1 | செய்யப்பட்டுள்ளர் | செய்யப்பட்டுள்ளனர் |
| 322 | 1 | உத்ரஆபோசனம் | உத்தரஆபோசனம் |
| 366 | 2 | பதிகாச்ரமத்திற்கு | பதரிகாச்ரமத்திற்கு |
| 374 | 1 | பன்னிரண்டாம் | பனிரண்டாம் |
| 391 | 2 | இராமாகுசருக்குப் | இராமானுசருக்குப் |
| 391 | 3 | அவைதிகள் | அவைதிகர்கள் |
| 401 | 2 | பட்டர்கணியனூர்ச் சிறியாச்சான் | பட்டர், கணியனூர் சிறியாச்சான் |
| 421 | 3 | பொருள்கள் | பொருள் |
| 421 | 3 | புருஷகாரமாக பெரிய பெருமானை | புருஷகாரமாகப் பெரிய பெருமாளை |
| 464 | 2 | ஸ்ரீராங்கராஜநாதன் | ஸ்ரீரங்கராஜநாதன் |
| 468 | 1 | P»P®" | கலகம்" |
| 495 | தலைப்பு | நாகமங்கலம் அண்ணப்ப வுடையவர் | நாகமங்கலம் அண்ணப்ப வுடையார் |
| 555 | 3 | ஆலிநாடான் | ஆலிநாடன் |
| 571 | தலைப்பு | சும்பயராஜா | கம்பயராஜா |
| 610 | 2 | இராமானுசமுயைப் | இராமானுசமுனியைப் |
| 661 | படம் | திருமழிசையாழ்வார் | திருப்பாணாழ்வார் |






திருவேங்கடமுடையான்



காஞ்சி
வரதராஜப்பெருமாள்



மேலக்கோட்டை
திருநாராயணன்



நம்மாழ்வார்



இராமாநுசர்



ஸ்ரீ மணவாளமாமுனிகள்